பெற இயலவில்லை.

எனினும் தொடர்ந்து நம் சிறுவர் சிறுமியர், இளைஞர்களுடன் உறவாடும் ஒவ்வொரு தருணமும், பாலியல் கல்வி, வாழ்க்கைக் கல்வி முதலியன பாடத் திட்டத்தின் ஒரு பகுதியாக ஆக்கப்படவேண்டிய அவசரத்தை நான் உணர்ந்தேன். நம் குடும்பங்கள் நம் குழந்தைகளை நடத்தும் விதம் பற்றிய சுயவிமர்சனம் உடனடியாக தேவைப்படுவதையும் புரிய முடிந்தது. என் வயதில் மூன்றில் ஒரு பங்குக்கும் கீழுள்ளவர்கள் பலரும் என்னுடன் நெருக்கமாக நம்பிக்கையோடு பலவற்றைப் பகிர்ந்துகொள்ளும் போதெல்லாம், நம் குடும்ப அமைப்பின் மாபெரும் ஓட்டைகள் பளிச்சிட்டன.

நம் சமூகத்தில் இருக்கும் பல சிறப்புகளின் வேர்களைப் போலவே, பல கோளாறுகளின் வேர்களும் நம் குடும்பத்தில், குடும்ப அமைப்பில், குடும்பங்களின் வாழ்க்கை முறையில், குடும்பத்தில் நிலவும் உறவுகளின் தன்மையில் இருப்பதாக நான் எப்போதும் உணர்ந்திருக்கிறேன்.

வெகுஜன இதழில் பாலியல், வாழ்க்கைக் கல்வி பற்றிய தொடர் ஒன்றை எழுதவேண்டுமென்று பல வருடங்களாகவே நான் யோசித்துக்கொண்டிருந்தேன். காம உணர்ச்சியைத் தூண்டும் சினிமா கவர்ச்சிப் படங்களைப் பக்கம் பக்கமாக வெளியிடுவதில் கூச்சமே இல்லாத இதழ்கள், உடற்கூறு படங்களுடன் ஒரு தொடரை வெளியிட அஞ்சி அஞ்சி சாகும் சூழல்தான் பெருமளவும் இன்னமும் இருக்கிறது. முதல் வகைப் படங்களுக்கு முகம் சுளிக்காத நம் குடும்பங்கள் மருத்துவப் படங்களினால் பண்பாடே கெட்டுப் போய்விட்டதாகப் புலம்பும் அபத்தம் எரிச்சலூட்டுகிறது.

2007ல் விகடனில் முக்கிய பொறுப்புகளை வகித்த என் இளம் சகாக்கள் அசோகன், கண்ணன், நிர்வாக இயக்குநர் பா.ஸ்ரீனிவாசன் மூவருடனும் தொடர்ந்து விவாதித்ததில் இந்தத் தொடர் வெளிவருவது சாத்தியப்பட்டது.

பெருவாரியான வாசகர்களிடமிருந்து இந்தத் தொடருக்குக் கிடைத்த அழுத்தமான வரவேற்பு என்னை இந்த நொடியில் நினைத்தாலும் நெகிழச் செய்கிறது. யார் என்ன சொன்னாலும் இந்தத் தொடரை தயவுசெய்து பாதியில் நிறுத்திவிடாதீர்கள் என்று என்னிடம் போனில் கெஞ்சும் தொனியில் உரிமையோடும்

பதற்றத்தோடும் பேசிய பல இளம் அன்னையரின் குரல்கள் இன்னமும் என் செவிக்குள் ஒலிக்கின்றன. 'ஏன் உருப்படாத அரசியல்வாதிகள் பற்றி எழுதி உங்கள் நேரத்தையும் சக்தியையும் இதுவரை வீணாக்கிக் கொண்டிருந்தீர்கள்? இது போன்ற துறைகளில் இன்னும் அதிகம் எழுதியிருக்கலாமே', என்று செல்லமாகக் கடிந்துகொண்ட வாசகர்கள் பலர். 'ஓ' பக்கங்களை விட அதிகமான வாசகர்களை எனக்குப் பெற்றுத் தந்த தொடர் இது.

இந்த தொடரில் எடுத்துக் கொண்டிருக்கும் விஷயங்கள் ஒரு நூலில் முடிவன அல்ல. இன்னும் பல பாகங்கள் இதைத் தொடர்ந்து எழுத வேண்டிய அவசியம் இருக்கிறது. நான் குறைந்தபட்சம் இன்னும் ஒரு பாகமேனும் எழுதுவேன். இவை தொடர்பாக மேலும் மேலும் தேடிப் பிடித்து படித்து அறிவதற்கு, பல அறிஞர்கள், ஆய்வாளர்கள், எழுத்தாளர்கள் எழுதிய ஏராளமான புத்தகங்கள் உள்ளன. அவர்களையெல்லாம் நான் தேடி சென்றதன் விளைவே இந்தத் தொடர். வாசகரிடம் தொடர்ந்து இத்தகைய தேடலுக்கான ஆசையைத் தூண்டுவதே என் நூலின் நோக்கம்.

தமிழகப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பாடத் திட்டத்தின் ஒரு பகுதியாக வாழ்க்கைக் கல்வி, பாலியல் கல்வி ஆகியவை இடம் பெறவேண்டும்; ஒவ்வொரு கல்வி நிறுவனத்திலும் சிறுவர்/ இளைஞர்களுக்கான முழு நேர ஆலோசகர்கள் (கவுன்செலர்கள்) நியமிக்கப்பட வேண்டும். ஆசிரியப் பயிற்சியிலேயே கவுன்செலிங் பயிற்சியும் இணைக்கப்பட வேண்டும். நம் குடும்பங்களில் அனைவருக்குமிடையில் அன்பும் அறிவும் சமத்துவ உறவும் சுடர் விடும் சூழல் மலரவேண்டும். இந்தக் கனவுகளை நனவாக்குவதை நோக்கி ஒரே ஒரு அடி எடுத்து வைக்கவேனும் என் இந்த நூல் பயன்பட்டால் பெரிதும் மகிழ்வேன்.

பிறந்த மாதத்தின் உற்சாக மன நிலையில்... அன்புடன்

ஞாநி

# ஞாநி (1954)

பத்திரிகை, நாடகம், தொலைக்காட்சி, சினிமா, இளைஞர் – பெண்கள் – சிறுவர் மனிதவள மேம்பாடு ஆகிய துறைகளில் ஈடுபட்டு வரும் ஞாநியைக் கடந்த 35 வருடங்களாக இயக்கி வருவது சக மனிதர்கள் மீது இருக்கும் அன்பும், மனித சமத்துவத்துக்கான ஆவலும்தான்.

ஞாநி இதுவரை எழுதி வெளிவந்துள்ள நூல்கள்: பழைய பேப்பர், மறுபடியும், கண்டதைச் சொல்லுகிறேன், பலூன், மீடியா உறவுகள், சமூகப் பாலினம், மீடியாவும் கல்வியும், கேள்விகள், மனிதன் பதில்கள், அய்யா, தவிப்பு, நெருப்பு மலர்கள், அயோக்கியர்களும் முட்டாள்களும், பேய் அரசு செய்தால், எதிர்காலத்தை கேள்விக்குறியாக்கும் இன்றைய அரசியல், ஒரு விசாரணை, 'எண்' மகன், வட்டம், சண்டைக்காரிகள்.

ஞாநி இயக்கியவை: விண்ணிலிருந்து மண்ணுக்கு, பிக்னிக், காதலென்ன கத்தரிக்காயா, வேர்கள், அய்யா (தொலைக்காட்சித் தொடர்கள்) பரீக்ஷாவுக்காக 30க்கு மேற்பட்ட நாடகங்கள், ஒற்றை ரீல் இயக்கத்துக்காக திருமதி ஜேம்ஸ் இப்போது என்ன செய்ய வேண்டும்?, உள்ளேன் அய்யா (திரைப்படங்கள்)

தொடர்புக்கு: gnani@gnani.net

இந்தத் தொடரை
துணிவுடனும் நம்பிக்கையுடனும்
வெளியிட்ட
ஆனந்தவிகடன்
கண்ணன்
அசோகன்
பா.ஸ்ரீனிவாசன்

வாழ்க்கைக் கல்வித் துறையில்
என் ஈடுபாட்டைத் தீவிரப்படுத்திய
என் சக பயணி
ஏ.எஸ்.பத்மாவதி

மற்றும்
வருங்கால தமிழ்க் குழந்தைகளை
ஆரோக்கியமான
ஆண்–பெண் உறவுகளை
நோக்கி அழைத்துச் செல்ல இருக்கும்
இளம் ஜோடிகள் அனைவருக்கும்

**இந்த நூல் காணிக்கை**

# உள்ளே...

அத்தியாயம் 1

# குடும்பம் என்பது என்ன?

அறிந்தும், அறியாமலும்?

எதை? எதையெல்லாம்?

யார்? யார்யார்?

இந்தத் தொடர் எதைப் பற்றி? யாருக்காக? ஏன் இப்போது?

இதையெல்லாம் விளங்கிக் கொள்ள 2007ல் ஒரே ஒரு மாதத்துக்குள் தமிழகத்தில் நடந்த மூன்று நிகழ்ச்சிகளைப் பார்ப்போம்.

- கிரிக்கெட் மட்டை வாங்கித் தர மறுத்த அப்பாவைக் கொன்றான் மகன்.

- என்னை விபசாரத்தில் ஈடுபடும்படிக் கட்டாயப்படுத்திய என் அப்பா அம்மா மீது நடவடிக்கை எடுங்கள் என்று கோரினார் இளம் நடிகை.
- கின்னஸ் சாதனை செய்வதற்கு தனக்கு போதுமான ஆதரவு கிடைக்கவில்லை என்று தற்கொலை செய்துகொண்டான் ஒரு சிறுவன்.

இந்த நிகழ்ச்சிகள் உணர்த்துவது என்ன?

ஒவ்வொரு சம்பவத்தைப் பற்றி படித்ததும், அது தொடர்பாக பல கேள்விகள் நம் மனதில் எழுகின்றன. போயும் போயும் ஒரு கிரிக்கெட் மட்டைக்காக அப்பாவை மகன் கொல்வானா? கிரிக்கெட் பேட் கிடைக்காததற்கு ஆத்திரமடையும் சிறுவன் கால்பந்து கிடைக்காவிட்டாலும் இதே போல ஆவேசப்பட்டிருப்பானா?

ஒரு உயிரை பலி வாங்குவதற்கு கிரிக்கெட் மட்டை சின்ன விஷயமா? பெரிய விஷயமா? உங்களுக்கும் எனக்கும் கிரிக்கெட் மட்டை சின்ன விஷயமாகத் தோன்றலாம். அந்த சிறுவனுக்குத் தோன்றவில்லையே. சரி. வேறு எந்த பெரிய விஷயத்துக்கு அப்பாவை மகன் கொன்றிருந்தால். நியாயம்தான் என்று ஒப்புக் கொண்டிருப்போம்? படிக்க வைக்கவில்லை என்பதற்கு? அப்படியானால் எத்தனை குழந்தைத் தொழிலாளர்கள் கொலைகாரர்களாக மாறவேண்டியிருக்கும்? அதை நாம் ஏற்போமா?

சினிமாவில் நடிகை என்றால் நிறைய பணம், நிறைய புகழ் என்ற மயக்கத்தில் இருக்கும் நமக்கு, சொந்த மகளை பெற்றோர் விபசாரத்துக்குக் கட்டாயப்படுத்துவதாக ஒரு நடிகை புகார் செய்யும்போது என்ன தோன்றுகிறது?

ஒரு சிறுவனின் அடிப்படைக் கடமை என்ன? படிக்கும் பருவத்தில் படிப்பது. அதைவிட முக்கியமானதாக ஒரு கின்னஸ் சாதனையை அவன் கருதத் தூண்டியது எது? துவளச் செய்தது எது? கின்னஸுக்காக உயிர் விடத் துணிந்த அவனுக்கு, படிப்பதற்காக உயிர் வாழ்வது அவசியம் என்று தோன்றாதது எதனால்?

எங்கோ ஏதோ சிக்கல் இருக்கிறது என்பது நம் எல்லாருக்கும்

தெரிகிறது. ஆனால், அந்தச் சிக்கல் என்ன என்றும், அதன் சரியான உருவம் இன்னதென்றும் தெளிவாகப் பிடிபடவில்லை. யானை பார்த்த குருடர்கள் போல சிக்கலை விதவிதமாகவும் துண்டு துண்டாகவும் புரிந்துகொள்கிறோம். சிக்கல், யானை சைஸில் பிரமாண்டமாக இருப்பது மட்டும் நிஜம். மற்ற படி, அதை அறிந்தும் அறியாமலுமே வாழ்கிறோம்.

உதாரணத்துக்கு எடுத்துக்கொண்ட மேற்படி மூன்று நிகழ்ச்சிகளிலும் ஒரு பொதுவான அம்சம் இருக்கிறது. அது என்ன?

குடும்பம்!

அப்பா - அம்மா - மகன் - மகள் - அதன் பிறகுதான் கிரிக்கெட், சினிமா, கின்னஸ் இத்யாதிகள் எல்லாம்! சொல்லப்போனால், வெளி உலகத்தைப் புரிந்துகொள்ள நம்மை முதலில் தயார்செய்வதே நம் குடும்பம் தான். அது செய்யத் தவறியதையும், செய்யமுடியாததையும் அடுத்தபடியாக கல்விக்கூடங்களில் பெறமுயற்சிக்கிறோம். அவையும் தராதவற்றை வெளி உலக அனுபவங்களிலிருந்து பெற முயற்சிக்கிறோம். இந்த வெளி உலகத்தில் மீடியாவும் நண்பர்களும் அடக்கம்.

குடும்பம், பள்ளி, நண்பர்கள், மீடியா என்ற நான்கும் நம்மை ஒரே திசையில் அழைத்துச் செல்வதில்லை என்பதுதான் நடைமுறை நிஜம். சில நேரங்களில் ஒன்றுபடுகின்றன; பல நேரங்களில் மாறுபடுகின்றன. நடுவில் நாம்!

இப்படிப்பட்ட சூழ்நிலையில் நம் காதில் ஒலிக்கும் வாசகங்களில் இந்த முரண்பாடுகளைத் தரிசிக்கலாம். ‘அவன் சகவாசமே சரியில்ல!’, ‘வீட்டுக்குப் போகவே பிடிக்கலே!’, ‘த்ரிஷாவைப் பார்த்துக்கிட்டே உட்கார்ந்திருக்கலாம் போலிருக்கு!’

முரண்பாடுகள் முற்றும்போதெல்லாம் ஒரு பதில் வழக்கமாக நமக்குச் சொல்லப்படுகிறது... ‘என்ன ஆனாலும் குடும்பம்தான் முக்கியம். குடும்பத்தை மீறி எதுவும் செய்யாதே! எதுவும் சிந்திக்காதே!’

குடும்பம் என்பது என்ன? அப்பா, அம்மா, குழந்தைகள், ரத்த உறவுகள். அவ்வளவுதானா?

இல்லை. குடும்பத்தில் இரு வகைகள் இருக்கின்றன.

ஒன்று, இயற்கையில் நமக்கு அமைந்த குடும்பம். இரண்டாவது நாம் நமக்கென்று தேர்ந்தெடுக்கும் குடும்பம்.

முதல் குடும்பத்தை நாம் தேர்ந்தெடுக்கவில்லை என்பது கசப்பான, ஆனால் மறுக்கமுடியாத உண்மை. எந்த சாதி, எந்த மதம், எந்த மொழி, எந்த நாடு, ஏழையா, பணக்காரரா, நடுத்தரமா என்ற எதையும் நாமாகத் தேர்ந்தெடுத்துப் பிறப்பதில்லை. பிறப்பு என்பது ஒரு விபத்து. பிறக்கும்போதே நம் மீது சாதி, மதம், மொழி, தேசம், வசதி/ வசதியின்மை எல்லாமே சுமத்தப் பட்டுவிட்டன.

இந்தச் சூழ்நிலையில் நாம் தேர்வு செய்ய மிஞ்சியிருப்பது என்ன?

எப்படி வாழப்போகிறோம் என்பது தான். 'இன்றைய என் குடும்பத்தின் நிறை-குறைகளிலிருந்து என்ன கற்றுக் கொள்ளப்போகிறேன்' என்பதுதான். 'நாளை என் குடும்பத்தை நான் உருவாக்கும்போது, அதை எப்படி வடிவமைக்கப் போகிறேன்' என்பது தான். எனக்கான நண்பர்கள் யார், எனக்கான மீடியா எது, எனக்கான அரசியல் எது, எனக்கான பண்பாடு எது... என இவை எல்லாமே என் தேர்வுக்கு மிஞ்சி இருப்பவைதான்.

இந்தத் தேர்வைச் செய்யும்போது மறுபடியும் முரண்பாடுகள் வரத்தான் செய்கின்றன. வளர்ப்பால் என்னைத் தன் போலவே ஆக்க முயற்சிக்கும் (பிறப்பால் எனக்கு அமைந்த) குடும்பத்துக்கும், என் தேர்வுகளுக்கும் இடையே முரண்பாடுகள் வரத்தான் செய்யும்.

இந்த முரண்பாடுகள்தான் சமூகத்தில் தனி மனித வன்முறையாகவும், கூட்டு வன்முறையாகவும் வெடிக்கின்றன. இன்னும் வெடிக்காத குண்டுகள்தான், 'எங்கம்மா பெரிய டார்ச்சர்!', 'பெத்த மனம் பித்து! அவன் நன்மைக்குதானே சொல்றேன். புரிஞ்சுக்க மாட்டேங்கறானே!' என்ற முணுமுணுப்புகளாக எச்சரிக்கை விடுத்துக்கொண்டு இருக்கின்றன.

இவற்றைப் பற்றித்தான் இந்தத் தொடர்.

யாருக்காக?

குடும்பத்தின் ஒவ்வொரு உறுப்பினருக்காகவும்தான். அப்பா, அம்மா, மகள், மகன், மாமா, சித்தப்பா, சித்தி அத்தனை பேருக்காகவும்தான்! அன்பு, காதல், காமம் வரை எல்லாவற்றையும் அறிந்தும் அறியாமலும் வாழ்ந்து கொண்டு இருக்கும் நம் எல்லாருக்காகவும்தான்!

அறிந்தும் அறியாமலும்... அ...அ!

தமிழுக்கு மட்டுமல்ல... தமிழ்நாட்டில் நாம் பயன்படுத்தும் பல சொற்களுக்கும் முதல் எழுத்து 'அ'. அம்மா, அப்பா, அன்பு, அதிகாரம், அலட்சியம், அக்கறை, அகந்தை, அடக்கம், அல்லல், அறிவு, அலசல், அனுமதி, அவசியம், அர்த்தம், அபத்தம், அமைதி... பட்டியல் நீண்டுகொண்டே போகும். ஒரு கணம் யோசியுங்கள். இந்த 'அ' வரிசைச் சொற்கள் அத்தனையின் பொருளுமே நாம் அறிந்தும் அறியாமல் இருப்பவை தான் அல்லவா!

'இல்லையில்லை. எல்லாமே எனக்குத் தெரியும். எவ்ரிதிங் இஸ் ஃபைன் வித் திஸ் வேர்ல்ட்!' என்று நினைப்பவர்கள் இந்தத் தொடரிலிருந்து ஒதுங்கிக்கொள்ளுங்கள் என்று சொல்லமாட்டேன். நெருப்புக் கோழிபோல மணலில் தலை புதைத்து யாரும் வாழ முடியாது.

17 வயதுப் பெண்ணுக்கு முகமெல்லாம் பரு. 'காரணம், அவளுக்கு ஏதோ ஆண் சக வாசம் இருப்பதுதான். எனவே கல்லூரிப் படிப்பே தேவையில்லை' என்று தன் மகளைக் கல்லூரியிலிருந்து நிறுத்திய அப்பாவை உங்களுக்குத் தெரியுமா? தெரியாது இல்லையா?

சொந்த மகளைத் தன் இச்சைக்கு இணங்கக் கட்டாயப்படுத்தும் அப்பாவிடம் இருந்து மகளைக் காப்பாற்றப் போராடிக்கொண்டு இருக்கும் அம்மாவை உங்களுக்குத் தெரியுமா? தெரியாது இல்லையா?

அவர்களை நீங்களும் தெரிந்துகொள்வது அவசியம்.

அப்படிப்பட்ட ஒரு பெண் மாயா (பெயர் மாற்றப்பட்டுள்ளது). அறிவுக்கூர்மையும் அபிலாஷைகளும் நிரம்பிய கல்லூரி மாணவி. வயது 19. அவளுடைய பிரச்னை என்ன? கேரியர் கைடன்ஸுக்காக அவள் சந்தித்த ஓர் 50 வயது உயர் அதிகாரியுடன் ஏற்பட்ட நட்பை, அவர் படுக்கையில் கொண்டு போய் முடித்தார். ஏற்கெனவே திருமணமான அந்த அதிகாரிக்கு இப்போது மாயா அலுத்துவிட்டது. கேரியர் கைடன்ஸ் தேடும் இன்னொரு பெண் அவருக்குக் கிடைத்துவிட்டாள். ஆனால், மாயாவால் அவரை மறக்கவும் பிரியவும் முடியவில்லை.

மாயாவுக்கு இது ஏன் நடந்தது? அவளுக்கான தீர்வுதான் என்ன?

இதுபோல், இன்னொரு வீட்டில் இப்போது துள்ளித் திரிகிற 5 வயது சாயாவுக்கு நாளை மாயாவின் நிலை வராமல் இருக்கவும், நம் வீட்டு 20 வயது அழகேசன் நாளை அந்த உயர் அதிகாரி போல் ஆகாமல் இருக்கவும் தடுப்பு மருந்து ஏதும் உண்டா?

உங்கள் கருத்துக்களை எனக்கு எழுதுங்கள். அவற்றில் தகுந்தவற்றை இந்தத் தொடர் மூலமாகவே நம் எல்லோருடனும் பகிர்ந்துகொள்வேன்.

தொடர்ந்து, நம்மை நாமே இந்தத் தொடரில் சந்தித்து உரையாடுவோம்.




# மன்மோகன்சிங் அழமாட்டாரா?

**வா**ய்விட்டு அழுதால், நோய் விட்டுப் போகும்!

அ - தமிழ் மொழியின் முதலெழுத்து.

தமிழ் கற்பதற்கு முன்பே நாம் கற்ற முதல் மொழி - அழுகை!

வாழ்க்கையின் தொடக்கமும் அழுகை. அங்கே தொடங்கும் நம் வாழ்க்கை அழுகையிலேயே முடிகிறது. 'பிறக்கும்போதும் அழுகின்றாய், இறக்கும்போதும் அழுகின்றாய்... ஒரு நாளேனும் கவலையில்லாமல் சிரிக்க மறந்தாய் மானிடனே' என்று வருந்தி அழுகிறான் கவிஞன்.

குழந்தையாக இருந்தபோது நமது அழுகை அனிச்சைச் செயல். அறியாமலே அழுதோம். முதல் அழுகை, மூச்சு விடுவதற்கு நுரையீரல்களை ஒழுங்குபடுத்திக்கொள்ள! அடுத்தடுத்த அழுகைகள் பசியை அறிவிக்க!

வளரும்போதும், வளர்ந்த பிறகும் அழுவதை, அறிந்து அழுகிறோமா? எப்போது அழலாம், எப்படி அழலாம், எங்கே அழலாம் என்பதையெல்லாம் எப்படித் தீர்மானிக்கிறோம்? நாமே தீர்மானிக்கிறோமா, அல்லது மற்றவர்கள் நமக்காகத் தீர்மானிக்கிறார்களா?

யோசித்துப் பாருங்கள்... பொது வாழ்க்கையில் இருக்கும் பிரமுகர்கள் யாரையாவது அழுகிற தோற்றத்தில் நாம் பார்த்திருக்கிறோமா? கருணாநிதியோ ஜெயலலிதாவோ மன்மோகன்சிங்கோ சோனியாவோ வாழ்க்கையில் அழுததே இல்லையா என்ன? ஆனால், அழுகிற பிம்பம் அவர்களைப் பற்றி மக்கள் மனதில் என்ன கருத்தை ஏற்படுத்தும் என்ற எச்சரிக்கையோடு அவர்கள் வாழ வேண்டியிருக்கிறது. அதனால்தான், அபூர்வமாக வைகோவோ கபில்தேவோ மேடையிலோ, டி.வி. நிகழ்ச்சியிலோ பலர் அறிய அழுகிறபோது, அதுவே ஒரு வரலாற்று நிகழ்ச்சியாகி விடுகிறது.

நம் குடும்பங்களில், வீட்டுக்குள் யார் எப்போது அழுதோம் என்று யோசித்துப் பாருங்கள். அப்பா அழுதது நினைவிருக்கிறதா? அம்மா? அக்கா? தம்பி? நீங்கள்..?

பெண்கள் எதற்கெடுத்தாலும் அழுவார்கள். ஆண்கள் எதற்கும் அழமாட்டார்கள்... அழக் கூடாது! இது நம் புத்தியில் பதிக்கப்பட்டு இருக்கிற கற்பிதம்.

ஏன் அப்படி? அழுகை என்பது பலவீனம் என்ற கருத்துதான் இதற்கெல்லாம் அடிப்படை. அதையொட்டி பெண் பலவீனமானவள்; ஆண் வலிமையானவன். பலவீனமானவள் அழலாம், வலியவன் அழக் கூடாது என்று கற்பிதங்கள் நீளுகின்றன.

இதன் விளைவு... பெண்களின் அழுகை அவர்களுடைய

பலவீனமாகவே புரிந்துகொள்ளப்படுகிறது. சில சமயங்களில் அது வருத்தமும் அல்ல, பலவீனமும் அல்ல; கோபத்தின் வெளிப்பாடு என்று புரிந்து கொள்ள எனக்குக் கொஞ்ச காலம் ஆயிற்று. 'அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர்' என்று வள்ளுவன் சொல்வது, கோபத்தின் வெளிப் பாட்டைத்தான்! கோபம் வந்தால் அதை வெளிப்படுத்த ஆண் போல் வன்முறையில் இறங்கத் தயங்கு வதால், ஆற்றாமையில் அழுகிறாள் பெண்.

அழுகைக்கு நாம் வைத்திருக்கும் இன்னொரு அ(ன)ர்த்தம் தோல்வி. தோற்றால் அழுவதும், ஜெயித்தால் எக்களிப்பதும் இயல்பென்று நாம் நம்புகிறோம். ஆழ்ந்து யோசித்தால்... எல்லா வருத்தங்களுக்கும் அழ வேண்டும் என்று அவசியமில்லை; எல்லா மகிழ்ச்சிகளுக்கும் எம்பிக் குதிக்கவும் தேவையில்லை!

எப்போது அழலாம், எதற்கெல்லாம் அழலாம் என்பதைப் பிறர் தீர்மானிக்கத் தேவையில்லை. நமக்காக நாம் தான் தீர்மானிக்க வேண்டும். நடைமுறையில் இதைத் தப்புத் தப்பாகத் தீர்மானிப் பதில்தான் அதிகச் சங்கடங்களை நமக்கு நாமே ஏற்படுத்திக் கொள்கிறோம்.

அதே சமயம், நம் அழுகையை மற்றவர்கள் எப்படி எதிர்கொள்கிறார்கள், அடுத்தவர் அழுகையை நாம் எப்படி எதிர்கொள்கிறோம் என்பதைப் பற்றிய தெளிவுகளும் நமக்குத் தேவைப்படுகின்றன.

உதாரணமாக, தியேட்டரில் ஒரு படம் பார்த்துக்கொண்டு இருக்கும்போது உணர்ச்சி பூர்வமான ஒரு காட்சி நம்மை நெகிழவைக்கிறது. என்ன செய்கிறோம்..? வீட்டில் டி.வி. தொடர் பார்க்கும்போதுகூட சிலர் நெகிழ்ந்து அழுகிறார்கள். அதில் பெண்களே அதிகம். அதே காட்சியைப் பார்த்து தானும் நெகிழ்ச்சி அடையும் ஆண்கள், பெண்ணைப் போல பகிரங்கமாக அழுவதில்லை. கண்ணில் நீர் துளிர்க்கும் முன்பே, வேறு ஏதோ வேலை இருப்பது போல சட்டென்று எழுந்து போய்விடுகிறார்கள்.

இருட்டு நிரம்பிய தியேட்டரில் எழுந்து போக வழியில்லை. கலங்கிய கண்களை, முகம் துடைப்பது போன்ற பாவனையில் ஆண் துடைத்துக்கொள்கிறான். பெண் இரு இடங்களிலும் பகிரங்கமாக அழுதுவிடும் வாய்ப்பே அதிகம்.

மற்றவர்கள் முன் அழாமல் இருந்தால்தான், தான் ஆண்மையுள்ளவன் என்று ஆண் நிஜமாகவே நம்ப ஆரம்பித்துவிடுகிறான். அதனால், அவன் அழ வேண்டிய சந்தர்ப்பங்களில்கூட அழாமல் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு, உள்ளுக்குள்ளேயே அந்த வலியைப் புதைத்துவைக்கிறான். அசலாக அந்த வலி புதைக்கப்படுவதில்லை; தேவையற்ற மன அழுத்தமாக விதைக்கப்படுகிறது.

அழுகை என்பதும் சிறுநீர் கழிப்பது போலத்தான்! சிறுநீரை வெளியேற்றாமல் அடக்கி அடக்கி வைத்துக்கொண்டே இருந்தால் எப்படி உடல் பாதிக்கப்படுமோ, அதே போலத்தான் அழுகையை அடக்கி வைத்திருப்பதும் மனதைப் பாதிக்கும். மகன் இறந்ததற்கு வாய் விட்டு அழாத ஆண் பேராசிரியர் பாத்திரம் மன அழுத்தத்தால் புத்தி பேதலித்துப் போயி ருப்பதை 'மொழி' படத்தில் சித்திரித்திருந்தார்கள்.

வாழ்க்கையில் பல சந்தர்ப்பங்களில், 'இந்தத் தருணத்தில் நான் அழுதிருக்கக் கூடாது; கோபம் தான் கொண்டிருக்க வேண்டும் என்று உணராமல் அழும் பெண், கோபப்பட்டு இருந்தால் தனக்குக் கிடைத்திருக்கக்கூடிய உரிமைகளைக் கூட, அழுததால் பெற்ற சலுகைகளாக நம்பத் தொடங்குகிறாள்.

இந்தச் சூழ்நிலையிலிருந்து பெண்ணுக்கும் விடுதலை வேண்டும்; ஆணுக்கும் வேண்டும். வாய் விட்டு அழும் உரிமை, இப்படி அழுதால் நம்மைப் பற்றி மற்றவர்கள் என்ன நினைப்பார்கள் என்ற கவலை இல்லாத தெளிவு இரண்டுமே வேண்டும்.

உண்மையில் அழுகை என்பது என்ன? ஒரு வெளிப்பாடு. மகிழ்ச்சி போல வருத்தம் என்பதும் ஓர் உணர்ச்சி. மகிழ்ச்சியை வெளிப்படுத்தப் பல வழிகள் இருப்பது போல, வருத்தத்தை வெளிக் காட்டப் பல வெளிப்பாடுகள் உள்ளன. அவற்றில் ஒன்று அழுகை. அவ்வளவு தான்!

தொலைக்காட்சி நிகழ்ச்சியில் பாடி ஜெயிக்க முயற்சித்து, தேர்வாகாமல் 'தோற்று'ப்போகும் குழந்தைகள் அழுவதையும் அப்படியே காட்டுவது இப்போதைய ஃபேஷனாகியிருக்கிறது.

அந்தக் காட்சியைப் பார்க்கும் நாம் அது பற்றி என்ன நினைக்கிறோம்? அந்தக் குழந்தையைப் பற்றி என்ன நினைக்கிறோம்? எல்லாவற்றுக்கும் மேலாக, அந்தக் குழந்தை அதைப் பற்றி என்ன நினைக்கிறது? அதே வயதுடைய இதர குழந்தைகள், அழும் குழந்தையின் வகுப்பு நண்பர்கள் அந்த அழுகையைப் பற்றி என்ன நினைக்கிறார்கள்?

குழந்தையின் மன வளர்ச்சியில் அழுகையின் பங்கு என்ன என்று தொடர்ந்து விவாதிப்போம். அதைத் தொடரும் முன்னால், சில கேள்விகளுக்குப் பதில்களை எழுதிப் பார்த்துக் கொள்ளுங்கள்.

## இன்றைய ஹோம் ஒர்க்:

*01.* நினைவு தெரிந்து, என் முதல் அழுகை எப்போது?

*02.* அப்போது எதற்காக அழுதேன்?

*03.* இப்போதும் அதே காரணங்களுக்கு அழுவேனா?

*04.* மாட்டேன் என்றால், வேறு என்ன செய்வேன்?

*05.* இப்போதும் அழுவேன் என்றால், ஏன் அப்படி?

*06.* கடைசியாக நான் அழுதது எப்போது? எதற்காக?

*07.* நான் அழ விரும்பி, அழாமல் அடக்கிக் கொண்டது எப்போது?

*08.* இனி அழ நேரும் சந்தர்ப்பங்களில், நான் என்ன செய்ய விரும்புகிறேன்?

*09.* அழுகிற ஒருவரைப் பார்த்தால், நான் என்ன செய்கிறேன்? என்ன செய்ய விரும்புவேன்?

*10.* யாருடைய அழுகை என்னை பயப்படுத்துகிறது?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 3

# முதல் முத்தம்

ஒவ்வொருவரையும் தங்கள் அழுகை அனுபவங்களை நினைத்துப் பார்க்கச் சொன்னபோது, யாருடைய அழுகை நம்மை மிகவும் பயப்படுத்துகிறது என்று ஒரு கேள்வியை முன்வைத்தேன். இதற்கான பதில் ஆளுக்கு ஆள் நிச்சயம் வேறுபடும். ஆனால், பொதுவாக நம் எல்லோரையுமே பயப்படுத்தும் அழுகை, குழந்தைகளுடையதுதான். ஏனென்றால், அந்த மொழி நமக்கு எளிதில் புரிவதில்லை.

மொழி பேசக் கற்றுக்கொள்வதற்கு முன், குழந்தையின் மொழியாக சிரிப்பும் அழுகையும் மட்டுமே இருக்கின்றன. பசியால்

அழுகிறது, வலியால் அழுகிறது, தூக்கம் போதாமல் அழுகிறது, பரிச்சயமானவர்களின் தொடுதலின் மகிழ்ச்சியில் சிரிக்கிறது என்கிற அளவில் குழந்தையின் அழுகையையும் சிரிப்பையும் எளிமைப்படுத்திப் புரிந்துவைத்திருக்கிறோம்.

ஆனால் பசி இல்லை, வலி இல்லை, தூக்கமின்மையின் எரிச்சல் இல்லை என்ற சூழலில் ஒரு குழந்தை அழுதால், பயப்படவேண்டி இருக்கிறது. ஏன் அழுகிறது என்பது புரியாததால் ஏற்படுகிற பயம் அது.

பயங்கள் எல்லாமே, ஒன்றைப் புரிந்துகொள்ளாததால் ஏற்படுபவைதான். ஒரு விஷயம் புரிந்துவிட்டால், அதைப் பற்றிய பயங்களும் விலகிவிடும். இது எல்லா நேரமும் பொருந்தும் என்றாலும், விதிவிலக்கும் உண்டு. அதாவது, புரிந்ததாலேயே பயம் வருவதும் உண்டு!

எடுத்துக்காட்டாக, ஓர் உணவைச் சாப்பிட்டு முடித்த பிறகு, அதில் நச்சுப் பொருள் கலந்திருந்தது தெரியவந்தால், அப்போதுதான் பயம் ஆரம்பிக்கும். ஒருவரைப் பற்றிக் கடுமையாக இன்னொருவரிடம் பேசி முடித்த பிறகு, இவருக்கு அவர் மிகவும் வேண்டியவர் என்று தெரியவந்தால், இனி என்ன ஆகப் போகிறதோ என்ற பயம் தொடங்குகிறது அல்லவா?

புரியாமல் வரும் பயம், புரிந்த பின் வரும் பயம், இந்த இரண்டு பயங்களுக்கும் வித்தியாசம் இருக்கிறது. முதல் பயம், உணர்ச்சி சார்ந்தது. இரண்டாவது பயம், அறிவு சார்ந்தது. முதலாவது, அறியாமையால் வந்தது. அடுத்தது, அறிந்ததால் வந்தது. ‘அஞ்சுவது அஞ்சாமை பேதமை’ என்றாரே வள்ளுவர், அந்த அச்சம் அறிந்ததால் வருகிற, வர வேண்டிய அச்சம்.

அறியாமையால் பயம் வருவது போலவே, அறியாமையால் பயம் இல்லாத நிலைமைகளும் உண்டு. ஒரு நகைச்சுவைக் காட்சியில், புடலங்காய் என்று நினைத்து பாம்பைக் கையில் பிடித்துக்கொண்டு வீர நடை நடப்பார் ஜனகராஜ். அத்தகைய பயமற்ற நிலைகள் தற்காலிகமானவைதான். அறிந்தபின் பயப்படாமல் இருப்பது பேதமையாகி விடும்.

சிறியவர்களிடம் சொல்ல, பெரியவர்களுக்குப் பிடித்தமான அறிவுரை வாக்கியங்களில் ஒன்று... ''எல்லாம் எங்களுக்குத் தெரியும். நீ இப்ப இருக்கியே, அந்த வயசுல இருந்துட்டுதான் நாங்கள்லாமும் இப்பிடி வந்திருக்கோம். நாங்க தாண்டி வந்த ரூட்டுதான் அது!''

உண்மையில் நமக்கு நம்முடைய குழந்தைப் பருவத்தைப் பற்றித் தெரியுமா? என்னதான் மூளையைக் கசக்கினாலும், நான்கு வயதுக்கு முன் நடந்தது எதுவும் நினைவுக்கு வருவதில்லை. வராது என்பதுதான் அறிவியலாளர் கருத்து.

முதல் நான்கு வருடங்கள் நாம் எப்படி இருந்தோம் என்பது நமக்குத் தெரியாது. அதனால்தான் புத்தம் புதுசாகப் பிறந்த குழந்தையின் ஒவ்வொரு அசைவையும் நாம் ஆவலோடு பார்க்கிறோம். அது வளரும் ஒவ்வொரு கட்டத்தையும் பார்த்துப் பார்த்து ரசிக்கிறோம். உண்மையில், அப்போது நாம் நம் குழந்தைப் பருவத்தை இன்னொரு முறை பார்வையால் வாழ்ந்து பார்க்கிறோம்.

பிறந்தது முதல் அடுத்த பத்து ஆண்டுகள் ஒரு குழந்தைக்கு ஏற்படும் அனுபவங்கள்தான், வாழ்நாள் முழுவதும் அந்த நபரின் இயல்பைத் தீர்மானிப்பவையாக இருக்கின்றன. எப்படிப்பட்ட அனுபவங்களை நாம் குழந்தைகளாகப் பெற்றோம்? எப்படிப்பட்ட அனுபவங்களை நம் குழந்தைகளுக்குக் கொடுத்துக்கொண்டு இருக்கிறோம்? இந்த இரண்டு பெரிய கேள்விகளுக்கும் ஏராளமான பதில்கள் நம்மிடம் உள்ளன. அவற்றை நமக்குள் நாமே அசை போட்டுப் பார்ப்பது அவசியம்.

குழந்தைகளுக்கு முத்தம் கொடுப்பது நம் வழக்கம். அது குழந்தைகளுக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும்... சிலர், கன்னத்தில் முத்தமிடுவார்கள்; சிலர், நெற்றியில் முத்தமிடுவார்கள்; சிலர், உதட்டில் முத்தமிடுவார்கள். அப்படிச் செய்யாத பெற்றோரும் உண்டு. பெரும்பாலான பெற்றோர்களுக்குத் தங்களைத் தவிர வேறு எவரும் தங்கள் குழந்தைகளுக்கு உதட்டில் முத்தமிடுவது பிடிக்காது. குழந்தைக்கு உதட்டில் முத்தம் தருவதால் கிருமிகள் தொற்றும் ஆபத்தைப் பற்றிய பயம் ஒரு காரணம்.

இன்னொரு காரணம், முத்தத்தைப் பற்றிய கலாசாரக் கருத்துக்கள். உதட்டில் முத்தம் தருவதைக் காதலுடனும், அதைவிட அதிகமாகக் காமத்துடனும் மட்டுமே நாம் இணைத்துப் பார்க்கிறோம். ரயில் நிலையம், விமான நிலையம் போன்ற பொது இடங்களில் வழியனுப்பும் வேளையில் ஒருவருக்கொருவர் கன்னத்தில் முத்தமிட்டால் அதைப் பார்த்து ஏற்றுக்கொள்கிறவர்கள்கூட, அப்போது உதட்டில் முத்தமிட்டால் சமூகத்தின் கற்பு பறிபோய்விட்டதாகப் பதறுவார்கள். காரணம், உதட்டு முத்தம் இங்கே காமத்தின் அடையாளமாக மட்டுமே கருதப்படுவதுதான்.

வாழ்க்கைக் கல்வி வகுப்புகள் நடத்தும் என் நண்பர்களிடம், பல பள்ளிகளில் டீன்-ஏஜ் வயதில் இருக்கும் பல சிறுமிகளும் சிறுவர்களும், 'உதட்டில் முத்தம் கொடுத்தால் கர்ப்பம் ஏற்பட்டுவிடுமா?' என்று பயம் கலந்த கேள்வியாகக் கேட்டுக்கொண்டு இருக்கிறார்கள்.

பள்ளிக்கூடங்கள் இருக்கட்டும்... கல்லூரி மாணவி ஒருவர் மிகுந்த கவலையுடன் கேட்ட கேள்வி இது... "இதற்கு முன்பு நான் காதலித்த இளைஞன் என்னை ஒரே ஒரு முறை முத்தமிட்டான். இருவருக்கும் பொருந்தி வராது என்று உணர்ந்து நாங்கள் பிரிந்துவிட்டோம். இப்போது நான் கல்யாணம் செய்ய இருப்பவரிடம், பழைய முத்த விஷயத்தைச் சொல்லலாமா, கூடாதா?"

எத்தனை விசித்திரமான பயம்! குழந்தைப் பருவ முத்தங்களுக்கு மீண்டும் வருவோம்.

எனக்கு என் முதல் முத்தங்கள் எதுவும் நினைவில் இல்லை. ஆனால், ஒரு முத்தம் இன்னும் மறக்க முடியாமல் இருக்கிறது. 41 வருடங்களுக்கு முன், நான் ஏழாம் வகுப்பில் படித்துக்கொண்டு இருந்தபோது, தினமும் எங்கள் வகுப்புக்குச் சீக்கிரமே போய்விடுவது என் வழக்கம். அப்படிச் சீக்கிரம் சென்ற ஒரு நாள், பத்தாவது படிக்கும் ஒரு சீனியர் மாணவன் என்னை மறித்து, நான் அலற அலற என் உதட்டில் ஓர் அழுத்த மான முத்தம் கொடுத்தான். அது எனக்குப் பிடிக்காத அனுபவம் என்பதால், அந்த சீனியர் பெயர்கூட இன்னும் நினைவில் தங்கியிருக்கிறது.

ஒரே ஒரு நாள்தான் அது நடந்தது. ஆனால், அடுத்த ஒரு வாரத்துக்கு அது என்னைப் பாதித்தது. மறுநாள் சீக்கிரமாகப் பள்ளிக்குச் செல்லப் பயம். அவன் மறுபடியும் வந்தால்..? ஆனால், அந்த சீனியர் மறுபடியும் என்னிடம் வரவில்லை.

இது போல, குழந்தைகளிடம் அத்துமீறும் பெரியவர்கள் எப்போதும் சூழ்ந்திருக்கிறார்கள். அண்மையில் மத்திய அரசின் மகளிர் குழந்தை நலத்துறை ஏற்பாட்டில் எடுக்கப்பட்ட ஆய்வின்படி, இந்தியாவில் மொத்தக் குழந்தைகளில் 53 சதவிகிதம் பேர், அதாவது பாதிக்கு மேற்பட்டவர்கள் இப்படிப்பட்ட அதிர்ச்சிகளுக்கு உள்ளாகிக்கொண்டு இருக்கிறார்கள். இதை நீங்கள் படிக்கும் நேரத்தில்கூட, எங்கோ ஒரு குழந்தையிடம் அத்துமீறல் நடந்துகொண்டு இருக்கிறது.

இந்த அத்துமீறல்களைச் செய்பவர்களில் மிகப் பெரும்பாலோர், குழந்தையின் நெருக்கமான சுற்றுப்புறத்தில் இருப்பவர்கள்தான் என்கிறது ஆய்வு. பக்கத்து வீட்டு நபர், பள்ளி ஆசிரியர், வாகன ஓட்டுநர், மாமா, சித்தப்பா, அத்தை, சித்தி, அண்ணன், அக்கா, அம்மா, அப்பா என்று பட்டியல் நீள்கிறது.

இதில் குழந்தையின் மனதில் ஏற்படும் பாதிப்பு என்ன? தொலை நோக்கில் நீடிக்கக்கூடிய பாதிப்பு என்ன? ஏதோ ஒரு முறை நிகழும் சம்பவத்தின் பாதிப்பிலிருந்து குழந்தை உடனடியாக வெளிவந்துவிடும். தனக்கு நம்பிக்கையும் பாதுகாப்பும் தரக்கூடியவர்கள் உடன் இருப்பதாக அது உணர்ந்தால், இது சுலபம். நீண்ட காலப் பாதிப்புகளும் இராது. ஆனால், அத்துமீறல் சம்பவங்கள் அடிக்கடி நிகழ்ந்தாலும் சரி, ஒரேயடியாக தனக்குப் பாதுகாப்பற்ற சூழல்தான் இருப்பதாக குழந்தை வருந்தத் தொடங்கினாலும் சரி, அது தொடர் தாக்கத்தை ஏற்படுத்தக்கூடும் என்கிறார்கள் நிபுணர்கள்.

குழந்தையின் உதட்டில் வலுக்கட்டாயமாக முத்தமிடுவது மட்டுமல்ல அத்துமீறல். ஒரு போட்டியில் அது தோற்றுப்போய் மனம் உடைந்து தன் வருத்தத்துக்கு வடிகால் தேடுகிற காட்சியைப்

பலர் அறியக் காட்டுவதும் அத்துமீறல்தான். இதைச் செய்யும் டி.வி. சேனல்கள் மட்டுமல்ல, இதை ஒரு பொருட்டாகக் கருதாமல் அனுமதிக்கும் பெற்றோர்களும்கூட குழந்தையின் உரிமையில் அத்துமீறுவதாகவே கருதப்பட வேண்டும். ஏனென்றால், தான் அழுவதை டி.வி-யில் காட்டும்போது, அதைப் பார்க்கும் குழந்தைக்கு நீண்ட கால பாதிப்புக்கான வாய்ப்புகள் உள்ளன. தன்னைப் பற்றிய அவமான உணர்ச்சிக்கு அது வித்திடுகிறது.

தான் அழுவதை டி.வி-யில் பார்த்துவிட்டு தன் சக வயதுக் குழந்தைகள் கேலி செய்வார்களோ என்று மன உளைச்சல் அடைந்தாலும், அதுவும் குழந்தையின் சுயமரியாதையைத் தொலைநோக்கில் பாதிக்கும் என்பது நிபுணர்கள் கருத்து.

ஒரு குழந்தைக்குத் தன் மீதான அத்துமீறலை உணரவும், தடுத்துக் கொள்ளவும் ஆற்றல் தேவைப்படு கிறது. அதைத் தருவது, குழந்தைகள் மீது அன்புள்ள எல்லோரின் கடமை!

எது ‘குட் டச்’, எது ‘பேட் டச்’ என்று குழந்தைக்குப் புரிந்து விட்டால், யாருடைய ‘டச்’சானாலும், அதைத் தானே கையாள அந்தக் குழந்தை கற்றுக் கொள்ளும்.

கற்றுத் தருவோமா..?

## இன்றைய ஹோம் வொர்க்

01. உங்கள் பயம் எதைப் பற்றி?
02. எதற்குப் பயப்படுகிறீர்களோ அதைப் பற்றித் தெரியாததால் பயப்படுகிறீர்களா? தெரிந்துவிட்டதால் பயப்படுகிறீர்களா?
03. பயத்திலிருந்து வெளியே வர முடியாமல் உங்களைத் தடுப்பது எது?
04. உங்கள் முதல் முத்தம் எது?
05. அது இனிப்பான நினைவா? கசப்பான நினைவா?
06. அதன் தாக்கம் இப்போதும் உங்கள் வாழ்க்கையில் இருப்பதாகத் தோன்றுகிறதா?

07. குழந்தையாக இருந்தபோது, உங்களிடம் யாரேனும் அத்துமீறல் செய்தார்களா? யார்?

08. எந்தக் குழந்தையாவது உங்களிடம் தன்னிடம் ஒருவர் செய்த அத்துமீறலைச் சொல்லியதுண்டா?

09. சொன்னால், அந்தக் குழந்தைக்கு எப்படி நம்பிக்கை தருவீர்கள்?

10. எந்தக் குழந்தையிடமேனும் அத்துமீறும் உணர்ச்சி உங்களுக்கு வந்து, உங்களை நீங்களே கட்டுப்படுத்திக்கொண்டது உண்டா?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 4

# குட் டச்... பேட் டச்....

டச்!

இந்த ஆங்கிலச் சொல் இன்று தமிழ்ச் சமூகத்தில் பரவலாகப் பயன்படுத்தப்படுகிறது. சினிமா பார்த்துவிட்டு வரும்போது, 'படத்தில் ஒரு சில காட்சிகள் டச்சிங் ஆக இருந்தன' என்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட பாணியை 'அதுதான் இயக்குநரின் டச்' என்கிறார்கள்.

உடலில் எங்கே இருக்கிறது என்று தெரியாத ஒன்று, மனம். அதை டச் பண்ணிவிட்டதாகப் பேசுகிறோம். தொட முடியாததையே தொட்டுவிட்டால் சாதனைதானே!

'தொடு' என்ற அருமையான தமிழ்வினைச் சொல்லுக்கு இரு

முக்கியமான அர்த்தங்கள் உள்ளன. தொடுதல், தொடுத்தல் ஆகிய இரு செயல்களுக்குமான கட்டளைச் சொல் அது. ஒருவரைத் தொடும்போது, அவரோடு நாம் நம்மைத் தொடுத்துக்கொள்கிறோம். திருமணம் மீறிய ஆண் - பெண் உறவில் இருவருக்கிடையே நெருக்கமான உறவாக அது ஆகிவிட்டதைத் 'தொடுப்பு' என்றே சொல்கிறார்கள்.

மௌனம் என்ற மகத்தான மொழியின் முக்கியமான வார்த்தைகளில் ஒன்று தொடுதல். வாய் பேசாமலே, பல விஷயங்களைத் தொடுதல் மூலம் பேசிவிட முடியும். நெருக்கமான ஒருவரை மரணத்தால் இழந்து வருத்தப்படும் நண்பரைச் சந்திக்கும்போது, அவர் தோளில் கை வைத்துத் தொட்ட ஒரு நொடியில் நம் பகிர்தலை உணர்த்தி விடுகிறோம். கைகளைப் பற்றிக்கொண்டதுமே வார்த்தைகள் மேற்கொண்டு தேவையற்றுப் போய்விடுகின்றன.

ஆண்களைவிட அதிகமாகப் பெண்கள் ஒருவரையொருவர் தொட்டுக்கொள்கிறார்கள். இரு ஆண்கள் சந்தித்ததும் கைகளைப் பற்றிக்கொள்ளும் பழக்கம் அபூர்வமானது. சிறுவர்கள் ஒருவர் தோளில் மற்றவர் கை போட்டுக்கொண்டு நடப்பது வயதாக வயதாகக் குறைந்துவிடுகிறது. ஆனால் சிறுமிகளும், இளம் பெண்களும், முதிய பெண்களும்கூட தத்தம் சிநேகிதிகளுடன் கை கோத்துக் கொள்ளும் பழக்கம் இருக்கிறது.

நம்முடைய ஆண் - பெண் பாலின அடையாள வளர்ப்பு முறையில் குழந்தைப்பருவம் முதலே ஆண் அதிகாரமுடையவனாகவும் பெண் அதிகாரத்துக்குக் கட்டுப்படுபவளாகவுமே பெரும்பாலும் வார்க்கப்பட்டு இருக்கிறார்கள். இதன் விளைவாகத்தான் ஆண் தன் உடலை அதிகாரத் தின் அடையாளமாகப் பார்க்கிறான்; பெண்ணின் உடலைத் தன் அதிகாரத்துக்குக் கட்டுப்பட்ட உடலாகப் பார்க்கிறான்.

அதிகாரத்தின் சின்னமான தன் உடலைத் தன் அனுமதியின்றி பிறர் தொட்டு அத்துமீறுவதை, ஆணின் அதிகார மனம் எளிதில் அனுமதிப்பது இல்லை. அதிகாரமற்றவளாகத் தன்னைக் கருதும்

பெண் மனதுக்கு இன்னொரு பெண்ணைத் தொட்டுப் பேசுவது எளிதாக இருக்கிறது. பெண்ணின் உடல் சுய அதிகாரமற்றதாகவும் பகிர்வதற்காகவே உருவாக்கப்பட்டதாகவும் ஒரு பொதுக் கருத்து எல்லா மனங்களுக்குள்ளும் விதைக்கப்பட்டு இருக்கிறது.

தொடுவது என்பது இன்னொரு உடலுடனும் அதன் வழியே மனதுடனும் உறவை ஏற்படுத்திக்கொள்ளும் செயல். ஒருவரைத் தொடும்போதே அது எப்படிப்பட்ட உறவின் அடிப்படையிலான தொடுதல் என்பது தொடப்பட்டவருக்குப் புரிந்துவிடும். புரிந்துவிட வேண்டும்.

துக்கத்தைப் பகிர்ந்துகொள்பவரின் தொடுதல் வேறு. சண்டைக்கு இழுக்க விரும்புபவரின் தொடுதல் வேறு. அன்பைக் காட்டும் தொடுதல் வேறு. காமத்தின் ஆரம்பமாக வரும் தொடுதல் வேறு.

அன்புக்கும் காமத்துக்குமான இடைவெளி எப்போதுமே மெலிதாகத்தான் இருக்கிறது. ஆனால் ஸ்பரிசம் இது அன்பா, காமமா என்பதை உணர்த்திவிடும். இந்த வேறுபாடுகளை வயதுவந்தவர்கள் எளிதாக அறிய முடியும்.

அலுவலகத்தில் மேல் (male) அதிகாரி பெண் ஊழியரிடம் ஒரு கோப்பைக் கொடுக்கும்போதோ, வாங்கும்போதோ கைகள் உரசுவது தற்செயலா, உள் நோக்கத்துடனா என்பது தொடுதலிலேயே புரிந்து விடுகிறது. ஐம்பது வயது ஐ.ஏ.எஸ். அதிகாரியிடம் கேரியர் கைடன்ஸுக் காகச் சென்ற 18 வயதுக் கல்லூரி மாணவி மாயாவை அவர் கட்டில் துணையாக ஆக்கிக்கொண்ட வரலாற்றின் தொடக்கப் புள்ளி ஒரு தொடுதல் மட்டுமே!

அந்தத் தொடுதலின் தொனியை மாயா புரிந்துகொள்ளவில்லையா? புரிந்துகொண்டு இருந்தால் ஏன் அவருடைய அடுத்த தொடுதலைத் தவிர்க்க முயற்சிக்கவில்லை? ஒரு தொடுதல் அவளுக்குள்ளும் இருந்த வேட்கையைத் தூண்டிவிட்டு விட்டதா? அந்த வேட்கைக்கான வடிகால் தரவேண்டிய மனிதர் தன் அப்பா வயதில் இருக்கும் இவர் அல்ல என்று மாயா உணரத் தவறியது ஏன்? தொடுதல் ஏற்படுத்தும் பரவசங்கள், அறிவைத் தற்காலிகமாகவேனும்

மழுங்கடிக்கக்கூடியவை என்பதுதான் காரணமா?

18 வயது மாயாவை... ஓரளவு சிந்திக்கும் வயதில் இருக்கும் மாயாவை ஒரு தொடுதல் எங்கெங்கோ அழைத்துச் சென்றுவிடும் என்றால், சிறு குழந்தைகளின் நிலை என்ன? தங்களுக்கு என்ன நிகழ்கிறது என்பதே தெரியாமலும் புரியாமலும் இருக்கும் குழந்தைகள், எப்போதும் ஆபத்தால் சூழப்பட்டே இருக்கிறார்கள்.

நன்கு அறிமுகமானவர்கள், நெருக்கமானவர்களிடமிருந்துதான் குழந்தைகளுக்கு ஆபத்து அதிகமாக இருக்கிறது என்று உலகம் முழுவதும் நடக்கும் ஒவ்வொரு ஆய்விலும் தெரிய வந்து கொண்டே இருக்கிறது. பெண் குழந்தைகளிடம் கூடுதலாக நிகழ்கிறது என்று மட்டுமே சொல்லலாமென்றாலும், அத்துமீறல்கள் ஆண் குழந்தை, பெண் குழந்தை என இருவருக்குமே நிகழ்கின்றன.

எது 'குட் டச்', எது 'பேட் டச்' என்று சொல்லித் தர வேண்டிய ஒரு அம்மாவே, தன்னை அறியாமல் குழந்தைக்கு 'பேட் டச்'சை அளிக்க முடியும். ஆண் குழந்தை என்றால் அதிகமாகக் கொண்டாடும் மன நிலையில் இன்னும் இருக்கும் நம் சமூகத்தில், பல தாய்மார்கள் தங்கள் ஆண் குழந்தையின் பிறப்புறுப்பைத் தட்டி விளையாடிக் கொஞ்சும் காட்சியைப் பார்க்கலாம். குழந்தை கூச்சமும் மகிழ்ச்சியுமாகச் சிரிக்கச் சிரிக்க, தாயின் (விபரீத) விளையாட்டு அதிகமாகிறது.

இன்னொரு நாள் அதே குழந்தையிடம் வேறொருவர் - அது பள்ளிக்கு அழைத்துச் செல்லும் ஆட்டோ டிரைவர் முதல் ஆசிரியர் வரை யாராக வேண்டுமானாலும் இருக்கலாம் - அதே போல நடந்து கொண்டால், குழந்தை அதை மகிழ்ச்சியான அனுபவமாக உணரத் தொடங்கினால், விளைவுகள் என்ன?

அத்துமீறல்களை அது அனுமதிக்கிறது என்று உணரும் அத்துமீறுவோர் அடுத்தடுத்த கட்டங்களுக்குச் செல்வார்கள். குழந்தையை மகிழ்விக்க சாக்லெட்டில் தொடங்கி அதன் வயதுக்கேற்ப பரிசுகள் கொடுப்பார்கள். ஸ்பரிசத்துக்காக

இல்லாவிட்டாலும் பரிசுகளுக்காக குழந்தை அவர்களை அனுமதிக்கத் தொடங்கும்.

எனக்குத் தெரிந்த ஒரு சிறுமி அவளிடம் இப்படி அத்துமீறியவர்களை (பதிலுக்கு) சுரண்டத் தொடங்கினாள். தன்னிடம் அத்து மீறும் அங்கிள்களிடம், தனக்கு வேண்டிய பொருட்களை வாங்கித் தரும்படி நச்சரிக்கத் தொடங்கினாள். தான் செய்வது வணிகரீதியிலான பாலியல் ஈர்ப்பு என்று உணராமலே, அதை நோக்கி அந்தச் சிறுமி நகர்த்தப்பட்டாள். காலமும் சூழல் மாற்றமும் மட்டுமே அவளைக் காப்பாற்றின.

எது 'குட் டச்', எது 'பேட் டச்' என்பதைக் கற்றுக்கொள்ளாத குழந்தைகள் அதை அறிகிறபோது பெரிய விலை தர வேண்டி வந்து விடலாம். சரி, இதைக் குழந்தை எந்த வயதில் கற்றுக்கொள்ள முடியும்? கற்றுத்தர வேண்டியது யார்?

எல்லாக் கல்வியும் குடும்பத்தில் தான் தொடங்குகிறது. தொடங்கப்பட வேண்டும். அதே சமயம், எல்லாக் கல்வியையும் குடும்பம் மட்டுமே கொடுத்துவிட முடியாது. ஆனால், அதற்குக் குழந்தையைத் தயார்படுத்தும் பொறுப்பு குடும்பத்துடையது!

## இன்றைய ஹோம் ஒர்க்:

*01.* யாரையாவது சந்தித்தால் உடனே கையைப் பற்றிக்கொள்ளும் பழக்கம் உங்களுக்கு உண்டா?

*02.* சிலரிடம் மட்டும் என்றால், யார் அந்த சிலர்?

*03.* யார் உங்கள் கையைப் பற்றுவதோ, உங்களைத் தொடுவதோ உங்களுக்குப் பிடிக்காது? ஏன்?

*04.* ஓர் ஆணும் பெண்ணும் சந்தித்ததும் கையைப் பற்றிக்கொண்டால், அதைப் பற்றி என்ன நினைப்பீர்கள்?

*05.* யார் உங்களைத் தொட்டால் உங்களுக்குப் பரவசம் ஏற்படுகிறது?

*06.* யார் உங்களைத் தொட்டால் உங்களுக்குக் கலவரம் ஏற்படுகிறது?

07. உங்கள் வீட்டுக் குழந்தைகள் விளையாடும்போது ஒருவரையொருவர் தொட்டு விளையாடுவதைக் கவனித்திருக்கிறீர்களா?

08. தொட்டு விளையாடாதே என்று யாரைக் கண்டித்திருக்கிறீர்கள்? ஏன்?

09. அன்றாடம் காலை முதல் மாலைவரை எத்தனை முறை யார் யாரையெல்லாம் தொடுகிறீர்கள்?

10. அதில் தவிர்க்க முடியாதவை, தவிர்த்திருக்க வேண்டியவை, எந்தச் சலனமும் ஏற்படுத்தாதவை எவையெவை?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 5

# அம்மா, செக்ஸ்னா என்னம்மா?

'தொட்டால் பூ மலரும்' என்கிறான் கவிஞன். கவிதைக்கு சரி... இன்றைக்கோ அது ஒரு 'பேட் டச்'. தொடாமல் இயற்கையாக மலர வேண்டிய பூவைத் தொட்டு மலரவைக்க முயற்சித்தால், அது வாடியும் கருகியும்தான் போகும்.

குழந்தைகளும் அப்படித்தான்! பாலியல் உணர்வுகள் அவர்களுக்குக் குழந்தைப் பருவத்திலேயே தொடங்கிவிடுகின்றன. அவை ஒவ்வொரு பருவத்திலும் அந்தந்தப் பருவத்துக்கேற்ற பரிமாணத்தில் வளர்ச்சி பெற வேண்டியவை. ஆனால், அவை வயது வந்தவர்களின் பாலுணர்வுகள் போன்றவை அல்ல.

குழந்தைகளின் பாலுணர்வை பெரியவர்களின் பாலுணர்வுடன் குழப்பிக்கொள்ளக் கூடாது.

ஐந்து வயது ஆண் குழந்தையையும் பெண் குழந்தையையும் காட்டி, 'அறியாத வயசு... புரியாத மனசு... ரெண்டும் இங்கே காதல் செய்யும் நேரம்' என்று வர்ணித்தால், அது தவறானது! அது காதல் அல்ல, நட்பு! வயது வந்தவர்களின் பாலுணர்வைக் குழந்தைகள் மீது ஏற்றிச் சொல்வதாகும்.

குழந்தைகளுக்கு நல்ல ஸ்பரிசம், மோசமான ஸ்பரிசம், பாலியல் நோக்கத்துடனான ஸ்பரிசம் போன்றவற்றை எப்போது, எப்படி சொல்லித் தருவது என்பது எல்லா பெற்றோருக்கும் ஒரு குழப்பமான விஷயமாகும். இதைக் கற்றுக்கொள்வது சுலபம்தான். அதற்கு, நாம் ஏற்கெனவே நம் மனதில் நிரம்பியிருக்கும் மரபுச் சுமைகள், கற்பிதங்கள், தவறான சில நம்பிக்கைகள் எல்லாவற்றையும் முதலில் காலி செய்ய வேண்டும்.

செக்ஸைப் பற்றிக் குழந்தைக்கு எப்போது சொல்லலாம் என்ற கேள்வி எழுந்ததுமே நம் மனதில் ஒரு நெருடலும், பயமும் தயக்கமும் தோன்றுவதற்கு என்ன காரணம்? செக்ஸ் என்பதற்கு நம் மனதில் வைத்திருக்கும் தவறான அர்த்தம்தான்! செக்ஸ் என்றதும், ஆண்-பெண் உடல் உறவுகொள்ளும் பிம்பம்தான் நம் மனதில் தோன்றுகிறது.

ஆனால், செக்ஸ் என்பது பால் அடையாளம். தான் யார் என்பதை ஒவ்வொரு மனிதரும் உணரச் செய்யும் அம்சங்களில் ஒன்று.

நான் ஆணாகப் பிறந்திருக்கிறேன்; அல்லது, பெண்ணாகப் பிறந்திருக்கிறேன்; என் உடல் ஆண் உடல்; என் உடல் பெண் உடல்; என் உடல் இன்ன உடலாக இருப்பதால் அது இப்படிப்பட்ட அமைப்பில் இருக்கிறது. இன்ன அமைப்பில் இருப்பதால், அதை இப்படி அழைக்கிறோம். இன்ன உடலாக இருப்பதால், அதன் உணர்ச்சிகள், தேவைகள், பயன்கள் இத்தகையவை..! இப்படி ஒவ்வொரு ஆணும், ஒவ்வொரு பெண்ணும் தன்னைத்தானே உணரும் பயணத்தின்போது, ஒரு கட்டத்தில் வந்து போகும் ஓர்

அம்சம் மட்டுமே உடல் உறவு.

உடல் உறவு என்பதை நம் இளைஞர்கள் புரிந்துகொள்ள, முதலில் அவர்கள் உடல் என்பது என்ன என்று சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும்; உறவு என்பது என்ன என்று புரிந்துகொள்ள வேண்டும். இரண்டையும் குழந்தைப் பருவத்திலிருந்தே தனித்தனியே புரிந்து கொள்ளத் தொடங்கினால்தான், வளர்ந்த பின் உடல் உறவை வாழ்க்கையின் ஆரோக்கியமான அம்சங்களில் ஒன்றாக ஏற்று அதன் மகிழ்ச்சிகளைக் குற்ற உணர்ச்சி இல்லாமல் அனுபவிக் கவும், அதன் விளைவுகளுக்குத் தெளிவுடன் பொறுப்பேற்கவும் அவர்களால் முடியும்.

ஒரு குழந்தைக்கு அதன் உடலைப் பற்றி எப்படி சொல்லிக் கொடுப்பது? எப்போது சொல்லிக் கொடுப்பது? அதைத் தீர்மானிக்க முதலில் எந்தெந்த வயதில் குழந்தைக்கு என்னென்ன தெரியும்/ புரியும் என்று பார்ப்போம்.

மூன்று வயதுக்குள் குழந்தையின் வளர்ச்சி என்னவெல்லாம் ஆகிறது தெரியுமா? பிறந்தபோது இருந்த உயரத்தைப் போல இரு மடங்கு உயரமாகிவிடும். எடை மூன்று மடங்காகியிருக்கும். கெட்டியான உணவுகளைக் கடித்துச் சாப்பிடத் தொடங்கியிருக்கும். தவழ்தல் முடிந்து நடக்க ஆரம்பித்திருக்கும். ஓடும்; குதிக்கும்; படி ஏறும்; தானே உடை மாட்டவும், கழற்றவும் ஆரம்பிக்கும். கழிவறையைப் பயன்படுத்தக் கற்றுக்கொண்டிருக்கும்; ங்காம்மா போன்ற ஒற்றைச் சொற்களைத் தவிர்த்து, முழு வாக்கியமாகவே பேசத் தொடங்கியிருக்கும். தானாகவே எதையாவது கற்பனை செய்யும் திறமைகூட மூன்று வயதுக் குழந்தைக்கு வந்துவிடும்.

கையைக் காலாக்கி நீங்கள் நடந்தால் 'ஆனை' என்று அது சொல்வது கூட, அதன் கற்பனைத் திறனில் ஏற்படுகிற முன்னேற்றம் தான். ஐந்து புலன்களையும் பயன்படுத்தி விஷயங்களைப் புரிந்து கொள்ளும்.

பெண் குழந்தையானால், அம்மாவைப் போலவே பாவனைகள் செய்யும். ஆண் குழந்தை அப்பாவைக் காப்பி அடிக்கும். ஆண் - பெண் வித்தியாசங்கள் வீட்டில் எப்படிப் பின்பற்றப்படுகிறதோ,

அதைத் தானும் பின்பற்றக் கற்றுக்கொள்ளும்.

கவிஞர் வெண்ணிலா சொன்னது போல, காலையில் வாசலில் விழும் பேப்பரை அப்பாவிடமும், பால் கவரை அம்மாவிடமும் கொடுக்க அது (காப்பியடித்துக்) கற்றுக்கொண்டு இருக்கும். தன்னிடம் பழகும் பெரியவர்களில் தனக்கு நம்பிக்கையானவர்கள் எல்லாரையும் மூன்று வயதுக் குழந்தை காப்பியடிக்கும். தன் தேவைகளைக் கவனிக்கும் பெரியவர்கள் மீது நம்பிக்கை வைக்கத் தொடங்கும்.

மூன்று வயதுக் குழந்தை உணர்ச்சிகளை வெளிப்படுத்தவும் தொடங்கி விடும். அன்பைக் காட்ட முத்தமிடும். எரிச்சலைக் காட்ட, கை வீசி அடிக்கும்.

பாலியல் வளர்ச்சியும் மூன்று வயதுக் குழந்தைக்கு உண்டு. அதன் அடையாளங்கள் என்ன? தன் உடலைப் பற்றியும் மற்றவர் உடல்களைப் பற்றியும் அறியும் ஆவல் அதற்கு இப்போது ஏற்படுகிறது. அது மட்டுமல்ல... தன் பிறப்புறுப்புகளைத் தொட்டால் சுகமாக இருப்பதை உணரத் தொடங்கும். அடிக்கடி தொட் டுப் பார்க்கும். அப்போது ஆண் குழந்தைக்கு குறி விறைப்பும், பெண் குழந்தைக்கு யோனிக் குழாய் ஈரமும் ஏற்படும் அனுபவங்களும் நிகழும்.

இதில் ஆச்சர்யமோ அதிர்ச்சியோ அடைய ஏதுமில்லை. குழந்தை தாயிடம் பால் குடிக்கும்போது அதற்கு ஏற்படும் சுக அனுபவங்களில் பாலியல் அனுபவமும் கலந்தே இருக்கிறது என்பது உளவியல் அறிஞர் சிக்மண்ட் ஃபிராய்டின் ஆய்வு முடிவு. இரு உடல்களின் அணைப்பின் கதகதப்பு குழந்தைக்கு சுக அனுபவம் மட்டுமல்ல, பாதுகாப்பு உணர்ச்சி தருவ தாகவும் அமைகிறது.

மூன்று வயதிலிருந்தே குழந்தைகளைப் பெருமளவு சுயேச்சையாக தங்கள் வேலைகளைத் தாங்களே செய்துகொள்ளக் கூடியவர்களாக வளர்க்க வேண்டும். தனக்கென்று தனி டம்ளர், தனி தட்டு போல தனி பாய், தனி மெத்தை, தனி கட்டில், முடியுமானால் தனி அறை என்ற

சில்லறைப் பெருமைகளைக் கொண்டு அவர்களை மடைமாற்றும் முயற்சிகளைப் பெற்றோர் மேற்கொள்ள வேண்டும்.

மூன்று வயதுக் குழந்தைகளுக்கு, தங்கள் உடல் உறுப்புகளை அடையாளம் காட்டிப் பெயர் சொல்லும் ஆற்றல் வந்துவிட்டு இருக்கும். காது எங்கே, மூக்கு எங்கே என்றெல்லாம் கேட்டால், தொட்டுக் காட்டி பதில் சொல்லும். ஆனால், பிறப்புறுப்புகளை மட்டும் பெயர் சொல்லவோ அடையாளம் காட்டவோ நம்மில் பலர் தயங்குகிறோம்.

சொல்லித் தராதது மட்டுமல்ல; இடக்கரடக்கலாக வேறு பெயர்கள் வைத்து சொல்லித் தருகிறோம். சுசூ, மூச்சா என்று விதவிதமான வேற்று மொழிப் பெயர்கள் போல் ஒலிக்கும் பெயர்களையெல்லாம் சூட்டுகிறோம். இதன் விளைவாக, நம் தாய் மொழியில் இந்த உறுப்புகளுக்கு இருக்கும் பெயர்கள் 'கெட்ட வார்த்தை'களாக மாற்றப்பட்டு விட்டன.

செக்ஸ் பற்றிய குற்ற உணர்ச்சி, அருவருப்பு உணர்ச்சி, கவர்ச்சி எல்லாமே இப்போதுதான் விதைக்கப்படுகின்றன. ஜட்டி போடாமல் இருக்கும் குழந்தையிடம் நாம் சொல்வது என்ன... 'ஷேம் ஷேம் பப்பி ஷேம்.'

நம் உடலைப் பற்றி வெட்கப்படவோ, அவமானப்படவோ எதுவும் இல்லை. நம் செய்கைகளில் தான் அவமானமோ பெருமையோ இருக்க முடியும். செயலில் இருக்க வேண்டிய அவமான உணர்ச்சியை உடல் உறுப்பின் மீதே ஏற்றிவைத்து விட்டோம். அதனால்தான் அப்பா லஞ்சம் வாங்குவது அம்மாவுக்கு அவமானமாக இல்லை; குழந்தை ஜட்டி போடாதது அவமானமாக இருக்கிறது!

அப்படியானால் மூன்று வயதுக் குழந்தையின் இனம் தெரியாத பாலுணர்வை அதற்கு எப்படிக் கையாளக் கற்றுத் தருவது? 'அம்மா, செக்ஸ்னா என்னம்மா?' என்று உங்கள் குழந்தை கேட்டால், என்ன பதில் சொல்வீர்கள்?

## இன்றைய ஹோம் வொர்க்:

01. எந்த வயதில் ஏற்படுவது காதல்?

02. எத்தனை வயது வரை நீங்கள் தாய்ப் பால் குடித்தீர்கள் என்று தெரியுமா?

03. எந்த வயது வரை அம்மாவையோ அப்பாவையோ கட்டிக்கொண்டுதான் படுப்பேன் என்று பிடிவாதம் பிடித்தீர்கள்?

04. ஷேம் ஷேம் பப்பி ஷேம்' போன்ற வாசகங்களை முதன்முதலில் எப்போது கேட்டீர்கள்/சொன்னீர்கள் என்று நினைவிருக்கிறதா?

05. பிறப்பு உறுப்புகளின் சரியான பெயர்களை நீங்கள் முதலில் கேள்விப்பட்டது எப்போது? எந்த வயதில்? யாரிடமிருந்து? உங்களால் அந்தச் சொற்களைக் கூச்சமின்றி இப்போது சொல்ல முடியுமா?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 6

# என் உடல் யாருடையது?

'செக்ஸ்னா என்ன?' என்ற கேள்வியைத் தன்னிடம் குழந்தை கேட்டு விடக் கூடாதே என்ற பதற்றம் பெரும்பாலான அம்மா, அப்பாக்களுக்கு இருக்கிறது.

பதற்றத்துக்குக் காரணங்கள் பல. குழந்தையின் கவனம் செக்ஸ் விஷயங்கள் பக்கம் போய்விடக் கூடாது என்ற பயம் ஒரு காரணம். கேட்டால், என்ன பதில் சொல்வது, எப்படிச் சொல்வது என்ற அறியாமை இன்னொரு காரணம். தன்னிடம் கேட்கும் முன்பாகவே குழந்தை அது பற்றி என்ன தெரிந்துவைத்திருக்கிறதோ, எவ்வளவு தெரிந்துவைத்திருக்கிறதோ என்ற கவலை மற்றொரு காரணம்.

முதல் குழந்தைக்கு மூன்று வயதாகிறபோது, அடுத்துக் கருவுற்றிருக்கும் அம்மா சந்தித்தே தீர வேண்டிய கேள்வி - 'எப்பிடி உன் வயித்துக்குள்ள பாப்பா வந்துது?'

கேள்வி கேட்ட ஒரு பத்து வயதுக் குழந்தையிடம் அம்மா சொன்னாள்... 'ராத்திரி சாமி வந்து வெச்சுட்டுப் போய்ட்டார்.'

அடுத்த கேள்வி - 'என்னைக்கூட சாமிதான் உன் வயித்துல வந்து வெச்சுட்டுப் போனாரா?'

அம்மா அதற்கும் 'ஆமாம்' என்றுதான் சொல்லியாக வேண்டும். அடுத்தடுத்த கேள்விகள்... 'அப்பாகூட அப்படித்தான் பொறந்தாரா?', 'எதிர் வீட்டுப் பாப்பா?', 'எங்க டீச்சர்..?' எல்லாவற்றுக்கும் அம்மாவின் பதில் 'ஆமாம்'தான்!

குழந்தை கடைசியாகக் கேட்ட கேள்வியில் அம்மா மயக்கம் போட்டு விழுந்தாள். அப்படி என்ன கேட்டது குழந்தை? 'எல்லாரையுமே சாமிதான் வந்து வயித்துல வெச்சுட்டுப் போனார்னா, 'செக்ஸ்'னு சொல்றாங்களே.... அது என்ன? நம்ம நாட்டுல யாரும் செக்ஸே வெச்சுக்கறதில்லையா?'

இந்தக் கதைக் குழந்தை தந்த அதிர்ச்சியை எந்த அம்மா, அப்பாவும் சந்திக்க விரும்ப மாட்டார்கள்தான்.

இன்னொரு ஐந்து வயதுக் குழந்தை, 'செக்ஸ்னா என்னம்மா?' என்று கேட்டது. அம்மா உடனே, வண்டு, மகரந்தப் பொடி, பூ என்று தொடங்கிக் கடைசியில் ஆண் உடல், பெண் உடல் படங்களை வரைந்து காட்டி, இதுதான் செக்ஸ் என்று கஷ்டப்பட்டு விளக்கி முடித்ததும், குழந்தை கேட்டது... 'எப்படிம்மா இத்தனையையும் இந்த ஒரு லைன்ல எழுதறது?' குழந்தை காட்டிய பள்ளிக்கூட டயரியில் பெயர், வயது, செக்ஸ் (ஆணா - பெண்ணா?) என்று ஒவ்வொன்றுக்கும் ஒரு வரிதானே கொடுக்கப்பட்டு இருக்கிறது?!

எந்த வயதில் கேட்கிறார்கள், எந்தச் சூழலில் கேட்கிறார்கள் என்பதையெல்லாம் உணராமல் பதில் சொன்னால் அசடு வழிவதும், அதிர்ச்சி அடைவதும்தான் நிகழும்.

மூன்று வயதிலேயே உடல், மன உணர்ச்சி வளர்ச்சிகளுடன் பாலியல் வளர்ச்சியும் குழந்தைக்கு நிகழ்கிறது என்று பார்த்தோம்.

இந்தக் கட்டத்தில், குழந்தையின் பாலியல் வளர்ச்சியைக் குடும்பம் எப்படிக் கையாள வேண்டும்?

குழந்தை தன் உடலைப் பற்றி அருவருப்பாகவோ, அவமானமாகவோ கருதாமல், தன் உடலைத் தானே நேசிக்கவும், அதைப்பற்றி சந்தோஷப்படவும் உதவ வேண்டும். உடலின் எல்லா பாகங்களின் பெயர்களையும் இப்போது கற்றுத்தந்துவிட முடியும்.

ஆண் குழந்தையின் உடல் ஒரு மாதிரியாகவும், பெண் குழந்தையின் உடல் வேறு விதமாகவும் இருப்பதை இப்போது குழந்தை கவனித்திருக்கும். எதனால் அப்படி அமைந்திருக்கிறது என்று குழந்தைக்கு இப்போது புரியவைக்க முடியும். வெவ்வேறுவிதமாக இருப்பதால் ஒன்று உசத்தி, ஒன்று தாழ்த்தி என்பதில்லை; இருவரும் சமம்தான் என்பதைச் சொல்லித்தரவும் இதுவே சரியான தருணம்.

'ஆண் குழந்தைக்கு இருப்பது போன்ற உறுப்பு சிறுநீர் கழிக்கத் தனக்கு இல்லை' என்ற பொறாமை உணர்ச்சி பெண் குழந்தைக்கு ஏற்படுகிறது என்று ஒரு காலத்தில் உளவியல் அறிஞர்கள் சொன்ன கருத்துக்கள் காலாவதியாகிவிட்டன. இதே போல தனக்குப் பெரிய மார்பகம் இல்லையே என்ற பொறாமை உணர்ச்சி ஆணுக்கும் ஏற்படும் வாய்ப்பு உண்டா என்ற எதிர்க் கேள்வி, பழைய முடிவுகளை மறு பரிசீலனை செய்யவைத்தது.

இப்படிப்பட்ட பரஸ்பர பொறாமை உணர்ச்சிகள் இயல்பில் இல்லாதவை. ஒன்றை உயர்ந்ததாகவும், மற்றொன்றைத் தாழ்ந்ததாகவும் கருதும் சமூகப் பார்வைதான் பொறாமை உணர்ச்சிகளைத் தூண்டுகிறது. ஆண் குழந்தையும் பெண் குழந்தையும் உடலால் வித்தியாசமானவர்களாக இருந்தாலும், சமமானவர்களே என்ற பார்வையை குழந்தைப்பருவத்தி லேயே பெற்றுவிட்டால், பல 'வயசுக் கோளாறுகள்' உருவாகவே வழி இல்லாமல் போய்விடும்.

மூன்று வயதில் குழந்தைக்குப் பேசவும், நாம் பேசுவதைப் புரிந்து கொள்ளவும் தெரிந்தது முதலே, 'குட் டச்', 'பேட் டச்'சின் ஆரம்பப் பாடத்தை நாம் சொல்லிக் கொடுத்துவிட முடியும். முதல் பாடம் - ''யாராவது உன்னைத் தொடுவது பிடிக்கவில்லை என்றால்,

உடனே 'என்னைத் தொடாதீங்க; அது எனக்குப் பிடிக்கலை' என்று அவரிடம் சொல்லிவிடு'' என்று கற்றுத் தருவதாகும்.

'என் உடல் என்னுடையது' என்ற உணர்ச்சியின் இன்னொரு பக்கம்தான், 'இன்னொருவர் உடல் என் சொத்து அல்ல; என் உடல் இன்னொருவருக்காகத் தயார் செய்யப்பட்டு வைத்திருப்பது அல்ல' என்ற தெளிவுகளையும் பின்னாளில் ஏற்படுத்த முடியும். கதாநாயகனுக்காகவென்றே 'ஆளாகி', 'சமைஞ்சு' காத்திருப்பவளாக கதாநாயகியைச் சித்திரிக்கும் அத்தனைப் பாடல்களும், காட்சிகளும், பெண் உடல் தன் சொத்து என்ற கருத்தை ஆண் மனதிலும், தன் உடல் தன்னுடையதல்ல; இன்னொருவனுக்கானது என்ற கருத்தை பெண் மனதிலும் ஓயாமல் விதைத்துக்கொண்டே இருக்கின்றன.

இப்படிப்பட்ட தவறான கருத்துப் பரப்பலால்தான், 'தொட்டால் கற்பு போய்விட்டதாகுமா?', 'முத்தமிட்டால் கற்பு போனதாகச் சொல்லலாமா?' அல்லது, 'உடல் புணர்ச்சி மட்டுமே கற்பைத் தீர் மானிக்குமா?' போன்ற விசித்திரப் பட்டிமன்ற விவாதங்கள், பல விடலை மனங்களில் பேயாட்டம் ஆடுகின்றன.

இளைஞர்கள் மனதில் செக்ஸ் தொடர்பாக ஏற்படும் பல குழப்பங்களின் அஸ்திவாரம், சிறு வயதில் உடல் பற்றிய தவறான பார்வையிலேயே போடப்பட்டுவிடுகிறது. அதனால்தான் மிகச் சிறு வயதிலேயே உடல் பற்றிய இயல்பான புரிதல் என்ன, வளர்ச்சியின் தன்மை என்ன, வழி காட்டுதல் எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் என்பதை நாம் அறிய வேண்டியிருக்கிறது.

ஒவ்வொரு வயதுப் பிரிவிலும் பாலியல் வளர்ச்சி எப்படிப்பட்டது என்று நாம் அறிய வேண்டும். நான்காம் வயது, ஐந்தாம் வயது இரண்டும் ஒரு கட்டம். இந்தக் கட்டத்தில்தான் ஆம்பளைன்னா இப்படி இருக்கணும்; பொம்பளைன்னா இப்படி இருக்கணும் என்ற பார்வை உருப்பெறத் தொடங்கிவிடுகிறது!

## இன்றைய ஹோம் வொர்க்:

1. 'செக்ஸ்னா என்ன?' என்று யாரிடமாவது நீங்கள் கேட்ட/ உங்களிடம் யாராவது கேட்ட முதல் நிகழ்ச்சி ஞாபகம் இருக்கிறதா?

2. என்ன பதில் தரப்பட்டது?
3. உங்கள் உடலைப் பற்றியோ/உடலின் ஏதேனும் ஒரு பாகத்தைப் பற்றியோ அருவருப்பாக எப்போதேனும் நினைத்திருக்கிறீர்களா? எப்போது? ஏன்?
4. உங்கள் உடலின் எல்லா பாகங்களின் பெயர்களும் உங்களுக்குத் தெரியுமா? சரியாகப் பெயர் தெரியாத பாகங்கள் உண்டா? எவை?
5. தொடுதல்/ அணைத்தல்/ முத்தமிடுதல்/ புணர்ச்சி - இதில் எப்போது கற்பு 'இழக்கப்படுவதாக' நினைக்கிறீர்கள்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 7

# ஆம்பளை... பொம்பளை....

‘முளைச்சு மூணு இலைகூட விடல... அதுக்குள்ள என்ன ஆட்டம்!’ என்று சிறிசுகளைப் பெரிசுகள் கடிந்துகொள்வது உண்டு.

அதென்ன மூணு இலை கணக்கு? ஒரு விதை முளைத்ததும், இனி செடி நிச்சயம் பிழைத்துவிடும் என்ற நிலைதான் அது! மூணாவது இலை விட்ட பிறகு, பராமரிப்பு ஒழுங்காக இருந்தால், மிகவும் எதிர்பாராத பேரிடர்கள் வந்தாலொழிய, செடி பிழைத்து நன்றாகவே வளரும்.

மனிதக் குழந்தையும் செடி போலத்தான்... முற்றிலும் எதிர்பாராத

பேரிடர்கள் வந்தாலொழிய, தாய்ப்பால் முதல் அடிப்படைப் பராமரிப்புகள் யாவும் முதல் மூன்று வருடங்களில் ஒழுங்காக இருக்கும் எந்தக் குழந்தையும் தொடர்ந்து சீராக வளர்ந்து, ஆளாக முடியும்.

நான்கு வயதில் குழந்தைகளின் வெளி உடல் வளர்ச்சியைவிட உள் உறுப்புகள் எல்லாம் வேகமாக வளர்ச்சி அடைகின்றன. பெரியவன்(ள்) ஆகும்போது இருக்கக்கூடிய உயரத்தில் சரிபாதி இப்போது வந்துவிடும். பெரிய வயது எடையில் கால் பாகம் இப்போது இருக்கும்.

குழந்தையின் துறுதுறுப்பு அதிகரிக்கும் வயது இது. படிக்கட்டுகளில் வேகமாக ஏறி இறங்கும். ஸ்கிப்பிங் போன்று தாண்டிக் குதிக்க முடியும்.

விரல்களைப் பயன்படுத்தி சற்று நுட்பமான வேலைகளைச் செய்யப் பழகிவிடும். பார்த்தால் புரியும் அளவுக்கு மரம், காக்கா என்று சின்னச் சின்னப் படங்கள் வரைய இப்போது அந்தக் குழந்தையால் முடியும்.

ஷூ லேஸைத் தானே முடிச்சுப்போட்டுக் கட்டவும், அவிழ்க்கவும் தெரிந்துகொள்ளும். சட்டை பட்டன்களைச் சரியாக மாட்டும். கத்திரிக்கோலில் விரல் நுழைத்துப் பிடித்து, வெட்டக் கற்றுக்கொண்டுவிடும்.

இவையெல்லாம் உடல் வளர்ச்சி, ஆற்றல் தொடர்பானவை. மன வளர்ச்சி, பாலியல் உணர்ச்சி பற்றிப் பார்க்கும் முன்பு ஒரு முக்கியமான விஷயத்தைக் கவனிக்க வேண்டும்.

நான்கு வயதுக்கு முந்தைய நிகழ்ச்சிகள் பற்றிய ஞாபகங்கள் எதுவும் நம் மனதில் இல்லை என்று அறிவியல் ஆய்வுகள் சொல்லுகின்றன அல்லவா? அதன் இன்னொரு அர்த்தம் என்ன?

நான்கு வயது முதல் நடைபெறும் நிகழ்ச்சிகள், அனுபவங்கள் எல்லாமே ஆயுள் முழுக்க நினைவில் நிற்கும் வாய்ப்பு இருக்கிறது என்பதுதானே? இதுதான் நாம் அக்கறை செலுத்தவேண்டிய மறு

பக்க உண்மை.

நான்கு வயது முதல் அடுத்த பத்துப் பதினைந்து ஆண்டுகளில் குழந்தையின் மனதில் பதியும் ஒவ்வொரு விஷயமும் ஆயுள் முழுக்க உடன்வரக் கூடியவை. சில ஆக்கபூர்வமாக வரும்; சில ஆபத்தாகவும் வரும். எனவே, இந்த வயதிலிருந்து குழந்தையின் பாலியல் அடையாளம், அதன் பர்சனாலிட்டி எனப்படும் தனி மனித ஆளுமையில் ஒரு முக்கியமான அம்சமாக இருக்கப்போகிறது.

ஆம்பளைன்னா இப்படி இருக்கணும், பொம்பளைன்னா இப்படி இருக்கணும் என்ற கருத்துக்கள் குழந்தை மனதில் சுரீரென்று தைக்கத் தொடங்கும் வயது இது.

இதை (வி)தைப்பவர்கள் யார்?

நாம் எல்லாரும்தான். நான்கு, ஐந்து வயதுக் குழந்தைகள் அப்பா, அம்மா, பாட்டி, தாத்தா என்று மிக நெருக்கமான உறவினர்கள் தவிர, இதர மனிதர்களுடனும் மெள்ள மெள்ள அதிகம் உறவாடத் தொடங்குகின்றன. ஒருவிதத்தில் 4-5 வயதுக் குழந்தை தன்னைப் பராமரிப்பவர்கள் கூட இல்லாமல், ஓரளவு சுதந்திரமாக இருப்பதையும் கூட அனுபவிக்கக் கற்றுக் கொள்ளத் தொடங்குகிறது.

குழந்தை யாருடன் அதிக நேரம் செலவிடுகிறதோ, அவர்களுடைய ஆண்-பெண் கருத்துக்கள், அவர்களுடைய நடை, உடை, பாவனைகள் எல்லாமே மனதில் பதியத் தொடங்கும் வேளை இது. அப்பாவோ ஆயாவோ கோபத்தில் யாரிடமாவது 'ராஸ்கல்', 'கசுமாலம்' என்றால், குழந்தையும் கூட தன் கோபமான தருணத்தில் அந்தச் சொற்களைச் சொல்லப் பழகிவிடும்.

பொருட்களை, நபர்களை, செயல்களை உற்று நோக்கிப் பார்த்துப் புரிந்துகொள்ள குழந்தை இப்போது முயற்சி செய்கிறது. எது நல்லது, எது கெட்டது என்பதை அறிகிறது. ஆனால்... இது ஏன் நல்லது, அது ஏன் கெட்டது என்ற காரணங்களைப் புரிந்துகொள்ள இப்போது குழந்தைக்கு இயலாது.

இந்த வயதில் குழந்தை, தன் சம வயதுக் குழந்தைகளிலும் ஓரிரு வயது மூத்த குழந்தைகளிலும் தன் முன்னோடியாகச் (peer) சிலரைப் பின்பற்றத் தொடங்குவது இப்போது நிகழும். ஒருவிதத்தில் ஒவ்வொரு குழந்தையுமே இன்னொரு குழந்தைக்கு

முன்னோடிதான்.

நான்கு, ஐந்து வயதுச் சிறுவர்களும் சிறுமிகளும் இப்போது நிறையவே சேர்ந்து விளையாடுவார்கள். தொட்டுப் பேசி, அடித்து உதைத்து, கட்டிப்புரண்டு விளையாடுவார்கள். இப்படிப்பட்ட சாதாரண உறவாடல்களைத் தடுக்க ஆரம்பிக்கும்போது பெரியவர்களாகிய நாம் குழந்தைகளுக்கு ஆண்-பெண் வித்தியாசம் பற்றிய ஆரோக்கியமில்லாத பார்வையைக் குழந்தைகளுக்கும் புகட்டத் தொடங்கிவிடுகிறோம். அப்படியானால் சிறுவனும் சிறுமியும் கட்டிப்புரண்டு விளையாடுவதை எந்த வயதில் கைவிடச் செய்வது என்று கேட்கிறீர்களா? அவசரப்பட வேண்டாம். அதை இந்தத் தொடரில் பின்னால் பார்க்கப்போகிறோம். ஐந்து வயதில் இருவரும் தொட்டு விளையாடினால், எந்தக் கூரையும் இடிந்து விழுந்துவிடாது. விளையாடட்டும்.

இப்போது குழந்தைகள் விளையாடும் விளையாட்டில் பெரியவர்களாகிய நமது பார்வைகள் கலந்து பிரதிபலிக்கத் தொடங்குவதைப் பார்க்கலாம். உதாரணமாக, குழந்தைகள் டாக்டர்-நோயாளி விளையாட்டை விளையாடுவார்கள். ஒரு குழந்தை ஸ்டெதாஸ்கோப் மாட்டிய டாக்டர் போலத் தன்னை பாவித்துக்கொண்டு இன்னொரு குழந்தையைப் பரிசோதிக்கும். 'ஊசி போட்டால் சரியாகிவிடும்' என்று அது சொல்வதுகூட நம் பார்வைதான். பெரும்பாலும் டாக்டராக ஆண் குழந்தையும், ஊசி போடும் நர்ஸாக பெண் குழந்தையும் நடிக்கும். இது நேர்மாறாக இருக்கும் வாய்ப்பு இல்லை. காரணம், நம்மிடமிருந்து தொற்றிக்கொண்ட பார்வைதான். எந்தெந்த வேலைகள் பெண்களுக்கு ஏற்றவை, எவையெல்லாம் ஆண்களுக்கு ஏற்றவை என்று சுற்றியிருக்கும் சமூகம் விதித்து வைத்திருப்பதை, தான் கற்றுக்கொண்டதை விளையாட்டின் மூலம் நமக்கு உணர்த்துகிறது குழந்தை.

குழந்தைகளுக்கு நாம் வாங்கித் தரும் பொம்மைகளும் அவர்களுக்கு ஆண்-பெண் பாலியல் பாத்திரம் முதல் ஆண்-பெண் உறவு விதிகள் வரை நம்முடைய அணுகுமுறையைக் கற்பிக்கின்றன. கார் பொம்மை சிறுவனுக்கு; சமையல் சொப்பு சிறுமிக்கு. கிரிக்கெட் பேட் சிறுவனுக்கு; பல்லாங்குழி சிறுமிக்கு. செஸ் போர்டு

சிறுவனுக்கு; தாயக்கட்டம் சிறுமிக்கு!

சொப்பு வைத்து சமையல் செய்துகொண்டு இருக்கும் ஐந்து வயதுச் சிறுமியிடம், விர்ரென்று பைக்கில் வந்து வீட்டு வாசலில் இறங்குவதாக பாவனை செய்யும் சிறுவன், 'இன்னுமா சமையல் ரெடி பண்ணலே?' என்று கேட்கும் கேள்வி, இருவரையும் எதிர்காலத்தில் நம்மைப் போலவே ஆக்குவதற்குத் தயார்பண்ணி விடுகிறது.

ஒரு பக்கம் இப்படிக் குழந்தைகளின் பாலினப் பாத்திரங்களை நாம் நம் வார்ப்பில் நம்மை அறியாமலே உருவாக்கத் தொடங்கி யிருக்கும் அந்த ஐந்து வயதில், இன்னொரு பக்கம் குழந்தைகளின் மனதில் தன் உடல் பற்றி, தன் பிறப்பு உறுப்புகள் பற்றித் தெரிந்து கொள்ளும் ஆர்வமும் முயற்சியும் ஆரம்பிக்கிறது.

இந்த வயதில்தான், 'எங்கிருந்து குழந்தை வந்தது? அது எப்படி அம்மா தொப்பைக்குள் போயிற்று? எப்படி வெளியில் வரும்?' என்ற அவர்களின் மூன்று கேள்விகளுக்கும் பதில் சொல்ல வேண்டிய நிலையில் இருப்போம்.

எப்படிப் பதில் சொல்வது?

தினமும் காலையில் பல் தேய்க்கவும், சாப்பிடும் முன்பும் சாப்பிட்ட பின்பும் கைகளைக் கழுவவும் கற்றுக் கொடுத்திருப்போம் அல்லவா? அதுபோலவே மலம் கழித்த பின், தானே கழுவிக்கொள் ளக் குழந்தைக்குக் கற்றுத் தருவோம். அதைக் கற்றுத் தரும்போதே மேற்கண்ட கேள்விகளுக்கும் பதில் சொல்லித் தர முடியும்.

எப்படி?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. நீங்கள்/உங்கள் குழந்தை, தானாகவே ஷூ லேஸைக் கட்டக் கற்றுக் கொண்டது எப்போது?
2. நீங்கள் குழந்தையாக இருந்தபோது கேட்ட முதல் கெட்ட வார்த்தை எது? சொன்னவர் யார்?
3. நீங்கள் குழந்தைகள் முன்னால் பயன்படுத்தும் கெட்ட, தடித்த வார்த்தைகள் எவை எவை? அவர்கள் இல்லாதபோது

பயன்படுத்துபவை எவை எவை?

4. உங்களுக்கு முதலில் வாங்கித் தரப்பட்ட விளையாட்டு பொம்மைகள் என்ன? உங்கள் ஆண் குழந்தைக்கும் பெண் குழந்தைக்கும் நீங்கள் வாங்கித் தந்த பொம்மைகள் என்னென்ன?

5. ‘எங்கிருந்து குழந்தை வந்தது? அது எப்படி அம்மா தொப்பைக்குள் போயிற்று? எப்படி வெளியில் வரும்?’ என்ற மூன்று கேள்விகளுக்கும் என்ன பதில் சொல்லியிருக்கிறீர்கள்?

6. காலைக் கடன்களைக் கழித்ததும் எந்த வயதில் சுயமாகக் கழுவிக் கொள்ளக் கற்றுக்கொண்டீர்கள்? குழந்தைக்குக் கற்றுக் கொடுத்தீர்கள்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 8

# அப்பா வயித்துல என் குழந்தை இல்லே?

ஐந்து வயதுக் குழந்தை, 'எங்கிருந்து குழந்தை வந்தது? அது எப்படி அம்மா தொப்பைக்குள் போயிற்று? எப்படி வெளியில் வரும்?' என்ற மூன்று கேள்விகளையும் கேட்க ஆரம்பிக்கும்போது, அதற்குச் சரியாக பதில் சொல்ல வேண்டு மானால், பதில் சொல்கிறவர் ஆணுக்கும் பெண்ணுக்கும் உடல் அமைப்பில் உள்ள வித்தியாசங்கள் பற்றிச் சரியாகப் புரிந்து வைத்திருக்க வேண்டும். எல்லாருமே சிறு வயதிலேயே இதைப் புரிந்துகொள்ளத் தொடங்குவது நல்லது.

ஆனால், என்ன வித்தியாசம் என்பது தெரியாததாலும், அரைகுறையாகவும் தப்புத் தப்பாகவும் தெரிந்துகொள்வதாலும்

குழப்பமடைகிறார்கள். பெரியவர்களான பின்னரும் இந்தக் குழப்பம் நீடிக்கிறது. அடுத்தபடியாக தங்கள் குழந்தைகளுக்கும் பரம்பரைச் சொத்தாக அந்தக் குழப்பத்தைக் கொடுத்துவிட்டுப் போய்விடுகிறோம். இதன் விளைவாக, விடலைப்பருவத்தில்கூட தன் உடலைப் பற்றிய புரிதல் இல்லாமல், நம் அடுத்த தலைமுறை மனக் குழப்பத்தில் சிக்கிக்கொள்கிறது.

அண்மையில், மகளிர் கல்லூரி ஒன்றில் வாழ்க்கைக் கல்வி வகுப்பு நடத்திய என் சிநேகிதி, ஒரு சாதாரண அன்றாட விஷயத்தைப் பற்றிக் கேட்ட கேள்விக்குப் பதில் தெரியாமல் ஏராளமான 18 வயதுப் பெண்கள் விழித்தார்கள். கேள்வி என்ன தெரியுமா? மலம் கழித்த பின், ஆசனவாய்ப் பகுதியைக் கழுவும்போது பெண்கள் எப்படிக் கழுவிக்கொள்ள வேண்டும்? முன்புறத்திலிருந்து பின்புறம் நோக்கிக் கழுவ வேண்டுமா?

'எப்படிக் கழுவினால் என்ன?' என்பதுதான் பரவலான பதிலாக இருந்தது. அப்படியல்ல..! உடலின் உறுப்புகள் அமைந்துள்ள விதத் துக்கும் கழுவும் முறைக்கும் தொடர்பு இருக்கிறது.

பொதுவாக, ஆண்களைவிடப் பெண்களுக்கு அதிகமாக சிறுநீர் தடத்தில் தொற்று ஏற்படும் பிரச்னைகள் அதிகம். இதற்கான காரணங்களில் ஒன்று, மலம் கழித்தபின் கழுவும் முறை.

பெண் உடலில் முதலில் இருப்பது சிறுநீர் வெளியேறுவதற்கான துளை. அடுத்து அமைந்திருப்பது, உடலுக்குள் இருக்கும் கருப்பையை நோக்கிச் செல்லும் யோனிக்குழாயின் நுழைவாயில். மூன்றாவதாக பின்புறத்தில் அமைந்திருப்பதுதான் ஆசனவாய்.

தண்ணீரால் கழுவிக்கொள்ளும் போது பின்பக்கத்திலிருந்து முன்பக்கம் நோக்கிக் கையை வீசித் துடைத்தால், அசுத்த நீர், யோனிக் குழாய்க்குள்ளும் சிறுநீர்ப் பாதைக்குள்ளும் சென்று தொற்று ஏற்படுத்தும் ஆபத்து உண்டா கும். எனவே, கை முன்புறம் வராமல், பின்புறம் நோக்கியே செல்லும்வித மாகக் கழுவ வேண்டும்.

இந்தப் பிரச்னை ஆண் உடலுக்கு இல்லை. சிறுநீர், விந்து

வெளியேறும் துளைகள் திறந்த அமைப்பில் இல்லாமல் குழாய் வடிவத்தில் இருப்பதால், தொற்று ஏற்படும் வாய்ப்பு இல்லை.

ஐந்து வயதுப் பெண் குழந்தைக்கு டாய்லெட் ஹேபிட்டுகளை ஏற்படுத்தும்போதே இந்த அடிப்படை ஆரோக்கிய வழிமுறையைச் சொல்லித் தர வேண்டும்.

தொடர்ந்து வேறு கேள்விகள் கேட்கத்தான் செய்வார்கள்.

'அப்பா வயித்துல ஏன் குழந்தை இல்லே?'

'அப்பாவும் உன் தம்பிப் பாப்பா மாதிரியே ஆம்பளை இல்லியா? அதனால, குழந்தை வெளில வர்றதுக்கு ஹோல் கிடையாது. அதனாலதான் அப்பா வயித்துல குழந்தை இருக்காது' என்று பதில் சொல்லலாம்.

ஆறு வயது தொடங்கி எட்டு வயதாவதற்குள் குழந்தைகளுக்குப் பாலியலின் அடிப்படைகள் கொஞ்சம் புரியத் தொடங்கிவிடும். இப்போது இவர் களைக் குழந்தைகள் என்று வர்ணிப்பதே தவறான சொற்பிரயோகம்தான். சிறுவன், சிறுமி என்றே அழைக்கப் படவேண்டிய இவர்களுக்கு இப்போது ஆண்-பெண் வேறுபாடுகள் நன்றாகவே தெரியும்.

இருவருமே இப்போது தங்கள் பாலினரோடே அதிகம் பழகுவார்கள். எதிர் பாலினரைத் தவிர்ப்பார்கள். ஆம்பளைத்தனம் இல்லாத ஆணையும் பொம்பளைத்தனம் இல்லாத பெண்ணையும் கேலி செய்வதுகூட நடக்கும். எது ஆம்பளைத்தனம், எது பொம்பளைத்தனம் என்பதற்கான வரையறைகளை இவர்கள் உருவாக்கிக்கொண்டது எப்படி? சுற்றிலும் இருக்கும் பெரியவர்களான நம்மிடமிருந்துதான்!

செக்ஸ் பற்றி தங்களுக்கு நெருக்கமான பெரியவர்களிடம் சின்னச் சின்னதாகக் கேள்விகள் கேட்பார்கள் சிறுவர்கள். அவற்றைப் பெரியவர்களான நாம் இரண்டு விதமாக எதிர்கொள்கிறோம். கேள்வியே காதில் விழாதது போல நழுவிவிடுவோம். அல்லது, இந்த மாதிரி கெட்ட கெட்ட கேள்வியெல்லாம் கேட்காதே என்று கடிந்துகொள்வோம்.

தங்கள் கேள்விகள் எந்தெந்தப் பெரியவர்களுக்கெல்லாம் சங்கட மாக இருக்கிறது என்பது சிறுவர்களுக்குப் புரிந்துவிடும். அதன்பின், அந்தப் பெரிவர்களிடம் அந்தக் கேள்விகளை மறுபடி கேட்கவே மாட்டார்கள். அதிலிருந்துதான் ஆபத்து ஆரம்பிக்கும்!

ஏனென்றால், எட்டு வயதில் ஒரு சிறுவனுக்கும் சரி, சிறுமிக்கும் சரி... ஆணும் பெண்ணும் சேர்ந்து 'ஏதோ' ஒரு செயலால்தான் குழந்தை பிறக்கிறது என்பது நன்றாகவே தெரிந்திருக்கும். அந்த 'ஏதோ' என்ன என்பது பற்றித்தான் சரியாகத் தெரியவில்லை. ஆனால், அந்த 'ஏதோ'வை தூண்டிவிடக்கூடிய ஹார்மோன்கள், அடுத்த ஓரிரு ஆண்டுகளில் அந்தச் சிறுவர்களின் உடலில் வேகமாக வேலை செய்யத் தொடங்கிவிடும்.

ஆணும் பெண்ணும் செய்யும் அந்த 'ஏதோ' என்ன என்பதைப் பற்றிய மனக் குறுகுறுப்புக்குப் பதில்களை வீட்டுக்கு வெளியில் தேடத்தொடங்குவது இந்த வயதில்தான். பள்ளிக்கூட வகுப்புத் தோழர்கள் முதல் மீடியா வரை ஏராளமான செக்ஸ் டீச்சர்கள்(?) பெற்றோரின் உதவி இல்லாமலே அவர்களுக்குக் கிடைத்துவிடுகிறார்கள்.

எட்டாம் வகுப்பு சிறுவன் ஒருவன் அண்மையில், வாழ்க்கைக் கல்விப் பயிலரங்கம் ஒன்றில் என்னிடம் சொன்னான்... ''சார், இவனுக்கு மூணு விரைக்கொட்டை இருக்கு சார்!'' சுட்டிக்காட்டப்பட்ட சிறுவன் வெட்கத்துடன் 'ஆம்' என்று தலையாட்டினான். இன்னொருவன் கேட்டான்... ''எங்களுக்கும் அப்படி முளைக்குமா சார்?''

## இன்றைய ஹோம் வொர்க்:

1. பெண் குழந்தைக்கு ஆசனவாயைக் கழுவிவிடும் முறை பற்றி உங்களுக்கு எப்போது முதன்முதல் தெரியவந்தது?
2. குழந்தை வெளிவரும் பாதையும் சிறுநீர்ப் பாதையும் வெவ்வேறானவை என்பதை எந்த வயதில் தெரிந்துகொண்டீர்கள்?

3. 'அப்பா வயித்துல ஏன் குழந்தை இல்லே?' என்ற கேள்விக்கு என்ன பதில் சொல்லியிருக்கிறீர்கள்?

4. ஆணும் பெண்ணும் சேர்ந்து 'ஏதோ' செய்வதால்தான் குழந்தை பிறக்கிறது என்பது முதலில் எப்போது உங்களுக்குத் தெரியவந்தது?

5. அந்த 'ஏதோ' என்பது என்ன என்று தெளிவாகத் தெரிந்துகொண்டது எப்போது?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!




# செக்ஸ் சரியா, தப்பா?

எல்லாச் சிறுவர்களுக்கும் இருப்பதுபோல, தனக்கு இரண்டு விரைக் கொட்டைகள் இருப்பதற்குப் பதிலாக மூன்று உள்ளதாகப் பயிலரங்கில் தெரிவித்த சிறுவனிடம், 'இப்படி ஒரு பிரச்னை இருப்பது, உன் பெற்றோருக்குத் தெரியுமா?' என்று கேட்டேன். 'தெரியாது. இதுவரை சொல்லவில்லை' என்றான். முதலில் பெற்றோரிடம் தெரிவித்துவிட்டுப் பிறகு மருத்துவரிடம் ஆலோசிக்கும்படி சொன்னேன். இதுவரை அவன் பெற்றோருக்கு இது பற்றி ஏன் தெரியாமலே இருந்தது என்று யோசித்தேன். எல்லாருமே யோசிக்க வேண்டும்.

வகுப்புத் தோழனிடம் இதைச் சொன்ன சிறுவன், ஏன் தன்

பெற்றோரிடம் சொல்லவில்லை? இதற்குப் பல காரணங்கள் உள்ளன.

முதல் காரணம், இப்படிப்பட்ட விஷயங்களை அப்பாவிடமோ, அம்மாவிடமோ பேசத் தயங்கும் சூழ்நிலை வீட்டுக்குள் இருப்பது தான். செக்ஸ், பிறப்பு உறுப்புகள் தொடர்பான எந்த விஷயத்தைப் பற்றியும் லேசாக ஏதாவது பேசினாலே, அம்மாவும் அப்பாவும் எரிச்சல் அடைகிறார்கள்; அல்லது தர்மசங்கடமாக நெளிகிறார்கள்; பேச்சை மாற்றுகிறார்கள்; தவிர்க்கிறார்கள் என்பதையெல்லாம் எட்டு வயதுச் சிறுவனும் சிறுமியும் கூர்மையாகக் கவனிக்கிறார்கள். எனவே, அதையொட்டி தாங்களும் இவை தொடர்பான சின்னச் சின்னப் பிரச்னை களைக்கூட அப்பா, அம்மா மற்றும் வீட்டுப் பெரியவர்களிடம் பேசுவதைத் தவிர்த்துவிடுகிறார்கள். வகுப்புத் தோழன், தோழிகளிடம்தான் அடுத்து இதைப் பற்றி சங்கடமில்லாமல் பேச முடியும் என்று உணர்கிறார்கள்.

எட்டு வயதை அடையும்போது ஒரு சிறுவனும் சிறுமியும் முன்போல தங்கள் பெற்றோர் தங்களை முத்தம் கொடுத்துக் கொஞ்சுவது, அணைப்பது போன்றவற்றைத் தவிர்க்கத் தொடங்கு கிறார்கள். அதிலும் பிறர் எதிரில் இப்படிக் கொஞ்சுவது, அவர்களை கூச்சப்படுத்துகிறது. இதற்கெல்லாம் காரணம், தங்கள் உடலைப் பற்றிய பிரக்ஞை அவர்களுக்கு அதிகரித்து வருவதுதான். கூடவே, இன்னொரு ஆற்றலும் இப்போது அவர்களுக்கு வந்துவிடுகிறது. அழுகை, சிரிப்பு, மகிழ்ச்சி, கோபம் என எல்லா உணர்ச்சிகளையும் கட்டுப்படுத்தவும், மறைக்கவும் கற்றுக் கொள்கிறார்கள்.

எட்டு வயதில் தனக்கென்று ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் ஒரு கருத்து சிறுவனுக்கும் சிறுமிக்கும் உருவாக ஆரம்பித்துவிடுகிறது. அது சரியா, தவறா என்பது முக்கியமல்ல. ஆனால், எதைப் பற்றியும் தன் கருத்து என்ற ஒன்றை உருவாக்கிக் கொள்ளும்போதுதான் ஒவ்வொருவருக்கும் அவருடைய தனிப்பட்ட பர்சனாலிட்டி எனப்படும் ஆளுமை உருவாக ஆரம்பிக்கும்.

அந்தப் பருவத்தில்தான் எட்டு வயதுச் சிறுவனும் சிறுமியும் இருக் கிறார்கள். படிப்பு, விளையாட்டு, எதிர்காலத்தில் டாக்டர் ஆவதா,

தலைவர் ஆவதா, ரஜினி பிடிக்குமா, கமல் பிடிக்குமா, அசின் ரசிகனா, த்ரிஷா ரசிகனா, ஜெட் டெக்ஸா, போகோவா என்பதைப் பற்றியெல்லாம் கருத்து இருப்பது போல, செக்ஸ் எனப்படும் பாலியல் தொடர்பான விஷயங்கள் பற்றியும் அவர்களுடைய கருத்துக்கள் இப்போது உருவாகத் தொடங்குகின்றன.

எட்டு வயது முதல் சிறுவன் - சிறுமி மனதில் உருவாகும் செக்ஸ் பற்றிய கருத்துக்கள் எப்படி உருவா கின்றன என்பதைக் குடும்பமும், நண்பர்களும், மீடியாவும், அறிந்தும் அறியாமலும்(!) மிகப் பெரும் அளவில் முடிவு செய்கின்றன.

குடும்பம், செக்ஸ் பற்றிப் பேசுவதைத் தவிர்த்து சிறுவர்களை அந்நியப்படுத்துகிறது. மீடியாவோ அதைப் பற்றிக் கவர்ச்சியாகப் பேசி, சிறுவர்களுடன் நெருக்கமாகி விடுகிறது. நண்பர்கள் தங்களுடைய முழுக் குழப்பங்களையும், அரை அறிவுகளையும் பகிர்ந்துகொள்கிறார்கள். எங்கிருந்தும் சரியான, முறையான தகவல்கள் கிட்டாதவர்களாகவே நம் சிறுவர்கள் வளர்கிறார்கள்.

செக்ஸ் பற்றிய குடும்பத்தின் தயக்கத் துக்கும் மீடியாவின் கவர்ச்சிக்கும் அடிப்படையாக இருப்பது அருவருப்பு, ஆசை என்ற இரு உணர்ச்சிகள்தான். இயற்கையில் செக்ஸ் உறுப்புகள் மனித உடலில் கழிவு உறுப்புகளுக்கு அருகில் அமைக்கப்பட்டு இருக்கின்றன. எனவே சிறுநீர், மலம் ஆகிய கழிவுப் பொருட் களுக்கு நிகராகவே, இனப்பெருக்கம் தொடர்பான உடல் சுரப்புகளான ஆணின் விந்து, பெண்ணின் சினைமுட்டை வெளியேற்றமான மாத விலக்கு ஆகியவை இழிவான கழிவுகளாகத் தவறாகக் கருதப் படுகின்றன. ஆனால், இனப்பெருக்கம் என்பதும், உடல் உறவின் சுகம் என்பதும் மனித இனத்தின் தேவைகள். எனவே, கழிவு உறுப்புடன் தொடர்புபடுத்திய அருவருப்பு மனநிலையைக் கடந்து வர, மிகைப்படுத்தப்பட்ட கவர்ச்சி, செக்ஸுக்கு ஏற்றப்படுகிறது.

மனித வரலாற்றில், நாகரிக வளர்ச்சி யில் முக்கிய பாத்திரம் வகிக்கும் மதங்கள் அனைத்துமே, செக்ஸைத் தவிர்க்க இயலாத பாவமாகவே கருதுகின்றன. அது கெட்ட விஷயம்; தப்புக் காரியம். ஆனால், மனித இனம் அழியாமல் இருக்க, வேறு

வழியில்லாமல் அதைப் பின்பற்றியாக வேண்டியிருக்கிறது என்ற அணுகுமுறையையே மதங்கள் முன்வைத்திருக்கின்றன.

குடும்பம், இந்த மன நிலையை சிறுவர்கள் மனதில் விதைக்கிறது. படிக்கிற வயதில் பையனும் பெண்ணும் 'தீய' சிந்தனைகள் வராமல் படிப்பில் கவனம் செலுத்துவது எப்படி என்ற பெற்றோரின் மனத் தவிப்புக்குப் பின்னால், ஆட்சி செலுத்தும் கோட்பாடு, செக்ஸ் 'தீயது' என்பதுதான். ஆனால் வயது வந்தபின், செக்ஸ் தரும் சுகத்துக்கான ஆசையும், நமது வம்சம் தழைக்க வேண்டும் என்ற விருப்பமும் அருவருப்பு - பாவக் கருத்தி லிருந்து செக்ஸை மீட்க முயற்சிக்கின்றன. அங்கேதான் மீடியாவின் கவர்ச்சிப் பூச்சு உவந்து ஏற்கப்படுகிறது. இந்த இரு நிலைகளுக்கும் இடையே நமது சிறுவர்கள் சிக்கிக் கொண்டு இருக்கிறார்கள், நாம் நமது சின்ன வயதில் சிக்கியிருந்தது போல!

இன்று உண்மையில் இது டீன் ஏஜ் சிக்கல் அல்ல! டீன் ஏஜ் எனப்படும் 13 வயது தொடங்கும் முன்பே, 9 வயதிலிருந்தே உடலில் ரசாயன மாற்றங்கள் ஆரம்பித்துவிடுகின்றன. பல்வேறு சமூக, சுகாதார காரணங் களால், இன்று சிறுமிகள் பூப்பெய்தும் வயது 10, 9 எனக் குறைந்து வருகிறது.

9 வயதில் முதல் மனச்சிக்கல் - சுய இன்பம் எனப்படும் 'மாஸ்ட்ருபேஷன்' பற்றியதுதான். 'ஐயையே, எங்க பசங்க அதெல்லாம் செய்ய மாட்டாங்க' என்று நம்பிக்கொண்டு இருக்கும் பெற்றோர் கவனிக்கவும் - நம் வீட்டு சிறுமியும், சிறுவனும் கோடியில் ஒருவராக இருந்தால்தான் அது சாத்தியம்!

சுய இன்பம் அனுபவிக்கும் முயற்சியில் ஈடுபட்டு அதில் மகிழ்ச்சி அடைந்து, மீண்டும் மீண்டும் அந்த அனுபவத்துக்கு முயற்சிக்கும் ஒவ்வொரு சிறுமியும் சிறுவனும் கூடவே கடுமையான மன உளைச் சலில் சிக்கித் தவிக்கிறார்கள்.

'இது சரியா? தப்பா?' என்பது ஒழுக்கம் சம்பந்தப்பட்ட மன உளைச்சல்.

'இது ஆரோக்கியமானதா? ஆபத்தானதா?' என்பது பயத்தின் அடிப்படையில் எழும் மன உளைச்சல்.

யாரைக் கேட்பார்கள் நம் சிறுவர்கள்?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. பள்ளிக்கூடம் செல்லும்போது முத்தம் கொடுத்து அனுப்புவதை உங்கள் அம்மா நிறுத்தியது எந்த வயதில்?
2. அம்மா, அப்பா முத்தம் கொடுப்பதை நீங்கள் கூச்சமாக உணரத் தொடங்கியது எந்த வயதில்?
3. செக்ஸ் என்றால், அது ஏதோ தப்பான விஷயம் என்று முதன்முதலில் எந்த வயதில் உங்களுக்குத் தோன்றியது?
4. அது ஒன்றும் தப்பான விஷயம் அல்ல என்று எந்த வயதில் நினைக்கத் தொடங்கினீர்கள்?
5. சுய இன்பம் அடைய முயற்சித்ததுஉண்டா? ஆமெனில் எந்த வயதில்?
6. அது குறித்து பயம் இருந்ததா? அந்தப் பயம் எந்த வயதில் போயிற்று?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல,
உங்களுக்கானவை... உங்களுடையவை!

(தொடராக இந்தக் கட்டுரைகள் வெளிவந்துகொண்டிருந்தபோது வாராவாரம் வாசகர்களிடமிருந்து ஏராளமான கடிதங்களும் தொலைபேசி அழைப்புகளும் வருவது வழக்கம். ஒன்பதாவது கட்டுரை வந்த இதழில் கீழ்வரும் அறிவிப்பை வெளியிட்டேன்:

வாசகர்களுக்கு ஒரு வேண்டுகோள்!

கடந்த எட்டு இதழ்களாக வெளிவரும் இந்தக் கட்டுரைத் தொடரில், பொதுவாக நாம் தவிர்க்கிற, சொல்லவும் எழுதவும் தயங்குகிற சொற்களும் விஷயங்களும் ஓரளவு இடம்பெறுவதைக் கவனித்திருப்பீர்கள். இந்தத் தொடர் வாசகர்களுக்குப் பயனுள்ள தாக இருக்க வேண்டும் என்ற நோக்கம் முழுமையாக நிறைவேறுவதற்கு இந்த அணுகுமுறை அவசியப்படுகிறது. தொடர்ந்து இந்தத் தொடரில் உடல் பாகங்கள் பற்றிய ஓவியங்களும், விளக்கங்களும், நாம் அதிகம் பயன்படுத்தாத, ஆனால், அறிந்தாக வேண்டிய சொற்களும் இனி வரும் அத்தியாயங்களில் தேவைப்படுகின்றன.

நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? சரி/ வேண்டாம்/ ஏன் சரி/ ஏன் வேண்டாம் என்பது பற்றிய உங்கள் கருத்தை உடனடியாகக் கடிதம் மூலம் அனுப்புங்கள். தொடரைச் செழுமைப்படுத்த உங்கள் கருத்து உதவியாக இருக்கும்.

கடிதங்கள் வந்து குவிந்தன. என்ன எழுதினார்கள் என்பதை அத்தியாயம் 11ல் பார்ப்போம்)

அத்தியாயம் 10

# பருவ(வ)க் கோளாறு?

செக்ஸ் என்றால் என்ன என்று அதன் முழுப் பொருளையும் தெரிந்துகொள்ளும் வயதும் அறிவும் அனுபவங்களும் வாய்க்கும் முன்பே, பிறப்பு உறுப்புகளைத் தானே தொட்டு சுய இன்பம் அனுபவிக்க முடியும் என்பது மட்டும் ஒன்பது வயதிலிருந்தே தெரிய ஆரம்பித்துவிடுகிறது!

அறிந்தும் அறியாமலும் அனுபவிக்கும் இந்த இன்பம், சரியா தப்பா, உடலுக்கு நல்லதா கெட்டதா என்ற கேள்விகள் இளம் மனங்களை வாட்டுகின்றன. இது பற்றி யாரைப் போய் கேட்பார்கள் நம் சிறுவர்கள்?

தொலைக்காட்சியைத் திருப்பினால், வைத்தியர்கள் சிலர்

ஓயாமல் மிரட்டிக்கொண்டே இருக்கிறார்கள். எதிர்கால இந்தியாவின் தூண்கள் எல்லாமே சுய இன்பத்தால் உளுத்துப் போய் இற்று விழுந்துகொண்டு இருக்கின்றன... அதைக் காப்பாற்றியே தீர வேண்டும் என்பதே தங்கள் வாழ்க்கையின் லட்சியம் என்கிறார்கள்.

அவர்கள் சொல்வது சரியா தவறா என்று யாரிடம் சென்று கேட்பது? குடும்பமாக உட்கார்ந்து 'தீப்பிடிக்க... தீப்பிடிக்க' பார்க்கும் 'பக்குவம்' மட்டும்தான் நமக்கு வாய்த்திருக்கிறதே தவிர, சுய இன்பம் பற்றிக் கூடி விவாதிக்கும் சூழல் வரவில்லை. பள்ளி சகாக்களிடம் கேட்டால், இன்னும் குழப்புகிறார்கள். ஆசிரியர்களிடம் கேட்கலாமா?

ஆசிரியர்களின் இன்னொரு முகம் பெற்றோர் என்பதுதானே! எனவே, பெற்றோர்களுக்கு இது குறித்து இருக்கும் தயக்கம், பயம், எரிச்சல், எல்லாம் அவர்களுக்கும் உண்டு. விதிவிலக்கான மிகச் சில ஆசிரியர்கள் மட்டுமே சிறுவன் - சிறுமிகளின் முக ஓட்டத்திலிருந்தே மனக் கிலேசத்தை அடையாளம் கண்டு, தனியே அழைத்து ஆறுதலாகப் பேசி, தெளிவுபடுத்தக் கூடியவர்களாக இருக்கிறார்கள்.

ஆனால், மிகப் பெரும்பான்மையான ஆசிரியர்கள் செக்ஸ் தொடர்பான சிறுவர்களின் ஐயங்களைக்களையும் பொறுப்பு தங்களுடையது அல்ல என்பதில் தீர்மானமாக இருக்கிறார்கள். இந்தச் சூழலில் சுய இன்பம் பற்றிய ஒன்பது வயதுச் சிறுவர்களின் கவலைகளை யார் தீர்ப்பது?

ஆசை வெட்கமறியாது என்பார்கள். அறிவும் வெட்கமறியாது என்று ஆக வேண்டும். எதையும் அறிந்து கொள்ள வேண்டுமானால், வெட்கமும் கூச்சமும் உதவாது. அதேபோல எதையும் சரியாகக் கற்பிக்கவும், வெட்கமும் கூச்சமும் கூடாது.

முதலில் 9-லிருந்து 12 வயதுக்குள் உடலில் என்னென்ன மாற்றங்கள் ஏற்படுகின்றன என்பதைத் தெரிந்து கொள்வோம். அப்போதுதான், இந்த வயதில் தொடங்கும் சுய இன்பப் பழக்கம் பற்றியும் புரிந்துகொள்ள முடியும்.

'நான் வளர்கிறேனே மம்மி' என்று சொல்லிக் கவனிக்க வேண்டிய தேவையில்லாமல், கண்ணை உறுத்தும் வேகத்தில் இப்போது வளர்ச்சி நிகழ்கிறது. சிறுமிகளுக்கு முதலிலேயே தொடங்கிவிடும்.சிறுவன்களுக்கு உடல் வளர்ச்சி அதிக வருடங்கள் நீடிக்கும். உடலில் இருக்கும் பிட்யூட்டரி எனப்படும் சுரப்பியிலிருந்து பையன்களுக்கு டெஸ்டோஸ்ட்ரோன் சுரக்கும். சிறுமிகளுக்கு ஈஸ்ட்ரோஜென்/ப்ரோஜெஸ்ட்ரோன் சுரப்புகள் ஆரம்பிக்கும். இந்தச் சுரப்புகள் பொதுவாகச் சிறுமிகளுக்கு 9 வயதிலும், பையன்களுக்கு 11 வயதிலும் தொடங்கும்.

பருவக் கோளாறு என்று தப்பாக இன்றும் சொல்லப்படும் பருக்கோளாறு ஆரம்பிப்பது இப்போது தான். முகத்தில் பருக்கள் உண்டானதும், 'யார் மனசுல யாரு?' என்ற அசட்டு ஆராய்ச்சிகள் வகுப்பறை யிலும் வீட்டிலும் தொடங்கும். பருவுக்கும் மனசுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. செக்ஸ் ஹார்மோன் சுரப்புகளால் தோலில் எண்ணெய்ப் பசை அதிகரிப்பதுதான் பருவுக்கான காரணம். ஆளுக்கு ஆள் இது வேறுபடும். வாழ்க்கையில் பருவே வராத பெரும் காமுகர்களும் உண்டு.

வேர்வை அதிகமாகும். நம் உடலுக்கென்று ஒரு வாசனை அல்லது நாற்றம் அமையத் தொடங்குவதும் இந்த வயதில் தான். மீசை அரும்பும். அக்குளிலும் தொடை இடுக்கிலும் பிறப்புறுப்புகளைச் சுற்றிலும் முடி முளைக்கும். உடலின் கன பரிமாணங்கள் மாறும். பையன்களுக்குத் தோள் அகலமாகும். சிறுமிகளுக்கு இடுப்பு அகலமாகும். மார்பகங்கள் சற்றே பெரிதாகத் தொடங்கும். முலைக்காம்பைச் சுற்றிய வட்டம் கறுக்கும். இரு பாலாருக்கும் பிறப்பு உறுப்பைச் சுற்றிய பகுதி கறுக்கும்.

உடல் வளர்ச்சி வேகமாக இருப்பதால், சிறுவர்களுக்கு மூட்டு வலிகள் ஏற்படும். அடிக்கடி உடல் வலிக்கிறது. காலைப் பிடித்து விடு, கையைப் பிடித்து விடு என்று 'குழந்தைகள்' அம்மாவிடம் சொல்வார்கள். இந்த வயதில் ஏன் இவனு/ளுக்கு உடம்பு வலி என்று அம்மா மனம் பதறும். குளிக்கப் போனால் சீக்கிரம் வெளியே வருவதில்லை. பாத்ரூமிலிருந்து பாட்டு உற்சாகமாகக்

கேட்கும். பாட்டு நின்ற பிறகும் கதவு திறப்ப தில்லை. குளியலறையில் சுய இன்பத்தில் குழந்தைகள் ஈடுபடுகிறார்களோ என்ற சந்தேகம் அம்மாவுக்கு வலுக்கும். இப்படிக் 'கெட்ட' காரியங்கள் செய்வதால்தான் உடல் வலிக்கிறது என்ற முடிவுக்கு வரத் தோன்றும்.

இந்த வயதில் சிறுவர்கள் மேலும் சுதந்திரமாக இருக்க, சிந்திக்க, முடிவெடுக்க விரும்புவார்கள். விளையாட்டிலிருந்து படிப்பு பற்றிய அக்கறை அதிகமாகும். எதிர்காலத்தில் என்ன ஆகப்போகிறோம் என்பது பற்றியெல்லாம் யோசிக்கவும் பேசவும் தொடங்குவார்கள். குடும்பத்தினரை விட நண்பர் வட்டத்துக்கு அதிக முக்கியத்துவம் தர ஆரம்பிப்பார்கள். மற்ற ஆண்களைப் போல தானும் இருக்க வேண்டுமென்ற விருப்பம் சிறுவனுக்கும், இதர பெண்களைப் போல தானும் இருக்கும் ஆசை சிறுமிக்கும் அதிகரிக்கும். சமூகம் சார்ந்த பல நுட்பமான விஷயங்களைப் புரிந்துகொள்ளும் ஆற்றல் இப்போது தொடங்கிவிடும்.

இந்த வயதில் சின்னஞ்சிறு வீட்டுப் பொறுப்புகளையெல்லாம் கையில் ஒப்படைத்தால், சிறுவர்கள் கச்சிதமாகச் செய்து முடிப்பார்கள். 'எல்லாம் எவ்வளவு பொறுப்பா செய்யுது பிள்ளை! ஆனா, எப்பப் பார்த்தாலும் ஃப்ரெண்ட்ஸோடவே சுத்தினா எப்படி?' என்று அங்கலாய்க்க வைப்பார்கள்.

உண்மையில் இந்த வயதில் சிறுவர்களின் உடல் மட்டுமல்ல, மனமும் வேகமாக வளர்ச்சி அடைகிறது. சுயேச்சையான பெரிய மனிதர்களாக சீக்கிரம் ஆகிவிட வேண்டும் என்ற துடிப்பு இருக்கும். சட்டென்று எந்த உணர்ச்சிக்கும் ஆளாவார்கள். வெடிச் சிரிப்பு, திடீர்க் கோபம் இரண்டும் எங்கிருந்து வந்ததென்று வியக்கிற மாதிரி வரும். வீட்டில் எந்த அளவுக்கு தனக்குச் சுதந்திரம் இருக்கிறது என்பதைச் சின்னச் சின்னதாக சோதித்துப் பார்த்துக்கொண்டே இருப்பார்கள்.

திடீரென மாதவிலக்கு ஏற்பட்டு தன் உடலில் எதிர்பாராத இடத்தில் ரத்தத்தைச் சந்திக்கும் சிறுமியின் மன அதிர்ச்சியும்,

இரவு தூங்கி காலையில் விழிக்கையில் ஜட்டியும் பெட்ஷீட்டும் நனைந்திருப்பதை அம்மா கவனித்ததும், சிறுவனுக்கு ஏற்படும் பயம் கலந்த வெட்கமும் சாதாரணமானவை அல்ல. ஆனால், இவையெல்லாம் இயற்கையானவை; இயல்பானவை. அவர்கள் ஆரோக்கியமாக இருக்கிறார்கள் என்பதன் அடையாளங்கள்தான் என்று அவர்கள் உணர்ந்துகொள்ளும் வரை மனக் குழப்பம் நீடிக்கத்தான் செய்யும்.

தாமாகவே உணர்வார்களா? அதற்கு எத்தனை காலம் பிடிக்கும்? அதுவரை எப்படிப்பட்ட குழப்பங்கள் எல்லாம் ஏற்படும்? நாம் உணர்த்துவது எப்படி? எப்போது?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. டி.வி-யில் செக்ஸ் பிரச்னைகளுக்கு மருந்துகள் சொல்லும் வைத்தியர்களிடம் எப்போதேனும் நீங்களோ, உங்களுக்குத் தெரிந்தவர்களோ சென்ற அனுபவம் உண்டா?
2. செக்ஸ் பற்றிய உங்கள் கருத்துக்களையும், அந்த வைத்தியர்களின் கருத்துக்களையும் ஒப்பிட்டுப் பார்த்தது உண்டா?
3. பள்ளிக்கூடத்தில் எந்த ஆசிரியராவது செக்ஸ் விஷயங்களைப் பற்றி உங்களிடம் பேசியது உண்டா?
4. 'அந்த மாதிரி' விஷயங்களை உங்களுடன் முதன்முதலில் பேசிய மூத்த மனிதர் யார்? அந்தப் பேச்சு உங்களுக்கு எப்படி இருந்தது?
5. முகப் பருவுக்கும், செக்ஸ் உணர்ச்சிக்கும், காதலுக்கும் சம்பந்தம் இருப்பதாக எப்போதேனும் நினைத்திருக்கிறீர்களா?
6. குளியலறையை செக்ஸ் சிந்தனை/செயல்களுக்கான இடமாக சிறுவராக இருந்தபோது பயன்படுத்தியிருக்கிறீர்களா? ஒருவேளை, அப்படிப் பயன்படுத்தியிருந்தால், அந்த அனுபவங்கள் எப்படிப்பட்டவையாக இருந்தன என்று இப்போது நினைக்கிறீர்கள்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 11

# ஷூட்டிங்கைச் சொல்லுங்க ஷூட்டி

அண்மையில், இணையத்தில் ஓர் ஆங்கிலக் கவிதை படித்தேன். சென்னைத் தொலைக்காட்சிக்காக நான் இயக்கிய, எழுத்தாளர் சுஜாதாவின் 'பூக்குட்டி' டி.வி. படத்தில், விம்முவாக நடித்த ஆறு வயதுக் குழந்தை சம்யுக்தா, இப்போது 18 வயதுப் பெண். அவர் எழுதியிருந்த கவிதைதான் அது.

பல வருடங்களுக்குப் பின், அவரை இணையத்தின் வலைப் பூக்களில் இப்படிப் படிக்க நேர்ந்தபோது இன்ப அதிர்ச்சியாக இருந்தது. அவருடைய கவிதை பூப்பெய்தியதைப் பற்றியது. இதோ என் சுமாரான மொழிபெயர்ப்பில்...

‘நவம்பர் காலை
ஒரு பெண்ணின் தலைவிதி
என்னைத் தாக்கியது.
நான்
ஆம்பளைத்தனமான அராத்துமல்ல
அழுமூஞ்சி உம்மணாமூஞ்சியுமல்ல
நான்-நான்தான்.
நான் நிஜமாகவே புன்னகைத்தேன்.
ரொம்பவும் உற்சாகமாக இருந்தது.
நான் வளர்ந்துவிட்டேன்
கழிவறையிலிருந்து
சிரிப்பும் ஓட்டமுமாகப் போய்
என் சகோதரியிடம் சொன்னேன்
அவளும் அப்பாவும்
உதவிகள் செய்தார்கள்
குடும்பமே மகிழ்ச்சியில்.
அதிர்ஷ்டமோ இல்லையோ
எனக்கு முன்பே தெரியும்
அது ஏன் நிகழ்கிறது
எப்படி நிகழ்கிறது என்பதெல்லாம்.
ஒரு மகிழ்ச்சியான தினம்
கடும் வலிகளும்
குழப்பங்களும் இல்லை.
நான் ஓர் அதிர்ஷ்டசாலி என்று
நான் அறிந்துகொண்ட நாள்!’

இந்தக் கவிதையைப் படித்தவுடன், எனக்கு எழுத்தாளர் அம்பையின் ‘அம்மா ஒரு கொலை செய்தாள்’ சிறுகதை மனதில் எழுந்தது. முதல் மாதாந்திர ரத்தப்போக்கு ஏற்பட்டதும், இயல்பாக தாயிடம் ஆதரவு தேடுவாள் ஒரு சிறுமி. தகவல் கேட்டதும், தாய் வெளிப்படுத்திய அங்கலாய்ப்பில் சிறுமியின் மனம் சுருங்குவது பற்றிய அற்புதமான கதை. அந்தக் கதை வெளியாகி 30 ஆண்டுகளுக்கும் மேலாகிறது. மூன்று தலைமுறைகளுக்குப் பின் வந்த சம்யுக்தாவின் கவிதை நேர்

எதிரான இன்னொரு மன நிலையைக் காட்டுகிறது.

சம்யுக்தாவின் கவிதையில் சொல்லப்படும் 'அதிர்ஷ்டம்'தான் என்ன? தனக்கு என்ன நேர்கிறது என்பதை உணர்ந்திருக்கும், அறிந் திருக்கும் அதிர்ஷ்டம்தான். இன்றும் பெரும்பாலான குடும்பங்களில் சிறுமி பூப்பெய்துவது சடங்காக, விழாவாகக் கொண்டாடப்படுகிறது. சாதிக்கும் வசதிக்கும் ஏற்ப விழாவின் தன்மை இருக்கிறது.

9-லிருந்து 12 வயதுக்குள் சிறுமிகள் பூப்பெய்துவது இயற்கையானது. நமது மரபான சடங்குகளும், நவீனமான சினிமாவும் இந்த இயற்கையான நிகழ்ச்சியைப் பெண்ணுக் குச் சிக்கலானதாக ஆக்கிவைத்திருக்கின்றன. ஏதோ ஒரு ஆணுக்காக வேண்டியே இந்தச் சிறுமி சமைந்து, சடங்காகி, 'ஆளாகி'த் தயாராக இருப்பதாக ஒரு கருத்தாக்கம் பலமாகத் தலைக்குள் ஏற்றப்படுகிறது. ஆங்கிலத்தில் மென்ஸ்ட்ருவேஷன் (MENSTRUATION) எனப்படும் இந்த நிகழ்வுக்குத் தமிழில் இன்று சகஜமாகப் புழங்கும் சொற்களான 'மாதவிலக்கு', 'தூரம்', 'தீட்டு' என்பவை எதுவுமே சரியான சொற்கள் அல்ல. எல்லாமே மரபான பார்வையிலிருந்து வருபவை. அந்த நாட்களில் பெண் வீட்டிலிருந்து விலக்கிவைக்கப்பட வேண்டியவள், விலகி நிற்க வேண்டியவள் என்ற சடங்கு சார்ந்த கருத்தாக்கத்திலிருந்தே அந்தச் சொற்கள் வருகின்றன. மாதாந்திர ரத்தப்போக்கு அல்லது மாதக் கசிவு போன்ற சொற்களே ஓரளவு சரியானவை. இன்னும் பொருத்தமான சொற்கள் உருவாக்கப்பட வேண்டியுள்ளன.

இப்படிப்பட்ட சூழலில், முதல் மாதக் கசிவு ஏற்பட்ட சிறுமியைச் சுற்றிச் சடங்குகளும் விழாக்களும் நடக்கின்றனவே தவிர, அவள் உடலுக்குள் என்ன நடக்கிறது என்பதை அவளுக்குத் தெளிவாக எடுத்துச் சொல்வது மட்டும் நம் குடும்பங்களில் நடப்பது இல்லை. சத்தான உணவு வகைகளைச் சாப்பிட வேண்டும் என்று சிறுமிக்குச் சொல்லப்படுவதைத் தவிர, சடங்குகளில் அவளுக்குப் பயனுள்ள தகவல் அறிவு எதுவும் புகட்டப்படுவது இல்லை. தங்கள் பெண் திருமணத்துக்குத் தயார் என்று உறவுக்கும் ஊருக்கும் அறிவிக்கும் தேவை இருந்த அன்றைய காலச் சூழலில், சமூகச் சூழலில்

உருவாக்கிக்கொள்ளப்பட்ட மஞ்சள் நீராட்டு விழா சடங்குகள், இன்றைய சிறுமிக்கு அதிக குழப்பத்தையும் சங்கடங்களையுமே ஏற்படுத்துகின்றன.

மூளையின் கீழ்ப் பகுதியில் வேர்க்கடலை சைஸில் பதுங்கியிருக்கும் பிட்யூட்டரி சுரப்பி, மாதாந்திர ரத்தப்போக்கு தொடங்குவதற்குச் சுமார் இரண்டு வருடங்களுக்கு முன்பிருந்தே இதற்கான ஆயத்தங்களைத் தொடங்கிவிடுகிறது. மூளையில் இருக்கும் ஹைப்போதாலமஸின் உத்தரவின்படிதான் பிட்யூட்டரி செக்ஸ் ஹார்மோன்களைச் சுரக்க ஆரம்பிக்கிறது.

முதல் உத்தரவு, சிறுமியின் உடலில் இருக்கும் சினைப்பைகளுக்கு! 'நீ முட்டைகளைத் தயாரிக்க ஆரம்பி' என்ற உத்தரவு சுரந்ததும், சினைப் பைகள் அதைச் செய்யத் தொடங்குகின்றன. இதன் தொடர் விளைவாக உருவாகும் இன்னொரு ஹார்மோன்தான், ஈஸ்ட்ரோஜன். ரத்தத்தில் ஈஸ்ட்ரோஜன் அதிகமானதும், அதன் தூண்டுதலில், இன்னொரு ஹார்மோனைச் சுரக்கும்படி பிட்யூட்டரிக்கு உத்தரவிடுகிறது ஹைப்போதாலமஸ். அதுதான் எல்.ஹெச் எனப்படும் லூட்டினைசிங் ஹார்மோன்.

சிறுமியின் சினைப்பையில் உருவாக்கப்பட்ட முட்டைகளைப் பத்திரமாகக் கருப்பைக்கு அனுப்பிவைப்பது எல்.ஹெச்சின் பொறுப்பு. எல்.ஹெச் சினைப்பைக்குப் போய், முட்டை பொதிந்திருக்கும் ஃபாலிக்கிள் எனப்படும் மெல்லிய உறையை உடைத்து, முட்டையைக் கருப்பை நோக்கிய பயணத்துக்கு அனுப்புகிறது.

உடைந்த ஃபாலிக்கிள் தன் கடமைப்படி இன்னொரு திரவத்தைச் சுரக்கிறது. அதுதான் ப்ரோஜெஸ்ட்ரான். கருப்பைக்குச் சென்று, அதன் உள் சுவரைப் பூசி மெழுகி வைப்பது இதன் வேலை. இளநீரில் வழுக்கை எப்படி உட்புறம் நெடுக ஒட்டியிருக்கிறதோ, அது போல உள்வரி சவ்வாக கருப்பையின் சுவரில் ஒட்டியிருக்கும் இந்த மெழுகல்! ஒவ்வொரு மாதமும் 15 நாட்கள் இந்த உட்புற சவ்வு மெதுவாக உப்பி தடிமனாகிக்கொண்டு இருக்கும்.

எதற்காக இந்த மெழுகும் வேலை தெரியுமா? ஆணின் உடலில் இருந்து பெண்ணின் உடலுக்குள் (உடல் உறவின்போது)

செலுத்தப்படும் விந்தில் இருக்கும் உயிர் அணுக்களில் ஏதோ ஓர் உயிரணு ஒருவேளை ஏதேனும் ஒரு பெண் முட்டையைக் கருப்பையில் சந்தித்துவிட்டால், அந்த முட்டை ப்ளஸ் உயிரணு, கருவாக மாறும் அல்லவா? அந்தக் கருவைப் பத்திரமாக வைத்திருக்கத்தான் கருப்பையின் உட்சுவர் 'ப்ரொ'வால் மெழுகித் தயாராக வைக்கப்படுகிறது.

உடல் உறவு இல்லை; விந்தின் வருகை இல்லை; உயிரணுவும் பெண் முட்டையும் சந்திக்கும் வாய்ப்பே இல்லை; எனவே, கருத்தரிக்கும் வாய்ப்பும் இல்லை என்கிற நிலையில், இந்த உட்புற சவ்வு கலையத் தொடங்குகிறது. அது கலைகையில், அதன் ரத்த நாளங்களிலிருந்து ரத்தம் கசிய ஆரம்பிக்கிறது.

இந்த ரத்தமும், கலைந்த உள்வரி சவ்வின் பகுதிகளும்தான் பெண்ணின் யோனிக் குழாய் வழியே வெளியேறுகின்றன. மாதந்தோறும் நிகழும் இந்த ரத்தப்போக்குதான் மென்ஸ்ட்ருவேஷன்.

தன் உடலுக்குள் இவையெல்லாம் நடப்பதை ஒரு சிறுமிக்கு சொல்லித் தருவதற்குப் பதில், அவளை அலங்கரித்து காட்சிப் பொருளாக உட்கார வைத்து, பணத்தை மொய்யாக எழுதி, பொய் களை சினிமாப் பாட்டாக எழுதி... லூட்டினைசிங் ஹார்மோன் பற்றிப் பேசாமல் வேறு ஏதோ லூட்டி அடித்துக்கொண்டு இருக்கிறோம் நாம்.

சாப்பிட்ட உணவு வயிறு, இரைப்பை, குடல்கள் வழியே பயணித்து, சக்தியை உடலுக்கு அளித்துவிட்டு, எஞ்சிய மலத்தை வெளியே அனுப்பி வைக்கும் ஜீரணப் பாதையின் செயல்வரிசையை விரிவாகப் படிப்பது போல, இனப்பெருக்க உறுப்புகளில் நிகழும் நிகழ்ச்சி நிரலைக் கற்பிக்க வேண்டாமா?

சிறுமியின் உடலில் இத்தனை மாற்றங்கள் மாதந்தோறும் நிகழ்வது போல சிறுவனின் உடலில் என்ன நிகழ்கிறது? எப்படி நிகழ்கிறது? அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்:

வாசகர் கருத்துகள் வந்து குவிந்தபின் 11ம் அத்தியாய இறுதியில் இந்தக்கடிதத்தை வெளியிட்டேன்:

மதிப்புக்குரிய வாசகர்களுக்கு,

வணக்கம். நெகிழ்ச்சியாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கிறது - வந்து குவிந்துகொண்டு இருக்கும் உங்கள் கடிதங்களைப் படிக்கும்போது!

''இந்தத் தொடர் வாசகர்களுக்குப் பயனுள்ளதாக இருக்க வேண்டும் என்ற நோக்கம் முழுமையாக நிறைவேறுவதற்காக, இனி இந்தத் தொடரில் உடல் பாகங்கள் பற்றிய ஓவியங்களும், விளக்கங்களும், அதிகம் பயன்படுத்தப்படாத ஆனால் அறிந்தாக வேண்டிய சொற்களும், இனி வரும் அத்தியாயங்களில் தேவைப்படுவது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டிருந்ததற்கு உங்களிடமிருந்து வந்துகொண்டு இருக்கும் கடிதங்கள், செல்பேசிக் குறுஞ்செய்திகள், மின்னஞ்சல்கள், தொலைபேசி அழைப்புகள் எல்லாமே, தமிழகத்தில் மக்கள் மனங்களில் ஒரு மௌனப் புரட்சி நிகழ்ந்துகொண்டு இருப்பதை உணர்த்தும் ஆவணங்களாகத் திகழ்கின்றன.

குழந்தைப் பருவம் முதலே வாழ்க்கைக் கல்வியும் தரப்பட வேண்டியதன் அவசியத்தை விதவிதமாக வலியுறுத்தி உங்களிட மிருந்து கடிதங்கள் வந்துள்ளன. அப்படித் தரப்படாததன் விளைவுகளை விரிவாகச் சிலர் சொல்லியிருக்கிறீர்கள். 'எங்களுக்குக் கிடைக்காமல் போன அந்தக் கல்வி, எங்கள் வாரிசுகளுக்கேனும் கிட்ட வேண்டும்' என்கிற ஆதங்கத்தை அழுத்தம் திருத்தமாகப் பலரும் பகிர்ந்திருக்கிறீர்கள். முறையான பள்ளிக் கல்வித் திட்டத்திலேயே பாலியல் கல்வி உள்ளிட்ட வாழ்க்கைக் கல்வி, ஓர் அங்கமாக ஆக்கப்பட வேண்டும் என்று அடித்துச் சொல்லும் குரல்களே அதிகம்.

எண்ணற்ற கடிதங்களுக்கு ஒரு சோறு பதமாக, சில கடிதங்களை மட்டும் இங்கே பகிர்வோம்.

'திருமணமாகி 50 ஆண்டுகளான எனக்கு இப்போது 77

வயதாகிறது. பெண்ணின் பிறப்புறுப்பில், சிறுநீர் வெளியேறவும் உடல் உறவுக்கும் தனித்தனியாகத் துளைகள் உள்ளதை இப்போது தான் அறிகிறேன். எனக்கு வேண்டிய ஒருவரிடம் இது பற்றி சற்று வெட்கத்துடன் நான் பேசியபோது, அவரும் என்னைப் போன்று இதைப் பற்றி அறியாதவராக இருப்பதைக் கண்டு ஆச்சர்யப்பட்டேன். சொல்லவும் எழுதவும் தயங்கித் தவிர்க்கிற விஷயங்களில் இன்னும் தெரியாதவை பல இருப்பதை உங்கள் தொடர் மூலம் அறிகிறேன். தொடர்ந்து எழுதுங்கள்' என்று உடைத்துப் பேசுகிறது, உடையார்பாளையத்திலிருந்து வந்திருக்கும் மூத்த ஆண் வாசகர் ஒருவரின் கடிதம்.

திருவல்லிக்கேணியிலிருந்து ஒரு வாசகி எழுதுகிறார்... 'வாராவாரம் வீடு தேடி வரும் ஒரு பாடத்திட்டமாகவே இதனை நான் கருதுகிறேன். பெற்றோருடைய அச்சமும் மாயையும் விலகினால்தான், பிள்ளைகளுக்குப் பகுத்தறிவு புகட்ட முடியும். சிறுநீரும், மலமும், அவற்றைக் கழிக்க உதவும் உறுப்புகளும் அருவருப்பானவை அல்ல; அவை இயற்கையானவை என்று, இந்தத் தொடரைப் படித்த பின்பு என் மகனுக்கு (வயது 6) சொல்லிக் கொடுத்துள்ளேன்.'மேலும் பல இளைஞர்கள் (இரு பாலாரும்) செக்ஸ் பற்றிய தங்கள் மனக் குழப்பங்களைக் களைவதில் இந்தத் தொடர் பெரும் உதவி புரிவதாக எழுதியிருக்கிறார்கள். பல நடுத்தர வயதினர், முதியவர்கள் தங்களுடைய அனுபவங்களை எழுதிப் பகிர்ந்துகொண்டதோடு, இந்த வாழ்க்கைக் கல்வி தங்களுக்குக் கிட்ட எத்தனைத் தாமதமானது என்பதை வேதனையுடன் கூறியிருக்கிறார்கள்.

மிக மிகச் சொற்பமான கடிதங்கள் மட்டுமே இந்தத் தொடர் பற்றியும் படங்கள், சொற்கள் பற்றியும் கவலை தெரிவித்திருக்கின்றன. அதே சமயம், அந்த அச்சங்களும் கவலைகளும் தேவையற்றவை என்பதைப் பல வாசகர்கள் தங்கள் கடிதங்களில் விளக்கியிருக்கிறார்கள்.

'இத்தகைய தொடரை வெளியிடும் விகடன், இதை எழுதும் கட்டுரையாளர் இருவரின் கடமை மற்றும் பொறுப்பு உணர்ச்சியை நாங்கள் அறிவோம். எனவே, நீங்கள் இது பற்றி எங்களிடம் கேட்டிருக்கவே தேவையில்லை' என்ற அழுத்தமான நம்பிக்கை அந்தக் கடிதங்களில் அடிநாதமாக ஒலிப்பதைக் கண்டு பெருமையும்

மகிழ்வும் ஏற்படுகிறது.

அந்தப் பொறுப்பு உணர்ச்சியுடனும், அடுத்த தலைமுறைக்கு நாம் ஆற்ற வேண்டிய கடமையைத் தெளிவாக ஒளிவு மறைவின்றி ஆற்றும் அக்கறையுடனும் இந்தப் பயணத்தைத் தொடர்வோம். தொடர் வளர வளர, உங்கள் மனதில் மலரும் கருத்துக்களை உடனுக்குடன் எங்களோடு பகிர்ந்துகொள்ள வேண்டுகிறேன்!

## ஆண் உடலமைப்பில் பாலுறுப்புகள்

(பக்கவாட்டுத் தோற்றம்)




1. சிறுநீர்ப்பை
2. பிராஸ்டேட் சுரப்பி
3. விந்துக் கடத்தி நாளம்
4. சிறுநீர்ப் பாதை
5. லிங்கம் (ஆண்குறி)
6. நுனித்தோல்
7. விரை(த)
8. விரை(த)பைகள்
9. சுருள் விந்துக் குழாய்கள்
10. விந்து சேகரப்பை

# பெண் உடலமைப்பில் பாலுறுப்புகள்

(வெளிப்புற பிறப்புறுப்பு)




1. கொழுப்புத் திசுக்கள்
2. வெளிப்புறத் தோல் மடிப்புகள் (வெளி உதடு)
3. உள்புறத் தோல் மடிப்புகள் (உள் உதடு)
4. மலத்துவாரம் ஆசனவாய்
5. யோனித் துவாரம்
6. சிறுநீர்த் துவாரம்
7. கந்து




(உள் உறுப்புகள்)

1. சினைக்குழாய்
2. சினைப்பை
3. கருப்பை
4. யோனிக்குழாய்
5. யோனி வாயில்

அத்தியாயம் 12

# சிறுவன் வயசுக்கு வருவது எந்த தினம்?

சிறுமிகள் வாழ்க்கையில் ஒன்பதிலிருந்து 12 வயதுக்குள் ஏதோ ஒரு நாள், அவள் பூப்பெய்தியதை அவளுக்கும் உலகத்துக்கும் அறிவிக்கும் நாளாக அமைந்துவிடுகிறது. பெண்ணின் உடற்கூறு அமைப்பே இதற்குக் காரணம்.

ஆனால் ஒரு சிறுவன் வயதுக்கு வந்த நாளாக எதைக் கொள்வது? தன் உடலுக்குள் நிகழும் புதிய மாற்றங்களை அவன் உணர்ந்து கொண்ட நாளாகத்தான் அது இருக்க முடியும். அது எந்த நாள்? குரல் தடிப்பதையும் பிறப்புறுப்புகளைச் சுற்றிலும், தோள் குழியிலும், முகத்திலும் முடி முளைப்பதையும் அவன்

கண்டு கொண்ட நாளா? அம்மாவைக் கட்டிப் பிடித்துக் கொண்டு படுப்பதற்கு கூச்சமாக உணர்ந்த நாளா? தன் பிறப்புறுப்புகளைக் கையால் தடவிப் பார்க்கும்போது சுகமாக இருப்பதாக அறிந்த நாளா?

அறிந்தோ அறியாமலோ தன் உடலில் இருந்து விந்து எனப்படும் ஆண் உயிர் திரவம் வெளிப்பட்டதை சிறுவன் அறியும் நாளா?

சிறுமி வயதுக்கு வந்ததை அவள் உடல் உணர்த்தியதை அவள் அம்மாவிடம் சொல்லி, அம்மா அப்பாவுக்குச் சொல்லி, அதை கலாசார சடங்காகக் கொண்டாடுவது போல, சிறுவன் தனக்கு விந்து வெளிப்பட்டதை போய் அப்பாவிடம் சொல்லி அது கொண்டாட்டச் சடங்காக ஆக்கப்படும் வாய்ப்பேது? அது ஒரு விபரீதக் கற்பனையாகவே கருதப்படும்.

தனக்கு விந்து வெளிப்பட்டதை யாரிடமும் போய்ச் சொல்ல ஒரு சிறுவன் கூச்சப்படும், வெட்கப்படும் நிலையில், அது ஏன் நடக்கிறது என்று சரியாக, அறிவியல்பூர்வமாக அறிந்துகொள்ள வழியில்லாமல் இருக்கிறது. ஒரு சிறுவனுக்கு தன் உடல் பற்றி ஏற்படும் எண்ணற்ற சந்தேகங்களில் ஒன்று - ஏன் தன்னைப் போன்ற 'ஆம்பளை'களுக்கு மட்டும் சிறு நீர் கழிப்பதற்கான உறுப்பு உடலுக்கு வெளியில் தொங்குகிறது ? இரு புறமும் இருக்கும் விரைப்பைகள் எதற்காக ? அவற்றில்தான் சிறு நீர் உற்பத்தியாகி வெளிவருவதாகக் கருதும் சிறுவர்களும் உண்டு!

இனப் பெருக்க உறுப்புகள் குழந்தை கருவில் இருக்கும் போதே உருவாகிவிடுகின்றன. ஆண் குழந்தை தாயின் கருப்பைக்குள் இருக்கும் போது அதன் விதை(ர)க் கொட்டைகள் முதலில் உடலுக்குள்ளேயே இருக்கின்றன. கரு வளரும் கடைசி இரண்டு மாதங்களில்தான் அவை வெளிப்புறம் உள்ள விதை(ர)ப்பைக்குள் பொருந்திக் கொள்கின்றன.

விதைப் பைகள் வெளிப்புறம் இருப்பதற்குக் காரணம் அவற்றில் இருக்கும் விதைகள்தான் உயிரணு திரவமான விந்துவை தயாரிக்கின்றன. இதற்கு தேவைப்படும் வெப்ப நிலை, உடலின் வெப்பத்தை விடக் குறைவாக இருக்க வேண்டும். அதற்காகத்தான்

இயற்கை இந்த ஏற்பாட்டை செய்திருக்கிறது.

வெப்ப நிலையை சீராக வைத்திருப்பதற்காக, இந்த விதைப்பைகள் வெளி வெப்பம் அதிகமானால் விரிவடையும். வெளியில் குளிரானால் விதைப்பை சுருங்கிக் கொள்ளும். இந்த மாற்றங்களை நம்மால் உணரக் கூட முடியாது. ஆனால் இவை தொடர்ந்து நடக்கின்றன.

எப்போதிலிருந்து சிறுவனின் உடலில் விந்து தயாராகத் தொடங்குகிறது ? சுமாராகப் பத்து வயதுக்கு மேல்தான். சிறுமிகளுக்கு இனப்பெருக்க ஆயத்தங்கள் உடலுக்குள் தொடங்கும் வயதை விட சிறுவன்களுக்கு சற்று தாமதமாகவே ஆரம்பிக்கும். இருவருக்கும் இதற்கான உத்தரவு வருவது மூளையில் ஹைப்போதலமஸின் கீழ்ப் பகுதியில் பதுங்கியிருக்கும் வேர்க்கடலை சைசிலான பிட்டியூட்டரி சுரப்பியிடமிருந்துதான்.

பிட்டியூட்டரியிலிருந்து வரும் சுரப்புகள் ஒரு விதைக் கொட்டைகளுக்கும் வந்து அவற்றை ஆண் ஹார்மோனாகிய டெஸ்ட்டெஸ்டேரோனை சுரக்கச் செய்கின்றன. இந்த சுரப்புதான் சிறுவன் உடலில் பல வளர்ச்சி மாற்றங்களைத் தொடர்ந்து ஏற்படுத்துகிறது.

முதல் கட்டத்தில் விதைப்பையும் விதைகளும் பெரிதாகின்றன. ஒவ்வொரு விதையும் முட்டை வடிவில் 5 செ.மீ நீளமும் 3 செ.மீ சுற்றளவும் உடையவை. எபிடிடிமிஸ் எனப்படும் சுருள் விந்துக் குழாய்கள் ஒவ்வொரு விதையின் பக்கவாட்டிலும் உள்ளன. இவை சுருள் சுருளாக இருக்கும். அவை வாஸ் டெஃபெரென்ஸ் எனப்படும் விந்துக் கடத்தி நாளங்களுடன் இணைந்திருக்கின்றன. இந்தத் தசை நாளங்கள் உடலின் கீழே தோங்கும் விதையிலிருந்து, உடலுக்குள் சிறுநீர்ப் பை எனப்படும் யூரினரி பிளாடரின் பக்கவாட்டில் இருக்கும் பிராஸ்டேட் சுரப்பி, விந்துச் சேகரப் பைகள் இரண்டுடனும் சென்று சேர்கின்றன. விதையில் உருவாகும் விந்து திரவத்தை இந்த நாளங்கள் கொண்டு வரும்போது பிராஸ்டேட் சுரப்பியும், விந்து சேகரப் பையும் மேலும் சில திரவங்களை சேர்த்து அனுப்புகின்றன.

இப்போது விந்து சிறு நீர்ப் பையிலிருந்து சிறு நீரை வெளியேற்றி எடுத்துச் செல்லும் யுரீத்ரா எனப்படும் சிறு நீர்ப் பாதை வழியாகவேதான்ஆண் குறிக்கு சென்று வெளியேற்றப்படும். சிறு நீரை அனுப்புவது பிளாடர். விந்துவை அனுப்புவது விதைப்பையும் அதன் துணை சுரப்பிகளும். இரண்டையும் வெளியேற்றுவது ஆண் குறி.

ஆண் குறி என்று நவீன மொழியிலும் லிங்கம் என்று மரபு மொழியிலும் சொல்லப்படும் வெளியேற்றுக் குழாயின் நுனிப்பகுதி சற்றே விரிந்து காணப்படும். கிளான்ஸ் எனப்படும் இந்தப் பகுதியை மூடியிருக்கும் மேல் தோல் சுருளக்கூடியதாக இருக்கும். இந்த மேல் தோலை அறுவை சிகிச்சை செய்து நீக்குவதைத்தான் சுன்னத் செய்வது என்று இஸ்லாமிய மத சடங்காகக் குறிப்பிடுகிறோம். இப்படி ஆண் குறியின் மேல் தோலை நீக்கும் பழக்கம் உலகில் பல பகுதிகளில் பல்வேறு இனக்குழுக்களில் உண்டு.

ஆண் குறியில் தொற்றுகள் ஏற்படாமல் காப்பாற்ற, நுனிப்பகுதியில் மேல் தோலின் அடியில் அழுக்கு சேராமல் குளிக்கும்போது தூய்மைப்படுத்த வேண்டும் என்பதை பல அம்மாக்களும் அப்பாக்களும் சிறுவர்களும் அறியாமலே இருக்கிறார்கள் என்பதை அண்மையில் அறிந்து அதிர்ச்சியடைந்தேன்.

ஒரு பயிலரங்கில் குளிக்கும் முறை பற்றிக் கேட்டபோது, பல பத்து வயதுச் சிறுவர்கள் தாங்கள் ஜட்டியைக் கழட்டாமலேதான் குளிப்போம் என்று சொன்னார்கள். கடைசியாக துவட்டிக் கொள்ளும்போது டவலைச் சுற்றிக் கொண்டு ஜட்டியைக் கழற்றி எறிவோம் என்றார்கள். அதாவது தங்கள் பிறப்புறுப்பு பகுதியை தாங்கள் பார்ப்பதைக் கூட அவர்கள் விரும்பவில்லை ! ஷேம் ஷேம் பப்பி ஷேமின் உச்சம் இது.

ஒவ்வொரு சிறுவனும் சிறுமியும் தங்கள் உடலை ஐயம் திரிபற அறிய வேண்டும். உடல் நமது கருவி. கருவி மட்டுமல்ல. அதுதான் நாம். உடல் இல்லாமல் உள்ளம் இல்லை.

ஒரு சிறுமியின் உடலில் சினைப் பைகள் முட்டை தயாரிப்பதும், அதைக் கருப்பைக்கு அனுப்பி வைப்பதும், ஆண் உயிரணு

வந்து அதை சந்தித்துக் கருத்தரித்தால் கருவை வளர்க்க தயார் நிலையில் கருப்பை இருப்பதும் அப்படி எதுவும் நிகழாவிட்டல், உதிரப்போக்காக எல்லாம் வெளியேற்றப்படுவதும், மாதம் தோறும் நடக்கிறது என்று பார்த்தோம்.

இதே போல ஒரு சிறுவனின் உடலில் விந்து தயாராவதும் அது ஒரு பெண் உடலில் புகுந்து கருத்தரிப்புக்கு செல்லாவிட்டால், சுய இன்பம் மூலமாகவோ தன்னிசையாக இரவுக் கனவுகளினாலோ வெளியேற்றப்படுவது எத்தனை நாளைக்கு ஒரு முறை நிகழ்கிறது? இதற்கும் காலக் கணக்கு உண்டா?

## இன்றைய ஹோம் ஒர்க்:

**பெண்களுக்கு:**

1. பூப்பெய்தியதும் அதை யாரிடம் சொன்னீர்கள்?
2. அவர்களுடைய பதில்வினைகள் உங்களுக்கு எந்த உணர்வை ஏற்படுத்தின?
3. இது தொடர்பாக வீட்டில் செய்யப்பட்ட சடங்குகள், கொண்டாட்டங்களின்போது உங்கள் மன நிலை என்னவாக இருந்தது?
4. ஏன் ரத்தப் போக்கு ஏற்படுகிறது என்பதற்கான முழு விளக்கத்தை எப்போது, எந்த வயதில், யாரிடமிருந்து தெரிந்துகொண்டீர்கள்?
5. ஆண்களின் இனப் பெருக்க உறுப்புகளைப் பற்றி முதலில் எப்போது தெரிந்து கொண்டீர்கள்? அந்த அனுபவம் அருவெறுப்பாக இருந்ததா? அறிவுப்பூர்வமாக இருந்ததா?

**ஆண்களுக்கு :**

1. பள்ளிப் பருவத்தில், உங்களுக்குத் தெரிந்த சிறுமி பூப்பெய்திய தகவல் கேட்டதும் அது பற்றி அப்போது என்ன உணர்வு ஏற்பட்டது?

2. பூப்புச் சடங்குகளில் கலந்து கொள்ளும்போது உங்கள் மன உணர்வுகள் என்ன?
3. உங்கள் வீட்டில் சகோதரி/அம்மா/மனைவி ஆகியோரின் மாதப் போக்கின்போது உங்கள் உதவிகள் என்ன?
4. ஏன் பெண்களுக்கு ரத்தப் போக்கு ஏற்படுகிறது என்பதற்கான முழு விளக்கத்தை எப்போது, எந்த வயதில், யாரிடமிருந்து தெரிந்துகொண்டீர்கள்?
5. முதன் முதலில் உங்கள் உடலிலிருந்து விந்து வெளியேறியது எப்போது, எப்படி என்பது நினைவிருக்கிறதா? அன்றைய மன நிலை என்ன? அது பற்றி இன்றைய மன நிலை என்ன?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை.. உங்களுடையவை !

அத்தியாயம் 13

# மகன் தாய்க்குத் தந்த பரிசு!

இந்தியாவில் இன்று சிறுமிகள் பூப்பெய்தும் வயது குறைந்து கொண்டே வருகிறது. இதற்குப் பல மருத்துவ, சமூகவியல் காரணங்கள் சொல்லப்படுகின்றன. உணவு முதல் மீடியா வரை இதற்குப் பொறுப்பு என்கிறார்கள்.

டெலிவிஷனிலும், சினிமாவிலும், பத்திரிகைகளிலும்தொடர்ந்து பார்க்கக்கூடிய ஆண் - பெண் உறவு தொடர்பான பிம்பங்கள் மூளையின் பிட்யூட்டரி சுரப்பியைத் தூண்டி, செக்ஸ் ஹார்மோன்களை முன்கூட்டிச் சுரக்கச்செய்வதாகக் கருதப்படுகிறது. மீடியாவின் பொறுப்பு, தரம் எல்லாம் ஒருபுறம் நமது கவலைக்கும், அக்க றைக்கும், தலையீட்டுக்கும் உரியவை. என்றாலும், தங்கள்

மனதுக்கும் உடலுக்கும் என்ன நிகழ்கிறது என்பதை அறிவுபூர்வமாக நமது சிறுவர்களை உணரச் செய்வதே உடனடியாகத் தேவைப்படும் தீர்வு.

ஒரு சிறுமியின் உடலில், சுமார் 10 வயது முதல் சினைமுட்டை தயாரிப்பு தொடங்கிவிடுகிறது. ஒரு சிறுவனின் உடலில் சுமார் 12 வயது முதல் உயிரணுக்கள் அடங்கிய விந்து தயாரிப்பு தொடங்கிவிடுகிறது. இருவரும் இந்த வயதில் செக்ஸ் தொடர்பான ஜோக்குகளை அரைகுறை யாகவேனும் புரிந்துகொள்ளும் ஆற்றலுடன் இருக்கிறார்கள். சுமார் 13 வயதில், உடலின் இனப் பெருக்க உறுப்புகள் எல்லாமே முழுமையான வளர்ச்சியடைந்து விட்ட நிலையில் இருக்கும்.

பெண்ணுக்கு 40 முதல் 50 வயதுக்குள் உடலின் சினை முட்டைத் தயாரிப்பு பணி ஓய்ந்துவிடுகிறது. ஆணுக்கு சுமார் 70 வயதில்தான் விந்து உற்பத்தி குறைகிறது. விதிவிலக்குகளாக ஒரு சிலருக்கு 80, 90 வயதிலும் ஒரு பெண்ணைக் கருத்தரிக்கவைக்கும் ஆற்றலுடன் உள்ள உயிரணு உற்பத்தி நிகழலாம்.

சராசரி ஆயுட்காலம் இன்று 70 வயது என்று வைத்துக்கொண்டாலும், பெண்ணின் வாழ்க்கையில் சுமார் 40 வருடங்களும், ஆணின் வாழ்க்கையில் சுமார் 60 வருடங்களும் இடைவிடாமல் தொடரும் இந்தச் சினைமுட்டை/விந்து தயாரிப்பு உடலுக்குள் நடப்பதைப் பற்றி ஒவ்வொருவரும் அறிந்துவைத்துக்கொண்டு உடல் ஆரோக்கியத்தைக் காப்பது அவசியம்.

ஒரு சிறுமியின் உடலில் சினைமுட்டை தயாரிப்பு என்பது, 28 நாட்களுக்கொரு முறை நடக்கும் நிகழ்ச்சி! முதல் 7 நாட்களில் சினைப்பையில் முட்டை முதிர்ச்சி அடைகிறது. இதே சமயம் கருப்பையின் உட்சுவர் மெள்ள மெள்ளத் தடிமனாகிறது. அடுத்த மூன்று நாட்கள் சினைமுட்டை வெளிப்படுகிறது. அடுத்த 13 நாட்களில் சினைமுட்டை கருப்பைக்குச் சென்று, ஆணின் உயிரணு வைச் சந்திக்கத் தயாராகக் காத்திருக்கிறது. இந்த 13 நாட்களில் உயிரணுவை அது சந்திக்காத நிலையில், மெள்ளக் கரைகிறது. அடுத்த 5 நாட்கள் கரைந்த சினைமுட்டையும் கருப்பையின் உட் சுவர் பூச்சும் ரத்தப் போக்குடன் வெளியேறுகின்றன. இந்த 5

நாட்கள்தான் 'அந்தக் கஷ்டமான நாட்கள்!'

28 நாட்களுக்கொரு முறை இந்த சுழற்சி, சிறுமியின் வாழ்க்கையில் அவள் கிழவியாகும் வரை நடக்கிறது. ஒவ்வொரு பெண்ணுக்கும் இந்தச் சுழற்சி நாட்களின் எண்ணிக்கை வேறுபடும். பத்துப் பன்னிரண்டு வயதில் பூப்படைந்ததும், உடனே சுழற்சியின் கால அளவு துல்லியமாக நிர்ணயமாகி விடுவதில்லை. பல வருடங் களுக்குப் பின்னர்தான் இந்த சுழற்சிக் காலம் ஒரு பெண்ணுக்கு நிச்சயமாகும்.

ஒவ்வொரு முறை மாதாந்திரப் போக்கு ஏற்படும் முன்னால், சிறுமியின் உடலுக்குள் நிகழும் மாற்றங்களின் விளைவாக, அவள் 'மூட்' மாறுகிறது. எரிச்சல், அசதி இரண்டும் ஏற்படுகின்றன. ரத்தப்போக்கு ஏற்படும் நாட்களில் உடலுக்குள் தசைகள் சுருங்கி விரிவதால், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமான விளைவுகள் ஏற்படுகின்றன. பிசைந்து எடுக்கும் வலி முதல், தலைவலி வரைவெவ்வேறுவிதமான உபாதைகள் ஏற்படுகின்றன. மிக அபூர்வமாக சிலருக்கே வலி எதுவும் இல்லாத நிலை இருக் கிறது.

சிறுமி இந்தச் சமயத்தில் ஆரோக்கியமான உணவுகளைச் சாப்பிட வேண்டும். குறிப்பாக, உணவில் உப்பின் அளவைக் குறைத்துக் கொள்ள வேண்டும். ஏனென்றால் உப்பு, உடலின் திரவங்களை அதிகமாக உறிஞ்சி வெளியேற்றும் தன்மையுடையது. எண்ணெயில் சமைக்கப்பட்ட பலகாரங்களையோ, செயற்கைக் குளிர்பானங் களையோ இந்தச் சமயத்தில் தவிர்ப்பது அவசியம். காரணம், அவை வயிற்றில் வாய்வுத் தொல்லையைக் கிளறிவிடக்கூடியவை. மாதாந்திர ரத்தப்போக்கு சமயத்தில் ஜீரணக் கோளாறுகளையும் சேர்த்துக்கொள்வது சிறுமிக்குச் சித்ரவதையாக இருக்கும்.

உடைகளில் ரத்தப்போக்கு படாமல் ஒற்றி நீக்க, இன்று வகை வகையான சானிட்டரி டவல்கள்/நாப்கின்கள் கிடைக்கின்றன. சானிட்டரி டவல்கள்/நாப்கின்கள் வாங்கும் பொருளாதாரச் சக்தி அற்ற ஏழைச் சிறுமிகள் நிறைந்திருக்கும் நாடு நம்முடையது. நம் பாட்டி காலத்தில் அவை இருக் கவும் இல்லை. நல்ல தூய்மையான துணித் துண்டுகளையே அவர்கள் பயன்படுத்தினார்கள். இன்று தமிழ்நாட்டில் பல மகளிர் சுய உதவிக் குழுக்கள் பஞ்சாலான

நவீன சானிட்டரி நாப்கின்களை மலிவு விலையில் தயாரிக்கும் முயற்சிகளில் ஈடுபட்டு இருக்கின்றன என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி.

இவற்றையெல்லாம் எப்படிப் பயன்படுத்துவது என்பதை விமானத்தில் ஸீட் பெல்ட், ஆக்ஸிஜன் மாஸ்க் அணிவது பற்றியெல்லாம் ஏர்ஹோஸ்டஸ்கள் சொல்லித்தருவது போல, ஐந்தாம் வகுப்பிலேயே சிறுமிகளுக்குப் பள்ளிக்கூடத்தில் ஆசிரியைகள் சொல்லித் தர முடியும். பயன்படுத்திய நாப்கின்களை சுற்றுச்சூழலுக்கு சிக்கல் இல்லாமல் அழிக்கும் விதத்தையும் கற்பிக்க வேண்டும்.

சிறுமிகள் இப்படி மாதந்தோறும் உடல் அவதிகளுக்கு உள்ளாகிறார்கள் என்பது அதே வயதுச் சிறுவர்களுக்கு இன்று அரைகுறையாகத் தெரியும். தலைவலி, கால்வலி போன்ற உடல் உபாதைகளைப் போல இதையும் கருதும் மனப்பக்குவத்தை நம் வீட்டுச் சிறுவனுக்கு ஏற்படுத்த வேண்டும்.

பாலியல் கல்வித் துறையில் ஈடுபட்டு இருக்கும் என் சிநேகிதி பத்மா, தன் வாழ்க்கையின் மிகப் பெரிய மகிழ்ச்சிகளாக வகுப்புகளில் தெரிவிக்கும் இரு நிகழ்ச்சிகளை இங்கே குறிப்பிடுவது பொருத்தமானது. ஒன்று, தன் பிறந்த நாளன்று, 12 வயது மகன் அளித்த பரிசு. அம்மாவுக்கு என்ன பரிசு அளிப்பது என்று யோசித்த அந்தச் சிறுவன், கடைக்குப் போய் வாங்கி வந்து அளித்த பரிசு, சானிட்டரி நாப்கின் பொட்டலம். இன்னொன்று, அவனே தயாரித்து அம்மாவுக்கு அளித்த தேநீர். உலகத்தின் சிறந்த தேநீர் அது!

நம் குழந்தைகளுக்கு - குறிப்பாக, ஆண் குழந்தைகளுக்கு, ஒரு பெண்ணை சக மனுஷியாகக் கருதிச் சமமாக உறவாடப் பயிற்றுவிக்கும் முயற்சிகளில் இத்தகைய நிகழ்ச்சிகள் முக்கியமான மைல் கல்கள்.

அப்பாவுக்குக் கடையில் சிகரெட் வாங்கி வந்து தருவதில் சிறுவர் சிறுமிகளை ஈடுபடுத்துவதை தவறாகக் கருதாத சமூகம், அம்மாவுக்கோ, சகோதரிக்கோ வீட்டுச் சிறுவன் நாப்கின் வாங்கி வந்து தருவதை அருவருப்பாகக் கருதுவது நம் சீரழிந்த மனநிலையின் அடையாளம் அல்லவா?

இதற்கெல்லாம் காரணம், ஆணின் உடற்கூறு பற்றி பெண்ணுக்கும், பெண்ணின் உடற்கூறு பற்றி ஆணுக்கும், கவர்ச்சியும் போதையும் இருப்பதை ஊக்குவிக்கிறோமே தவிர, புரிதலும் அறிதலும் தேவை என்பதை நாம் ஊக்குவிக்கவில்லை.

இருவருக்கும் ஒருவரைப் பற்றி மற்றவருக்கு அரைகுறையாகவே தெரிந்திருக்கிறது. குறிப்பாக, சிறுமிக்கு மாதாந்திர உடல் சிக்கல் இருப்பது பற்றி ஒரு சிறுவனுக்குத் தெரிந்திருக்கக்கூடிய சொற்பமான தகவலைவிடவும் குறைவாகவே, ஒரு சிறுமிக்கு சிறுவனின் உடலில் என்னென்ன நிகழ்கிறது என்பது பற்றித் தெரியும்.

சிறுவனின் உடலில் இனப்பெருக்க உறுப்புகளில் தயாரிக்கப்படும் விந்து என்பது என்ன? தொலைக்காட்சிகளில் தேச இளைஞர்களைக் காப்பாற்றக் கங்கணம் கட்டிக்கொண்டு இருக்கும் வைத்தியர்களின் நிகழ்ச்சிகளைப் பார்த்தால், தமிழ்ச் சிறுமியும் சிறுவனும் பெரும் கலக்கம் அடைவார்கள்.

ரத்தம்தான் விந்துவாகிறது... ஒரு சொட்டு விந்து, இருபது ரத்தத் துளிகளுக்குச் சமம் என்பதில் தொடங்கி, விந்து பற்றி ஏராளமான வதந்திகள் நம் சமூகத்தில் நிலவுகின்றன.

உண்மையில், விந்து என்பது என்ன?

## இன்றைய ஹோம் வொர்க்!

1. உங்கள் மனதில் செக்ஸ் உணர்வைத் தூண்டிய முதல் பிம்பம்/காட்சி எது? ஓவியமா? சினிமா ஸ்டில்லா? அசையும் படமா?
2. நேரில் நீங்கள் பார்த்து, உங்கள் மனதைச் சலனப் படுத்திய நிகழ்ச்சி எது?
3. சானிட்டரி நாப்கின்னை காகிதத்தில் சுற்றித்தான் தரவேண்டும் என்று கடைக்காரரிடம் வலியுறுத்தியதுண்டா?
4. ரத்தம்தான் விந்து என்ற ரீதியில் உங்களிடம் யாரும் சொன்னதுண்டா?
5. உங்களுக்கு ட்ரீம் கேர்ள்/ட்ரீம் பாய் என யாரேனும் உண்டா? யார்? ஏன்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 14

# விந்து: மிரட்டலும் உண்மையும்

ஒரு சிறுமி, தன் உடலிலிருந்து யோனி வழியே ரத்தம் வருவதை முதல் முறை கண்டதும் பயப்படுவது போலவே, ஒரு சிறுவனும் தன் ஆணுறுப்பிலிருந்து வெள்ளை நிறத்தில் ஒரு திரவம் வெளிவருவதை முதல் முறை காணும்போது மிரட்சி அடையத்தான் செய்வான்.

இந்த மிரட்சியைத்தான் பல போலி மருத்துவர்கள் தங்களுக்கு மூலதனமாக்கிக்கொள்கிறார்கள். சிறுமியும் சிறுவனும் தங்களுக்கு நிகழ்வது என்ன என்பதை அறிவியல்பூர்வமாக உணர்ந்துவிட்டால், பல தவறான கருத்துக்கள் தங்கள் தலையை ஆக்கிரமிக்காமல் தப்பிக்கலாம்.

இனப்பெருக்கத்துக்கான அடிப்படைத் தேவைகள் ஆணின் விந்துவும், பெண்ணின் சினைமுட்டையும் என்பதால், இவை அரைகுறையாகவோ முழுமையாகவோ ஆதி காலம் முதல் இலக்கியங்கள், புராணங்கள், இதிகாசங்கள், கர்ண பரம்பரைக் கதைகள் எனப்படும் வாய்மொழி இலக்கியம் என எல்லாவற்றிலும் பூடகமாகக் குறிப்பிடப்பட்டு வருகின்றன. சிவலிங்கம் என்ற கருத்தாக்கமே ஆண் - பெண் உறுப்புகளின் வடிவ அடிப்படையில் உருவாக்கப்பட்ட ஒன்று என மானிடவியல் ஆய்வாளர்கள் முடிவு செய்திருக்கிறார்கள். ஆண் விதை, பெண் நிலம் என்பன போன்ற கவிதைக் குறியீடுகள் எல்லாமே விந்து - முட்டையின் வெவ்வேறு வர்ணனைகள்தான்.

ஆணின் விந்துவை அதன் வெண்ணிற திரவத் தோற்றத்தால், பனித் துளியுடன் ஒப்பிடுவது மிகப் பழங்காலத்திலிருந்தே இருந்து வருகிறது. மழை தவிர, வானிலிருந்து பொழியும்

பனிதான் நிலத்தை (மண்ணை) வளப்படுத்துவதாக ஓர் ஆதி நம்பிக்கை உண்டு. பைபிளில், எந்த அரசன் இளமையின் 'பனி' நிரம்பிய ஆண்மையுடன் இருக்கிறானோ, அவனையே மக்கள் பின்பற்ற வேண்டும் என்று ஒரு சங்கீதத்தில் வருகிறது. சம காலத் திரைப்படப் பாடல், 'பனித் துளி ஒன்று சிப்பியில் விழுந்து வந்தது முத்து என் மன்னவன் சொத்து' என்று சொல்வதெல்லாம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நிலவும் இலக்கிய உருவகத்தின் தொடர்ச்சிதான்.

இலக்கியம் என்பது சுவையான கற்பனை. சமயத்தில் அதில் அறிவியலும் நிஜமும் கலந்திருக்கும். ஆனால், காலம் காலமாக நிலவும் எல்லா கற்பனைகளும் அறிவியல்பூர்வமானவை அல்ல. அப்படிப்பட்ட ஒரு முழுக் கற்பனைதான்... ரத்தம்தான் விந்துவாக மாறுகிறது என்பதும்! ரத்தம் போன்று உடலுக்கு முக்கியமான இன்னொரு திரவம் விந்து என்பதற்கு மேல் இரண்டுக்கும் பொருத்தமில்லை. உடலில் இருக்கும் சிறுநீரும் முக்கியமான திரவம்தான். ஒழுங்காக சிறுநீர் உற்பத்தியாகி வராவிட்டால், ஜீரண உறுப்புகளும் சிறுநீரகமும் சரியாக வேலை செய்யவில்லை என்று

பொருள். சிறுநீரும் விந்துவும் ரத்தமும் முக்கியமானவை. ஆனால், ஒன்றிலிருந்து இன்னொன்று உருவானவை அல்ல.

எனவே, விந்து என்பது ரத்தமும் அல்ல; பல சொட்டு ரத்தம் சேர்ந்து உருவானதும் அல்ல! அது உயிரணுக்கள் அடங்கிய ஒரு திரவம். அதில் இருப்பவை அமினோ ஆசிட்கள், சிட்ரேட், என்சைம்கள், சர்க்கரைப் பொருளான ஃபிரக்டோஸ், புரதங்கள், விட்டமின் சி, சிட்ரிக் ஆசிட், பாஸ்பேட்டுகள், துத்தநாகச் சத்து போன்றவை தான்.

உயிரணுவில் இருக்கும் டி.என்.ஏ-வைப் பத்திரமாக வைத்திருப்பது, உயிரணு உறைந்துவிடாமல் அதைப் பெண்ணின் யோனிப் பாதை வழியே கருப்பை வரை எடுத்துச் செல்லும் ஒரு வாகனமாகப் பயன்படுவது, அப்படிச் செல்லும்போது அதைப் பெண் உடலில் உள்ள எதிர்ப்பு அணுக்கள் கொன்றுவிடாமல் காப்பாற்ற உதவுவது என விந்துவில் இருக்கும் பொருட்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு நோக்கமும் பயனும் உடைய, நுட்பமான பல அம்சங்கள் உள்ளன.

ஒரு சிறுவனின் விதைப் பைகள் தினமும் உயிரணுக்களை உற்பத்தி செய்து கொண்டே இருக்கின்றன. எத்தனை உயிரணுக்கள் தெரியுமா? பல கோடி உயிரணுக்கள்! தினசரி!

அவற்றுடன் இதர சுரப்புகளும் சேர்ந்து, அவை முதிர்ச்சியடைய சில வாரங்கள் பிடிக்கும். முதிர்ந்த நிலையில், இதர இனப்பெருக்க உறுப்புகள் சுரக்கும் திரவங்கள் சேர்ந்து, விந்து சேகரப்பைக்குச் செல்லும் திரவத்தைதான் 'செமென்' எனப்படும் விந்து என்கிறோம்.

ஒரு சிறுவனின் உடலில் தினசரி தயாராகும் உயிரணுக்களும் விந்துவும் என்ன ஆகின்றன? சுய இன்பத்தின் மூலம் விந்து வெளியேறலாம். இரவு படுக்கையில் சுகமான கனவுகளின் விளைவாக வெளியேறலாம். இவை இரண்டுமே இல்லாமல், ஒரு சிறுமியின் உடலில் தயாராகும் சினைமுட்டையும், கருப்பையின் உட்புறப் பூச்சும் மாதாமாதம் வெளியேற்றப்படுவது போல, சிறுவனுக்கு இவை இயல்பாக வெளியேற வழிதான் என்ன?

அப்படி எதுவும் இல்லை. விந்துவில் இருக்கும் வெவ்வேறு பொருட்கள் உடலுக்குள்ளேயே கரைந்து கலந்துவிடுகின்றன. புதிது புதிதாக உயிரணுக்களை சிறுவனின் விதைப் பைகள் தயாரித்து அனுப்ப அனுப்ப... புதிய விந்துவும் தயாராகிக்கொண்டே இருக்கிறது.

உடலுறவிலோ, சுய இன்பத்திலோ, இரவுக் கனவிலோ வெளியேற்றப்படும் விந்துவில் வெறும் ஒரு சதவிகிதம்தான் உயிரணுக்கள் எனப்படும் 'ஸ்பெர்ம்' இருக்கிறது. மீதி திரவம் எல்லாம், துணை செய்ய வந்த சுரப்புகள்தான்.

அதிகபட்சம் ஆறு வயது வரைதான் படுக்கையிலேயே சிறுநீர் கழிக்கும் தவறு நிகழும். அதற்குள் 'டாய்லெட் ஹேபிட்' எனப்படும், குறித்த நேரத்தில் கழிவறையைப் பயன்படுத்தும் பழக்கம் ஏற்பட்டு இருக்கும்; பெற்றோரால் ஏற்படுத்தப்பட்டு இருக்க வேண்டும். எனவே, அந்த வயதுக்குப் பிறகு படுக்கையை நனைப்பது என்பது, இரவில் விந்து வெளியேற்றத்தால் நிகழ்வதுதான். ஆங்கிலத்தில் நாக்டர்னல் எமிஷன்ஸ், வெட் ட்ரீம்ஸ் என்று குறிக்கப்படும் இந்த நிகழ்வு சகஜமானது.

10 வயது முதல் டீன் ஏஜ் தொடர்ச்சியாக, எதிரெதிர் பாலினர் இடையே இருக்கும் ஈர்ப்பு என்பது இயற்கையானது. இதே சமயத்தில், சிறுவர்கள் அன்றாட வாழ்க்கையில் தங்களைச் சுற்றிலும் பார்க்கும் விஷயங்களில் காதல், காமம் தொடர்பான ஏராளமான பிம்பங்கள் இருக்கின்றன. வீட்டுக்குள்ளேயே அப்பா - அம்மா, இதர பெரியவர்கள் ஒருவரோடொருவர் நடந்துகொள்ளும் விதத்தில் தொடங்கி, டி.வி., சினிமா, பத்திரிகைகள் போன்ற வற்றில் காணும் பிம்பங்கள் வரை எல்லாவற்றிலும் ஆண்-பெண் உறவு பற்றிய ஈர்ப்பை சிறுவர் மனதில் தூண்டும் அம்சங்கள் இருக்கின்றன.

பெரியவர்கள், சிறுவர்கள் முன்னால் கட்டி அணைப்பது, முத்தமிடுவது, உடைகள் விலகிய நிலையில் ஒன்றாக இருப்பது போன்ற தோற்றங்களை மட்டும் இங்கே நாம் குறிப்பிடவில்லை.

அத்தகைய நிலையை பெரும்பாலான பெரியவர்கள் தவிர்க்கத்தான் செய்வார்கள். வயது வந்தவர்களுக்கிடையே சகஜமாக நிகழும் பரிமாற்றங்கள்கூட, அந்த வயதை நோக்கி வந்துகொண்டு இருப்பவர்களுக்கு உதவும் எதிர்காலத் தயாரிப்புப் பாடங்கள்தான்.

இயற்கையான ஈர்ப்பும், சுற்றிலும் காணும் விதவிதமான ஆண்-பெண் உறவு பற்றிய பிம்பங்களும் சிறுவனையும் சிறுமியையும் தம்மையறியாமலே காமக் கனவுகள் காணவும், நனவில் சுய இன்பம் பெற முற்படவும் தூண்டுகின்றன. கனவுக் கன்னி, ட்ரீம் கேர்ள் என்ற சொற் பிரயோகங்கள் குறிப்பதெல்லாம் பையன்களின் 'நாக்டர்னல் எமிஷன்ஸ'க்கு ஆதாரமாக இருக்கக்கூடிய பிம்பங்களைத்தான்.

சுய இன்பத்தில் ஈடுபடாத சிறுவர்களையோ ஆண்களையோ விரல் விட்டு எண்ணிவிடலாம் என்பது, பலருக்கு அதிர்ச்சி தரக்கூடிய உண்மை. சிறுவர்களில் 90 சதவிகிதம் பேர் சுய இன்பம் அனுபவிக்கிறார்கள்.

சுய இன்பம் பற்றி நம் சமூகத்தில் இருக்கும் சில கருத்துக்களைப் பார்ப்போம்.

அது ஆபத்தானது; தவறானது; சுய இன்பத்தில் ஈடுபட்டால், கண் பார்வை போய்விடும்; சுய இன்பத்தில் ஈடுபடுவோருக்குக் கேன்சர் வரும்; உடல் நலிவு ஏற்படும்; பின்னாளில் திருமணத்துக்குப் பின் மனைவியுடன் மகிழ்ச்சியான உடல் உறவில் ஈடுபடும் சக்தி இல்லாமல் போய்விடும்; சுய இன்பத்தில் விந்துவை விரயம் செய்வதால், விந்து உற்பத்தி குறைந்துவிடும்; சுய இன்பம் செய்தோருக்கு குழந்தைகள் பிறக்கும் வாய்ப்பு குறைந்துவிடும்; பெண் துணை கிடைக்காதவர்கள், திருமணமாகாதவர்கள்தான் சுய இன்பத்தில் ஈடுபடுவார்கள்; பையன்கள்தான் சுய இன்பத்தில் ஈடுபடுவார்கள்; சிறுமிகள் ஈடுபடுவதில்லை...

இவைதான் சுய இன்பம் பற்றி நம் சமூகத்தில் நிலவும் முக்கியமான கருத்துக்கள். இவை எந்த அளவுக்கு உண்மை? எந்த அளவுக்குப் பொய்?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. உங்களுடைய ட்ரீம் கேர்ள்/ட்ரீம் பாய் யார்? ஏன்?
2. இரவுப் படுக்கை 'வெட் ட்ரீம்'ஸில் நனைந்தது தெரியவந்ததும், உங்கள் உணர்ச்சி என்ன? வீட்டில் மற்றவர்களின் உணர்ச்சி என்ன?
3. முதன்முதலில் விந்துவைப் பார்த்தபோது, என்ன உணர்ச்சி ஏற்பட்டது?
4. விந்துவில் என்னென்ன பொருட்கள் இருக்கின்றன என்று உங்களுக்கு எப்போது முதலில் தெரிய வந்தது?
5. சுய இன்பம் பற்றி முதலில் உங்களுக்கு எப்போது தெரியும்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 15

# சுய இன்பம் ஏன்? எதற்கு? எப்படி?

டீன் ஏஜ் தொடங்கும்போதே, எட்டாம் வகுப்பிலேயே பெரும்பாலான சிறுவர்கள் சுய இன்பம் அனுபவிக்கத் தொடங்கி விடுகிறார்கள். உலகத்தின் எல்லா சமூகங்களிலும் ஒரு கால கட்டத்தில், சுய இன்பம் பற்றி அறிவியல் ஆதாரம் இல்லாத கருத்துக்கள் நிலவியிருக்கின்றன. மனித உடற்கூறு பற்றிய அறிவு பெருகப் பெருகத்தான், அவற்றில் பல கருத்துக்கள் தவறானவை என்ற விழிப்பு ஏற்பட்டு இருக்கிறது.

தவறான கருத்துக்கள் ஆதிக்கம் செலுத்திய காலங்களில், சுய இன்பம் அனுபவிக்கும் சிறுவர்களையும் சிறுமிகளையும் பெரியவர்கள் மிரட்டவும், தண்டிக்கவும்கூட செய்திருக்கிறார்கள்.

சுமார் 200 வருடங்களுக்கு முன், சிலர் தங்கள் வீட்டு சிறுமிகள் சுய இன்பம் அனுபவிக்கவிடாமல் தடுப்பதற்காக, இரவு வேளை யில் சிறுமியின் கைகளில் இரும்பு இழைகளாலான கையுறைகளை மாட்டிப் பூட்டியிருக்கிறார்கள். அவளுடைய பிறப்புறுப்பின் மீது, தொட்டால் எரிச்சல் ஏற்படுத்தக்கூடிய ரசாயனப் பொடி தூவியிருக்கிறார்கள். சிறுவனுக்கு பிறப்புறுப்பைத் தொட முடியாமலும், அது எழுச்சி அடைய முடியாத விதத்திலும் இறுக்கமான இரும்பு ஜட்டி அணிவித்துப் பூட்டினார்கள்.

நாகரிக வளர்ச்சியின் அடுத்த கட்டத்தில், இத்தகைய உடல் சித்ரவதை முறைகள் கைவிடப்பட்டு, மூளைச் சலவை செய்யும் மனச் சித்ரவதை முறை பின்பற்றப்பட்டது. சுய இன்பம் அனுபவித்தால் முடி கொட்டிவிடும், ஆண்மை அழிந்துவிடும், கண் குருடாகி விடும் போன்ற பிரசாரங்கள் இன்று வரை தொடர்கின்றன.

அமெரிக்க மருத்துவத் துறையின் உச்சபட்ச பதவியான சர்ஜன் ஜெனரலாக 1994-ல் இருந்த டாக்டர் ஜோசலின் எல்டர்ஸ், பள்ளிக் கூடங்களில் மாணவர்களுக்கு சுய இன்பம் பற்றிக் கற்றுத் தர வேண்டும் என்று கருத்து தெரிவித்ததற்காகப் பதவியை இழந்தார். உண்மையில் அவர் சொன்னது, சுய இன்பம் பற்றிய தேவையற்ற குற்ற மனப்பான்மையை சிறுவயதிலேயே ஏற்படாமல் தடுக்க, அது குறித்த தவறான கருத்துக்களைக் களைந்து, சரியான தகவல்களை சிறுவர்களுக்குச் சொல்லித் தர வேண்டும் என்பதுதான்.

‘வகுப்பிலேயே ஒவ்வொரு மாணவரும் உடைகளை நீக்கி தன் பிறப்புறுப்பைத் தொட்டுப் பார்த்து சுய இன்ப வழிமுறைகளைக் கற்றுக்கொள்ள வகுப்பு நடத்தப் போகிறாயா’ என்று எதிர்ப்பு தெரிவித்த மத அடிப்படைவாதிகள் போட்ட கூச்சலில் ஜோசலின் சொன்னது திரிக்கப்பட்டு பிரச்னையாக்கப்பட்டது. இப்போதும் பள்ளிக் கூடத்தில் பாலியல் கல்வி என்றதும் இதே போன்ற கூக் குரல்களைத்தான் கேட்கிறோம்.

இன்னொரு பக்கம் இதற்கு எதிர் முனையில் அமெரிக்கா விலேயே, டாக்டர் பெட்டி டாட்சன் என்ற பெண் சுய இன்பம் அனுபவிப்பது எப்படி என்று பெண்களுக்குப் பிரத்யேக வகுப்பு

கள் எடுத்தார். ஒவ்வொரு பெண்ணும் (ஆணும்) தன் உடலைக் கொண்டாட வேண்டும்; குழந்தைகள் தங்கள் பிறப்பு உறுப்பைத் தொட்டாலே வானம் இடிந்து விழுந்துவிட்டதைப் போல அவர்களைக் கண்டித்து அவமான உணர்வை ஏற்படுத்தி வாழ்நாள் முழுவதும் குற்ற மனப்பான்மையுடன் வாழச் செய்வதை மாற்ற வேண்டும் என்று பெட்டி சொன்னார்.

சுய இன்பம் பற்றி இன்றும் சொல்லப்படும் ஒவ்வொரு கருத்தையும் பரிசீலிப்போம்.

1. **'அது ஆபத்தானது; தவறானது; சுய இன்பத்தில் ஈடுபட்டால், கண் பார்வை போய்விடும்; சுய இன்பத்தில் ஈடுபடுவோருக்குக் கேன்சர் வரும்; உடல் நலிவு ஏற்படும்.'**

எல்லாமே தவறு! உடல் நலிவு, பார்வை இழப்பு போன்றவை எல்லாம் ஆரோக்கியமான உணவுப் பழக்கம் இல்லாததால் ஏற்படுமே தவிர, சுய இன்பத்தால் அல்ல!

கேன்சரைப் பொறுத்தமட்டில், பிராஸ்ட்டேட் சுரப்பியில் கேன்சர் வரும் வாய்ப்பு சுய இன்பத்தில் ஈடுபடாத ஆண்களைவிட, ஈடுபட்ட ஆண்களுக்குக் குறைவு என்று 2004-ல் ஆஸ்திரேலியாவில் நடத்திய ஆய்வில் தெரிய வந்திருக்கிறது.

விந்து திரவத்தில் இருக்கும் சில சுரப்புகள், நாளங்களிலேயே தேங்கிக் கிடக்கும்போது, அவை புற்று நோயை உருவாக்கும் வாய்ப்பு இருப்பதாகவும், அவ்வப்போது விந்துவை சுய இன்ப முறையிலோ உடலுறவிலோ வெளியேற்றிவிட்டால், இந்த வாய்ப்பு குறை வதாகவும் டாக்டர் கிரஹாம் கைல்ஸ் தெரிவித்திருக்கிறார். வெளியேற்றப்படாத விந்து உடலிலேயே கரைந்து விடும் என்றபோதும், விந்து திரவத்தில் உள்ள சில பொருட்களுக்கு 'கார்சினோ ஜினிக்' எனப்படும் புற்று நோயை உருவாக்கக்கூடிய தன்மை இருப்பதாக அவர் சொல்கிறார்.

2. **'திருமணத்துக்குப் பின் மகிழ்ச்சியான உடல் உறவில் ஈடுபடும் சக்தி இல்லாமல் போய்விடும்; சுய இன்பத் தில் விந்துவை விரயம் செய்வதால், விந்து உற்பத்தி குறைந்துவிடும்; சுய இன்பம் செய்த ஆண்/பெண்களுக்குக் குழந்தை பிறக்கும் வாய்ப்பு குறைவு!'**

இவை உண்மையானால், பூமியில் மக்கள் தொகை இந்த அளவு அதிகரித்திருக்கவே முடியாது. ஏனென்றால் 90 சதவிகிதம் பேர் சுய இன்பம் அனுபவிப்பவர்கள்தான்!

விந்து உற்பத்திக்கும் சுய இன்பத்துக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. ஆண்-பெண் உடல் உறவு மகிழ்ச்சியாக இருப்பதற்குத் தேவைப்படுவது இருவரின் ஆரோக்கியமும் உடல் உறவு பற்றிய உடல்கூறு/உளவியல் அறிவும்தான். குழந்தை பெற முடியாத மலட்டுத்தன்மை ஆணிடமோ, பெண்ணிடமோ இருப்பதற்கான மருத்துவக் காரணங்கள் வேறு. அதற்கும் சுய இன்பத்துக்கும் சம்பந்தம் இல்லை.

3. **'ஆண்/பெண் துணை கிடைக்காதவர்கள், திருமணமாகாதவர்கள்தான் சுய இன்பத்தில் ஈடுபடுவார்கள்!'**

தவறு. அவர்களும்கூட சுய இன்பத்தில் ஈடுபடுகிறார்கள் என்பதுதான் யதார்த்தமான நிலை. உடலுறவின் போது இருவரின் உச்சமான மகிழ்ச்சியும் ஒரே சமயத்தில் நிகழாதபோதும், ஒருவர் நிறைவடைந்து மற்றவர் நிறைவடையாதபோதும், துணையின் உதவியுடனே சுய இன்பத்தில் ஈடுபட்டு நிறைவை அடைய முயற்சிப்பது சகஜமானது. அது, பாலியல் மருத்துவர்கள் பல ஜோடிகளுக்குத் தரும் ஆலோசனையுமாகும்!

4. **'சிறுமிகள்/பெண்கள் ஈடுபடுவதில்லை.'**

இதுவும் தவறான கருத்துதான். சமூகத்தில் ஒரு பெண் தன் பாலியல் பழக்க வழக்கங்கள், கருத்துக்கள் போன்றவற்றை வெளிப்படையாகத் தெரிவிப்பதில் இருக்கும் கலாசார சிக்கல்களால், அசல் எண்ணிக்கை தெரிய வருவதில்லை என்றே ஆய்வாளர்கள் கருதுகிறார்கள்.

அப்படியானால், சுய இன்பம் அனுபவிப்பதால் எந்தத் தீங்குமே இல்லையா?

சிறுவனுக்கும் சிறுமிக்கும் அதிகமாகக் கைகளால் பிறப்புறுப்பைத் தேய்த்ததனால் sore skin எனப்படும் தோல் அழற்சி ஏற்படலாம் என்ற சிறு அவதி தவிர, வேறு எந்த தீங்கும் இல்லை என்பதுதான்

உறுதியான முடிவு. தோல் அழற்சிக்கும் தீர்வுகள் உள்ளன. தண்ணீரில் கரையக்கூடிய ஸ்கின்லோஷன்களை லூப்ரிகேஷ னுக்குப் பயன்படுத்தி சுய இன்பம் அனுபவிக்கலாம்.

சொல்லப்போனால், சுய இன்பத்தால் சில லாபங்கள்கூட இருக்கின்றன. சிறுவர்களுக்கும் இளைஞர்களுக்கும் பாலியல் கவர்ச்சி, ஆசை இயல்பாகவே இருந்தாலும், வடிகால் இல்லாத நிலையில் மன அழுத்தம் கடுமையாக ஏற்படுகிறது. சுய இன்பப் பழக்கத்தால் அந்த மன அழுத்தம் குறைகிறது என்பது மருத்துவர்களின் முடிவு. சுய இன்பத்தில் ஈடுபடும் சிறுமிகளுக்கு/பெண்களுக்கு மாதப்போக்கு நேரத்தில் ஏற்படும் தசைப் பிடிப்பு, விறைப்பு, வலிகள்(cramps) குறைவதாகவும் கண்டறியப்பட்டு இருக்கிறது.

எந்த விஷயமும் அளவுக்கு மீறினால் பாதிப்புதான் என்ற பொது விதி - அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சு என்ற கருத்து இதற்கும் பொருந்தும். படிப்பு, வேலை, விளையாட்டு, பொழுதுபோக்குகள் என்று வேறு பணிகளில் ஈடுபடாமல், இதிலேயே மூழ்கிக்கிடப்பதுதான் தவறானது. சுய இன்பம் மட்டுமல்ல; வாழ்க்கையில் எந்த ஒரு ஒற்றை விஷயத்தில் மட்டுமாக ஆழ்ந்து போவது என்கிற obsession உடல்/உள நலத்துக்குக் கேடானதுதான்!

பத்து வயதைத் தாண்டிய பின்னர், டீன் ஏஜை நோக்கிச் செல்லும் தங்கள் குழந்தைகளின் தேவைகள் என்னென்ன என்று பெற்றோர் கவலைப்படுவது இயல்பு. நல்ல உடை, சத்தான உணவு, நல்ல கல்வி, நேர்மை, பொய் சொல்லாமை போன்ற நல்ல பழக்க வழக்கங்கள் எல்லாம் குழந்தைகளுக்குத் தேவையானவை என்பதைப் புரிந்துகொள்வது போல, குழந்தைகளின் பாலியல் சார்ந்த தேவைகளில் சுய இன்பமும் ஒன்று என்பதை பெற்றோர் தங்கள் மனதுக்குள் ஏற்று அங்கீகரித்தாக வேண்டும்.

## இன்றைய ஹோம் வொர்க்:

சுய இன்பம் பற்றிய உங்கள் நிலை என்ன?

பதில் மற்றவர்களுக்காக அல்ல.

உங்களுக்கானது... உங்களுடையது!

அத்தியாயம் 16

# நீங்கள் உங்கள் குழந்தையின் நண்பரா?

**சு**மார் 9 முதல் 12 வயது காலகட்டத்தில் தங்கள் வீட்டுச் சிறுவனும் சிறுமியும் ஹார்மோன்களின் சுரப்பால் உடல் மாற்றங்களுக்கும், குடும்ப- சமூகச் சூழலினால் உள மாற்றங்களுக்கும் ஆளாகத் தொடங்குவதைப் பெரியவர்கள் உணர வேண்டும்; புரிந்துகொள்ள வேண்டும். அப்படிப் புரிந்துகொள்ளா விட்டால், அடுத்த கட்டத்தில் 13 முதல் 17 வயதுக்குள்ளேயே டீன்-ஏஜ் பருவத்தில் குழந்தைகள் ஏதோ வேற்றுக் கிரக மனிதர்கள் போலத்தான் தோன்ற ஆரம்பிப்பார்கள்.

நம் மரபிலே ஓர் அற்புதமான சொலவடை இருக்கிறது... 'தோளுக்கு மிஞ்சினால் தோழன்'!

அப்பா-அம்மாவின் தோளைத் தாண்டி குழந்தைகள் உயரமாகிற வயது 10-ல் இருந்து 14 வரைதான்! அந்தக் கட்டத்தில் அப்பாவும் அம்மாவும் குழந்தையின் நண்பராகிவிட வேண்டும். சிறந்த நண்பராக மனம்விட்டுக் குழந்தையுடன் அதன் சந்தோஷங்களையும் வருத்தங்களையும் கவலைகளையும் குழப்பங்களையும் பகிர்ந்துகொள்ள வேண்டும்.

ஓட்டப் பந்தயத்தில் தோற்றது, சைக்கிள் ஓட்டக் கற்றுக்கொள்ளும் போது முட்டியில் அடிபட்டது, ஓவியப் போட்டியில் பரிசு வாங்கியது போன்றவற்றைப் பெற்றோருடன் பகிர்வது போலவே தன் பாலியல் குழப்பங்களையும் பகிர முடியும் என்ற நம்பிக்கை குழந்தைக்கு எப்போது ஏற்படும்? அவர்கள் தன் மேல் அதிகாரம் செலுத்துபவர்களாக இல்லாமல், நண்பர்களாக இருப்பதாகக் குழந்தை உணரும் போதுதான்!

ஒரே வயதினர் நண்பர்களாக இருப்பதைவிட, பெரிய வயதினரும் சிறிய வயதினரும் நட்பு கொள்வது சற்றுக் கடினமானது. ஆனால், அப்படி ஒரு நட்பை ஏற்படுத்திவிட்டால், அதில் இருவரும் பெறும் பயன்கள் ஏராளம். இந்த நட்பை ஏற்படவிடாமல் தடுப்பது வயதின் அதிகாரமும், அதற்கான எதிர்ப்பும்தான்!

'உன் வயதைத் தாண்டித்தான் நான் வந்திருக்கிறேன். எனக்குத் தெரியாதா?' என்று மூத்தவர்

சொல்லும் போது, அங்கே வயதின் அதிகாரம் தலைதூக்கிவிடுகிறது. 'உங்களுக்கு வயசாயிடுச்சு. இதெல்லாம் புரியாது' என்று இளைய குரல் ஒலிக்கும்போது, அது உண்மையில் தலைமுறை இடை வெளியின் குரல் அல்ல; கருத்துப் பரிமாற்றத் தோல்வியின் குரல்தான்.

சிறுவர்களை, இளைஞர்களைப் புரிந்துகொள்ளவும் அவர்களின் தோழர்களாக மாறவும் பெற்றோர் செய்ய வேண்டிய முயற்சிகளில் முதன்மையானது, ஒவ்வொரு வயதிலும் சிறுவர்களின் உடலிலும் மனதிலும் ஏற்படும் மாற்றங்கள் பற்றி அறிவியல்பூர்வமாக அறிவதாகும்.

3-ல் இருந்து 12 வயது வரை ஏற்படும் மாற்றங்களை முன்பே

அலசினோம். இப்போது 13 முதல் 17 வரை என்னென்ன நிகழ்கின்றன என்று பார்ப்போம். சிறுமிகள், பெரியவர்கள் ஆக இருக்கும்போது இருக்கப்போகும் உயரத்தை இப்போது அடைந்து முடித்திருப்பார்கள். சிறுவர் கள் உயரம் மட்டும் அவர்கள் இருபது களைத் தொடும்வரை வளர்ந்துகொண்டே இருக்கும். குழந்தைப் பருவத்திலிருந்து வெளிவந்து இளைஞர்களாகியிருப்பார்கள்.

இப்போது ஒரு விஷயத்தின் வெவ்வேறு தன்மைகளை யோசித்து, எதைத் தேர்ந்தெடுப்பது என்று முடிவெடுப்பதற்குத் தேவையான அலசல் திறன் வந்துவிட்டு இருக்கும். சுதந்திரமாக இருக்க விரும்புவார்கள். சம வயதுக்கார முன்னோடிகளைப் பின்பற்றுவது தொடரும். ஆனால், வளர் இளம் பருவத்தில் இருந்த அளவு இந்தத் தாக்கம் இப்போது இராது. மீடியாக்களின் பாதிப்பு அதிகரித்திருக்கும். அதேசமயம், மீடியா சொல்லும் தகவல்களை அலசும் அறிவும் வந்திருக்கும். நண்பர்களுடனும் குடும்பத்தினருடனும் இருக்கும் உறவுகளில் முன்பைவிட முதிர்ச்சி காணப்படும்.

நீண்ட காலம் நீடித்திருக்கக்கூடிய நட்பை, உறவை இப்போது உருவாக்கிக்கொள்ளும் ஆற்றல் ஏற்பட்டு இருக்கும். பரஸ்பர நம்பிக்கை, அன்பைப் புரிந்துகொள்ளுதல் போன்ற குணங்கள் இதற்குள் உருவாகியிருந்தால், ஆரோக்கியமான நட்பை, உறவை ஏற்படுத்திக் கொள்வதும் சாத்தியப்படும்.

தங்கள் உணர்ச்சிகளைத் தாங்களே அலசி ஆராய்ந்து புரிந்துகொள்வதற்கான முயற்சியும் திறமையும் இந்த வயதில் ஏற்பட்டு இருக்கும். ஏன் இது எனக்குப் பிடிக்கிறது, ஏன் இது எனக் குப் பிடிக்கவில்லை, ஏன் எனக்குக் கோபம் வந்தது, ஏன் எனக்கு அழுகை வந்தது என்றெல்லாம் யோசித்துப் பார்க்கும் ஆற்றல் இது.

டீன்-ஏஜ் தொடக்க காலத்தில் இளைஞர்களுக்குத் தங்கள் தோற்றம் பற்றிய அதீத அக்கறை இருக்கும். உடை பற்றி ரொம்ப அலட்டிக்கொள்வார்கள். ஆனால், டீன்- ஏஜ் முடியும் வயதில் இந்த அக்கறை குறைய ஆரம்பித்துவிடும். தோற்றத்தைவிட தன்

ஆளுமை (பர்சனாலிட்டி) இப் படிப்பட்டது என்று காட்டிக்கொள்ளவே விரும்புவார்கள். அதாவது ஆளுமை என்பது வேறு; அதன் பல அம்சங்களில் தோற்றப் பொலிவு என்பதும் ஒன்று எனப் புரிந்துகொள்ளத் தொடங்கியிருப்பார்கள்.

செக்ஸ் பற்றிய விருப்பங்கள் தங்களுக்கு ஏற்படுவதை இப்போது அவர்களே உணரத் தொடங்கியிருப்பார்கள். அதை எதிர்பாலாரிடம் தெரிவித்தால் என்னென்ன விளைவுகள் ஏற்படும் என்பது பற்றியும் புரிந்துகொள்ளும் அறிவும் இப்போது இருக்கும். செக்ஸ் சார்ந்த உறவுகளில் சரியானது எது, ஆபத்தானது எது என்றெல்லாம் ஓரளவு இப்போது தெரியும். செக்ஸ் பற்றிய கருத்துக்களைத் தன் மனதில் ஏற்படுத்துவதில் மீடியாவின் பங்கு என்ன என்பதைப் புரிந்து கொள்ளும் அறிவும் இப்போது ஏற்பட்டிருக்கும்.

இப்படிப்பட்ட நிலையில் இருக்கும் டீன் ஏஜ் இளைஞர்களுடன் செக்ஸ் பற்றி பெற்றோர்கள் என்ன பேசலாம், எப்படிப் பேசலாம் என்பதை அலசுவோமா?

நம் சமூகத்தில் பெற்றோருக்கு இருக்கும் முதல் மனத் தடை, இதைப் பற்றியெல்லாம் எப்படி நாம் நம் குழந்தையிடம் போய்ப் பேசுவது என்பதுதான். இது ஓரளவு நியாயமான மனத் தடையும்கூட. ஆனால், இதை 13 வயதுக்குமேல் தொடங்க முடியாது. அதற்குள் அப்பா என்றால் இப்படி, அம்மா என்றால் இப்படி என்று இருவர் பற்றியும் திட்டவட்டமான மனச் சித்திரம் குழந்தைக்கு ஏற்பட்டுவிடும். பிறகு, அதை மாற்ற முயல்வது கடினம்.

எனவே, குழந்தையுடன் கருத்துப் பரிமாற்றங்களை அதற்குப் பேசத் தெரிந்த உடனே மிக சிறு வயதிலேயே தொடங்கிவிடுவது நல்லது. வளர வளர... சினிமா, அரசியல், பணம், படிப்பு, வேலை, கடவுள், சாதி, மதம், செக்ஸ் என எந்த விஷயத்தைப் பற்றியும் பெற்றோரிடம் விவாதிக்கலாம் என்ற நம்பிக்கை குழந்தைக்கு ஏற்பட வேண்டும்.

செக்ஸ் தொடர்பான ஒரு விஷயத்தைப் பற்றிக் குழந்தை கேள்வி கேட்கிறது என்றால், அதற்கான சரியான பதில்களையும் சரியான

சொற்களையும் தெரிந்துகொள்ளும் வயதில் இருப்பதாகத்தான் அர்த்தம். குழந்தை என்ன கேட்கிறது என்பதை முதலில் நாம் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். ஒரு முறைக்கு இரு முறை அது என்ன சொல்கிறது என்பதை நாம் கேட்டுத் தெரிந்துகொண்டுவிட்டு பதில் சொல்வதுதான் சரி.

குழந்தை கேள்வி கேட்கும் சந்தர்ப்பம் சில சமயம் தர்மசங்கடமான சூழலாக இருக்கலாம். அப்போது உடன் இருக்கும் வேறு பெரியவர்கள் முன் இப்படிக் கேட்கிறதே என்று எரிச்சல்கூட வரலாம். ஆனால், அந்த விஷயம் பற்றிச் சரியான பதிலை குழந்தைக்கு தெரிவிக்கும் வாய்ப்பை விட்டுவிடக் கூடாது என்பதுதான் முக்கியம். 'நல்ல கேள்வி கேட்டிருக்கே! ஒரு ஐஸ்க்ரீம் சாப்பிட்டுட்டே பேசுவோம்' என்று வேறு இடத்துக்கு இருவருமாகப் போய் மனம்விட்டுப் பேசலாம்.

குழந்தைகளின் கேள்விகளுக்குப் பதில் சொல்லும்போது, அவர்களுக்குப் புரியும் அளவுக்குச் சற்று அதிகமாகவே பதில் சொல்லலாம். நாம் நினைத்ததைவிடவே கூடுதலாகப் புரிந்துகொள்ளும் நிலையில் குழந்தை ஒருவேளை இருக்கக்கூடும். தவிர, அப்போதுதான் மேலும் கேள்விகள் கேட்கக் குழந்தைக்குத் தூண்டுதலாக இருக்கும். எப்போதுமே, குழந்தைக்கு ஏற்கெனவே தெரிந்த விஷயத்திலிருந்து தொடங்கி தெரியாத விஷயத்துக்கு இட்டுச் செல்ல வேண்டும். எல்லா கற்பித்தலும் கற்றலும் அப்போதுதான் சாத்தியம்!

'பையனுக்கும் பெண்ணுக்கும் என்ன வித்தியாசம்?' என்று சிறு குழந்தை கேட்கும்போது சினைப்பை, கருப்பை, விந்து சேகரப் பைகளின் வரைபடங்களைக் காட்டி விளக்கத் தேவையில்லை. அதற்கு குழந்தை இன்னும் வளர வேண்டும். ஆனால், மூத்திரம் கழிப்பதற்கு இருவருக்கும் வெவ்வேறு உறுப்புகள்- பையனுக்கு குஞ்சும், பெண்ணுக்கு யோனியும் இருக்கின்றன என்று சொன்னால் போதும். குஞ்சு, யோனி போன்ற சொற்களைச் சொல்லக் கூச்சப்படத் தேவையில்லை. இவையே சரியான, பொருத்தமான சொற்கள்.

இவற்றைக் குழந்தைக்குச் சொல்லித் தராவிட்டால், அது

வெளியில் இதே உறுப்புகளுக்கான 'கெட்ட' வார்த்தைகளைக் கற்றுக்கொண்டு வரும். ஆங்கிலத்தில் 'யூரின்' என்று சொல்லத் தயங்காத நாம் தமிழில் மட்டும் மூத்திரம் என்று கூறத் தயங்குவதைக் கைவிடவேண்டும். மூத்திரத்தை மூத்திரம் என்று சொல்லாமல் 'உச்சா', 'சுசு' என்றெல்லாம் சொல்லிக்கொண்டே இருந்தால், மூத்திரம் என்பது கெட்ட வார்த்தையாக மாறிவிடுகிறது. இப்படித்தான் பிறப்பு உறுப்புகள் தொடர்பான எல்லா சரியான வார்த்தைகளும் கெட்ட வார்த்தைகளாகிவிட்டன.

குழந்தைக்குத் தன் உடலை அறியக் கற்பிப்பதில் முக்கியமான பங்கு வகிப்பது, முகம் பார்க்கும் கண்ணாடி. நம் இன்னொரு முகத்தைப் பார்க்கவும் கண்ணாடியைப் பயன்படுத்தலாம்.

## இன்றைய ஹோம்வொர்க்:

1. உங்கள் பெற்றோர் எந்த வயதில் உங்கள் நண்பர்களாக ஆனார்கள்? (அல்லது, ஆகவே இல்லையா?)
2. நீங்கள் உங்கள் குழந்தையின் நண்பராக எந்த வயதில் ஆனீர்கள்? (அல்லது, ஆகவே இல்லையா?)
3. அப்பாவின் நண்பர்/அம்மாவின் சிநேகிதி/ மாமா, அத்தை போன்ற நெருங்கிய உறவினர் யாரேனும் உங்கள் நண்பராக இருந்ததுண்டா?
4. நீங்கள் உங்கள் மகன்/மகள் ஆகியோரின் நண்பர்களுக்கு அப்படிப்பட்ட நண்பராக இருக்க முயற்சித்தது உண்டா?
5. உங்கள் வீட்டில் வெளிப்படையாக விவாதிக்கும் விஷயங்களின் பட்டியலைப் போடுங்கள். குடும்ப வருமானம்/வேலை வாய்ப்புகள்/அரசியல்/சினிமா/பத்திரிகைச் செய்திகள்/சாதி/மதம்/கடவுள்/ சடங்குகள்/செக்ஸ்...

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 17

# முகம் பார்க்க மட்டுமா கண்ணாடி?

நடைமுறையில் பல இளைஞர்கள் முதலில் வரையக் கற்றுக் கொள்வதே பிறப்புறுப்புகளின் 'ஆபாச' படங்களைத்தான். பள்ளிகள், கல்லூரி, பஸ் நிலைய, ரயில் பெட்டிக் கழிப்பறைகளில் காணப்படும் கிறுக்கல் படங்களே இதற்கு சாட்சி!

ஏன் நடக்கிறது இந்தத் தவறு?

பேசத் தெரிந்துவிட்ட குழந்தையிடம் இது கண், இது காது, இது மூக்கு என்று சொல்லித் தருகிறோம். குழந்தை தானே கண்ணாடி முன் போய் நின்றுகொண்டு தன் கண், காது, மூக்கு, உதடு, நெற்றி, முகவாய் என எல்லாவற்றையும் பார்த்துக்கொள்கிறது. ஆனால், தன் முதுகை குழந்தையால் மட்டுமல்ல, யாராலும் கண்ணாடியில் பார்த்துக்கொள்ள முடியாது.

முடி திருத்தகங்களில் எல்லாப் பக்கமும் கண்ணாடி வைத்திருப்பார்கள். தலையின் பின் பக்கம் எப்படி முடி வெட்டப்பட்டிருக்கிறது என்பதை முன்னும் பின்னுமாக உள்ள அந்தக் கண்ணாடிகள் வழியே பார்த்துத் தெரிந்துகொள்ள முடியும். அதில் முதுகையும் பார்க்கலாம்.

இதே போலத்தான், உடலின் இன்னும் சில பாகங்களை முழுமையாக அறிய கண்ணாடி தேவை.

தோள் இடுக்கான அக்குள் பகுதியில் எரிச்சலோ நமைச்சலோ இருந்தால், அக்குள் பகுதியை நேராகப் பார்ப்பதைவிட அதனருகே கண்ணாடி வைத்துப் பார்த்தால் தான், ஏதேனும் சிறு கொப்புளம் இருந்தாலும்கூட அறிய முடியும்.

அதுபோலத்தான் ஆணுறுப்பு, பெண்ணுறுப்பு போன்றவையும்! கண்ணாடி கொண்டு பார்க்கும் போதுதான் அதை முழுமையாகத் தெரிந்துகொள்ள முடியும். இதை ஒன்பது, பத்து வயதிலேயே குழந்தைக்குக் கற்றுத் தரலாம். சிறுவனோ சிறுமியோ தான் மட்டும் தனியே இருக்கக் கூடிய ஓர் அறையில் உடைகளைக் களைந்துவிட்டுத் தரையில் உட்கார்ந்து, கால்களுக்கு இடையே கண்ணாடியை நிறுத்தி, தன் பிறப்புறுப்பு எப்படி இருக்கிறது என்று பார்க்க வேண்டும்.

தொப்புளுக்குக் கீழே இரு கால்கள் இணையும் பகுதியில் தொடை இடுக்குகள் வரை முடி முளைத்திருக்கிறது. அவற்றின் ஊடே, இருபுறமும் விரைப் பைகள் தொங்க, நடுவே லிங்கம்/குஞ்சு எனப்படும் குழாய்ப் பகுதி நீள்கிறது.

லிங்கத்தின் மேல் தோல் நுனியிலிருந்து சுருட்டினால் ஓரளவு சுருங்குகிறது. அதற்கு மேல் அது ஏன் சுருங்குவதில்லை என்று அறிய, கண்ணாடியை லிங்கத்தின் கீழ்ப்புறம் கொண்டுபோய்ப் பார்த்தால் புரியும். கீழ்ப்பகுதியில் ஓரளவுக்குமேல் தோல் பிரிய முடியாதபடி உடலுடன் இணைந்திருப்பது தெரியும். அதற்கும் மேல் தோலை இழுத்தால் வலிக்கும். காயம்கூட ஏற்படலாம்.

குளிக்கும்போது முன் தோலைநீக்கி எதுவரை சுத்தம் செய்ய வேண்டும் என்பது இப்போது புரிந்துவிடும். முன்தோலின் அடிப்பகுதி சுத்தம் செய்யப்படாமல் அழுக்கு சேர்ந்திருந்தால், தோலைப்

பிரிப்பதே சிரமமாகி வலியை ஏற்படுத்தும். தொற்றுக் கிருமிகளால் நோய் உண்டாகும்.

விரைப்பைகள் வெளிப்புற தட்பவெப்ப நிலைக்கு ஏற்ப சுருங்கியோ, விரிந்தோ காணப்படுகின்றன. விரைப்பையை விரல்களால் உருட்டிப் பார்த்தால், உள்ளே விரைக்கொட்டை இருப்பதை உணரலாம். ஓடற்ற ஒரு கோழி முட்டையை உருட்டிப் பார்த்தது போல் இருக்கும். அதைச் சுற்றிலும் உட்புறம் இருக்கும் தசைகளில் ஏதேனும் கட்டிகள் இருந்தால், அதுவும் விரல்களுக்குப் புலப்படும். அப்படி எதுவும் தெரிந்தால் உடனடியாக மருத்துவரிடம் ஆலோசனை பெற வேண்டும்.

கண்ணாடியின் உதவியுடன் தன்பிறப்புறுப்பைப் பார்க்கும் சிறுமி காண்பது என்ன?

அடிவயிற்றுக்குக் கீழே இரு தொடைகள் சேரும் பகுதியை நிதம்ப மேடு என்று தமிழிலும், 'மவுன்ட் ஆஃப் வீனஸ்' என்று ஆங்கிலத்திலும் சொல்கிறார்கள். இதற்குக் கீழே நெடுக்குவாட்டில் சில ஜோடி அடுக்குகளுடன் புறயோனி காட்சி தருகிறது. இதைச் சங்க இலக்கியம் மொத்தமாக 'அல்குல்' என்கிறது.

வெளிப்புறமாக இரு பக்கமும் பெரு உதடுகள் எனப்படும் 'லேபியா மஜோரா' உள்ளன. இந்த இரு பெரு உதடுகள் தொடங்கும் இடத்தில்மேற்புறத்தில் உள்ளே சிறு முத்து போல இருப்பது 'கிளிட்டோரிஸ்' எனப்படும் கந்து. இதன் இருபுறமும் உட்புறமாக கீழ் நோக்கிச் செல்பவை 'சிறு உதடுகள்' எனப்படும் 'லேபியா மைனோரா'. இவற்றின் உள்ளே மேற்புறமாக சிறுநீர்த் துவாரமும், அதற்குச் சற்றுக் கீழே கருப்பைக்குச் செல்லும் யோனிக் குழாயின் வாசல் துவாரமும் உள்ளன.

யோனித் துவாரத்தை மூடிய சிறு படலமாக இருப்பது, கன்னித் திரை எனப்படும் ஹைமன். உடல் உறவின் போதுதான் இது கிழியும் என்றும், எனவே அது கிழிந்திருந்தால் அந்தப் பெண் கன்னித் தன்மையை இழந்தவள் என்றும் நம்பிய மரபுகள் உண்டு. முதல் இரவின்போது ஹைமன் கிழிந்து கசிந்த ரத்தம் படுக்கை விரிப்பில் இருந்தால்தான், அந்தப் பெண் 'வர்ஜின்' என்று கருதப்பட்ட காலமும் உண்டு.

ஆனால், அறிவியல் உண்மைகள் இதை நிராகரித்துவிட்டன. சைக்கிள் ஓட்டுவது முதல் ஓடிப் பிடித்து கிளித் தட்டு ஆடுவது வரை பல காரணங்களால் 'ஹைமன்' கிழியக்கூடும்.

யோனிப் பகுதி முழுவதும் பொதுவாக ஈரப்பசை இருக்கும். சிறுநீர் கழித்தபின் ஒழுங்காகக் கழுவி சுத்தம் செய்தாலும்கூட, இயல்பாகவே யோனிக் குழாயில் சுரக்கும் திரவத்தால் யோனிப் பகுதி முழுவதும் ஈரப்பசையாக இருக்கும். காம உணர்ச்சி ஏற்படும் போது சுரப்புகள் அதிகமாவதால், ஈரப்பசை அதிகரிக்கும்.

தன் யோனிப் பகுதியை தானே சோதித்துப் பார்க்கும் சிறுமி கவனிக்க வேண்டிய முக்கியமான அம்சங்கள் என்ன? புதிதாக ஏதேனும் மரு, மச்சம், கொப்புளம், சிறு வளர்ச்சி உருவாகி யிருக்கிறதா? வழக்கமான நிறம் இல்லாமல் ஏதேனும் ஒரு பகுதியில் வெள்ளை, சிவப்பு நிறத்தில் தோல் நிற மாற்றம் அடைந்திருக்கிறதா? கட்டிகள், காயங்கள், புண்கள், எரிச்சல்கள், நமைச்சல்கள் ஏதேனும் உள்ளனவா? இவற்றைச் சோதித்து, தேவைப்பட்டால் மருத்துவ ஆலோசனை பெற வேண்டும்.

கண்ணாடியில் பார்த்த தங்கள் உடல் உறுப்பை தானே பின்னர் காகிதத்தில் வரைந்தும் பார்க்கலாம். உடல் உறுப்பின் படம் ஆபாசமானது என்ற மன நிலையிலிருந்து விடுபட, இது மிகவும் அவசியம்.

செக்ஸைப் பற்றிக் கற்றுத் தரப்போவது யார்? பெற்றோரா, பள்ளிக்கூடமா? தொடர்ந்து இது சர்ச்சையில்தான் நம் சமூகத்தில் இருக்கிறது. இதற்கான அடிப்படைக் காரணம், செக்ஸ் எஜுகேஷன் என்பதை கொச்சையாகவும் தவறாகவும் புரிந்துவைத்திருப்பதுதான். செக்ஸ் எஜுகேஷன் என்றால், வகுப்பறையில் ஆணும் பெண்ணும் உடல் உறவுகொள்வதைச் செய்து காட்டி, இப்படித்தான் செய்ய வேண்டும் என்று சொல்லிக் கொடுப்பதுபோல ஒரு தவறான, விஷமமான பிரசாரம் எப்போதும் நடக்கிறது.

இப்படிப்பட்ட சூழலில், நாம் செக்ஸ் பற்றிக் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்று வலியுறுத்துவது, முன்பே நாம் குறிப்பிட்டது போல உடலுறவு பற்றியல்ல. உடல் பற்றியும், உறவுகளைப் பற்றியுமே!

அவரவர் உடல்களைப் புரிந்துகொள்ளவும், அவரவர் உறவுகளைப் பற்றிப் புரிந்துகொள்ளவும் நம் குழந்தைகள் கற்றுக்கொண்டால்தான், நாளைய வாழ்க்கையில் அவர்களுடைய உடலுறவுகளும் ஆரோக்கியமாக இருக்கும்.

இந்தப் பொறுப்பை பெற்றோர், பள்ளிக்கூடம் இருவரும்தான் செய்ய வேண்டும். பல பெற்றோர்களுக்கு இது பற்றிய விருப்பம் இருந்தாலும், மனத் தடைகள் உள்ளன. அவற்றைக் கடக்க வேண்டும். அதற்கு முதலில் ஒவ்வொருவரும் 'நான் எப்படிப்பட்ட பெற்றோர்' என்று தன்னைப் பற்றித் தானே ஒரு முடிவுக்கு வர வேண்டும்.

நம்மை நாமே சில கேள்விகள் கேட்டுக்கொண்டு, அவற்றுக்கு நேர்மையான பதில்களையும் சொல்லிக்கொள்வோமா?

## இன்றைய ஹோம் வொர்க்:

**பொது:**

1. முகம், பின் தலை, முதுகு தவிர வேறு உடல் பாகத்தைப் பார்க்கக் கண்ணாடியைப் பயன்படுத்தியது உண்டா?
2. கழிவறை சுவர் கிறுக்கல்களைப் பார்க்கும்போது என்ன தோன்றும்? நீங்களும் அப்படிக் கிறுக்கியதுண்டா?

**ஆண்களுக்கு:**

1. விரைப் பையைத் தொட்டுப் பார்த்து வீக்கமாக இருப்பதாக அறிந்து, மருத்துவரைச் சந்தித்த அனுபவம் உண்டா ?
2. அன்றாடம் குளிக்கும்போது லிங்கத்தின் மேல் தோலை நீக்கிச் சுத்தம் செய்யும் வழக்கம் உண்டா?

**பெண்களுக்கு:**

1. கன்னித்திரை கிழிந்திருந்தால், நாளைக்குத் திருமண வாழ்க்கையே சிக்கலாகிவிடும் என்று உங்களிடமோ உங்கள் சிநேகிதிகளிடமோ யாராவது சொல்லியிருக்கிறார்களா?
2. யோனிப் பகுதியின் பல்வேறு பாகங்களை முதன்முதலில் எப்போது நீங்களே பார்த்துத் தெரிந்து கொண்டீர்கள்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 18

# எப்படி செக்ஸ் பற்றிப் பேசுவது?

பிள்ளைகளுடன் செக்ஸ் பற்றி எப்படிப் பேசுவது என்ற தயக்கமும் கவலையும் எல்லா பெற்றோர்களுக்கும் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால், செக்ஸ் பற்றித் தங்கள் பிள்ளைகள் சரியாகத் தெரிந்துகொள்ள வேண்டுமே என்ற அக்கறையும் கூடவே இருக்கிறது.

குறிப்பாக, டீன் ஏஜ் பெற்றோர்களின் முதல் கவலை, தேவையற்ற கர்ப்பத்தில் கொண்டுபோய் விட்டுவிடக்கூடிய உறவு எதிலும் தங்கள் பிள்ளைகள் சிக்கிவிடக் கூடாது என்பது தான். பாலியல் வன்முறை போன்ற பயங்கரம் தம் குழந்தைகளுக்கு

நேர்ந்துவிடக் கூடாது என்பது இன்னொரு கவலை. விவரம் தெரியாமல் உறவுகளில் ஈடுபட்டு ஏதேனும் பால்வினை நோய்கள் அவர்களுக்கு ஏற்பட்டுவிடக் கூடாது என்பது மற்றொரு கவலை. இவையெல்லாம் நியாயமான கவலைகள்தான்.

எந்தப் பெற்றோரும் தங்கள் குழந்தைகள் வாழ்க்கை முழுவதும் செக்ஸ் பற்றித் தெரியாதவர்களாகவே வளர வேண்டும் என்று நிச்சயம் நினைக்கமாட்டார்கள். அவர்கள் விரும்புவது எல்லாம்... குழந்தைகளுக்குத் தங்கள் உடலைப் பற்றிய தெளிவும் பொறுப்பும் ஏற்பட வேண்டும்; அன்பு, நெருக்கம் இவற்றை முறையான வழிகளில் வெளிப்படுத்தக் கற்றுக்கொள்ள வேண்டும்; உடலையும் உள்ளத்தையும் ஆரோக்கியமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்பதுதான்! ஆனால், இதற்குத் தங்கள் குழந்தைகளைத் தயார்படுத்துவது எப்படி என்பதில்தான் அவர்களுக்குச் சிக்கல்.

இதற்கு முதல் காரணம், அவர்களுடைய பெற்றோர் அவர்களை அப்படித் தயார்படுத்தவில்லை. அதனால், தங்கள் குழந்தைகளும் தாங்களாகவே தயாராகிவிடுவார்கள் என்று சிலர் நம்புகிறார்கள். இன்னும் சிலருக்கு, தாங்களே எவ்வளவு விவரம் தெரியாதவர்களாக 60 வயதைக் கடந்துவிட்டோம் என்று வருத்தமும் ஆச்சர்யமும் இருக்கிறது. இந்தத் தொடருக்கு வரும் கடிதங்களில் பல அப்படிப் பட்டவை.

'எனக்கு மாதவிலக்கு நின்று பத்து வருடமாகிறது. ஆனால், மாதவிலக்கு என்பது என்ன, அது ஏன் நிகழ்கிறது என்பதே இத்தனை வருடமாக எனக்குத் தெரியாது. இந்தத் தொடர் மூலம் தெரிந்துகொண்டு ஆச்சர்யப்பட்டேன்' என்று ஒரு வாசகி எழுதுகிறார். '60 வருடங்களுக்கு முன், நான் டீன் ஏஜில் இருந்தபோது, சுய இன்பத்தைப் பற்றிக் கண்டபடி சொல்லி, என்னை மிரட்டி வைத்திருந்தார்கள். இப்போதுதான் உண்மைகள் புரிகின்றன' என்று 75 வயது வாசகர் ஒருவர் தெரிவிக்கிறார்.

இன்றைய இளம், நடு வயதுப் பெற்றோர்கள், செக்ஸ் பற்றிய ஆரோக்கியமான புரிதலை தாங்களே குழந்தைகளுக்கு ஏற்படுத்தித் தர என்ன வழி என்பதில் மிகவும் அக்கறையோடு இருக்கிறார்கள்.

இவர்களை, பத்து வயதுக்கு உட்பட்ட சிறுவர்களின் பெற்றோர், பருவம் எய்திய வயதில் இருக்கும் டீன் ஏஜ் விடலைகளின் பெற்றோர் என இரு வகையாகப் பிரிக்கலாம்.

செக்ஸ் சம்பந்தப்பட்ட ஒழுக்கப் பிரச்னைகளைப் பற்றிப் பெரியவர்களான பெற்றோருக்கே குழப்பங்கள் இருக்கின்றன. செக்ஸ் பற்றிய விவரங்களைச் சிறுவர்களிடம் சொன்னால், அவர்கள் உடனே அதில் ஈடுபடத் தூண்டப்பட்டுவிடுவார்களோ என்ற தேவையற்ற பயமும் பலருக்கு இருக்கிறது. தூண்டுதலுக்கு இது காரணமாக முடியாது. அதேசமயம் செக்ஸ் பற்றிய புரிதலே இல்லாமல், பல புறக் காரணங்களால் தூண்டப்பட்டு, அதில் ஈடுபடுவதால் நேரக்கூடிய சிக்கல்களுக்கே வாய்ப்பு அதிகம்!

திடீரென்று குழந்தைகள் சில தர்மசங்கடமான கேள்விகளைக் கேட்டால் எப்படிப் பதில் சொல்வது என்ற அச்சமும் பலருக்கு இருக்கிறது. ''அம்மா, உடல் உறவுன்னா என்ன?'' என்று ஆறு வயதுச் சிறுமி நாலு பேர் முன் கேட்டு வைத்தால், ''நல்லா இருக்கு நீ குழந்தையை வளர்த்திருக்கற லட்சணம்!'' என்று நினைப்பார்களோ என்ற நினைப்பே பயப்படுத்தும். இன்னும் சிலருக்கோ, தனக்குச் சரிசமமாக இல்லாவிட்டாலும், அந்தத் தோரணையில் பேசக்கூடிய டீன் ஏஜ் மகனிடமோ மகளிடமோ செக்ஸ் பற்றி பேசத் தொடங்கினால், தன் சொந்த செக்ஸ் வாழ்க்கையைப் பற்றியும் பேசியாக வேண்டிய கட்டாயம் வந்துவிடுமோ என்ற பயமும் இருக்கிறது.

''ஃப்ரெண்ட்ஸுக்குள்ள தொட்டுப் பேசுங்க, பரவாயில்ல! ஆனா, கண்ட இடத்துல கை படுது பார். உன் மனசுல ஒண்ணும் தப்பா இருக்காது. ஆனா, பார்க்கிறவங்க என்ன நினைச்சுக்கு வாங்க!'' என்றெல்லாம் பேசினால், உடனே ''நீங்க படிக்கும்போது க்ளாஸ்மேட்ஸை தொட்டுப் பேச மாட்டீங்களா?'' என்று பதில் கேள்வி வந்தால்? எட்டாங் கிளாஸில் மல்லிகாவின் கையைத் தொட, தான் துடித்துக்கொண்டு இருந்த கதையை எல்லாம் இப்போது மகனி/ளிடம் பகிர்ந்துகொள்வது சரியா, தப்பா, நல்லதா, விபரீதமானதா என்ற பயமும் குழப்பமும் வந்துவிடும்.

எத்தனை பயம் இருந்தாலும், எத்தனை தயக்கம் இருந்தாலும் நம் குழந்தைகளிடம் பாலியல் பற்றி நாம் பேசித்தான் ஆகவேண்டும். பள்ளிக்கூடத்தில் பாலியல் - வாழ்க்கைக் கல்வி நிச்சயம் தேவை. அதேசமயம், இன்றைய நிலையில் பள்ளிக்கூடத்தைவிட, வீடும் குடும்பமும்தான் குழந்தையின் வாழ்க்கைக்கான எதிர்கால மதிப்பீடுகளை உருவாக்க உதவும் சரியான அமைப்புகள்.

குழந்தைகளிடம் செக்ஸ் பற்றிப் பேச நம்மைத் தயார்படுத்திக்கொள்ள வேண்டும். நம் குழந்தைகளை நமக்கு எந்த அளவுக்குத் தெரியும் என்று கறாராக யோசித்துப் பார்க்க வேண்டும். அதன் பிறகுதான் குழந்தைகளிடம் என்ன பேசலாம், எப்படிப் பேசலாம், எப்போது பேசலாம் என்பதைத் தீர்மானிக்க முடியும்.

அப்பாவும் அம்மாவும் ஆளுக்கொரு தாளை எடுத்துக்கொண்டு, கீழே கொடுக்கப்பட்டுள்ள கேள்விகளுக்குத் தனித்தனியே பதில் எழுத முயற்சியுங்கள். நேர்மையாக எழுதுங்கள். எழுதி முடித்த பின் ஒருவர் பதிலை மற்றவர் பதிலுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். இருவரின் பதிலும் சரியா என்று குழந்தையிடம் தாள்களைக் கொடுத்துச் சரிபாருங்கள்.

கேள்விகள் இதோ:

## இன்றைய ஹோம் ஒர்க்:

01. உங்கள் மகன்/ள் உயரம் என்ன? எடை என்ன?

02. அவர்களுக்குப் பிடித்த விளையாட்டு என்ன?

03. அவர்களுக்குப் பிடித்த டி.வி. நிகழ்ச்சி என்ன?

04. பிடித்த சினிமா நடிகர்/நடிகை யார்?

05. பிடித்த பள்ளி/கல்லூரி ஆசிரியர் யார்?

06. பிடித்த நிறம் எது?

07. பிடித்த உணவு எது?

08. கடைசியாகப் பார்த்த சினிமா எது?

09. பிடித்தமான பாட்டு எது?

10. பள்ளி/கல்லூரி முடித்து வந்ததும், உடனே அவர்கள் செய்ய விரும்புவது என்ன?
11. நெருக்கமான நண்பர் யார்?
12. நண்பர்கள் வட்டாரத்தில் செல்லப் பெயர் என்ன?
13. உங்களிடம் பெற விரும்பும் பிடித்தமான பிறந்த நாள் பரிசு என்ன?
14. தங்களைப் பற்றிப் பெருமையாக ஏதாவது சொல்லிக்கொள்ள வேண்டுமானால், எதைப்பற்றிப் பெருமைப்படுவார் உங்கள் மகன்/ள்?
15. உங்கள் உதவி கேட்டு ஒரு பிரச்னையுடன் அணுகியது கடைசியாக எப்போது? என்ன பிரச்னை?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 19

# செக்ஸ் என்பது உடலா? உறவா?

நம் குழந்தைகளை நிஜமாகவே நமக்குத் தெரியுமா?

தெரியும் என்று நம்புகிறோம். நன்றாகவே தெரியும் என்று நம்ப விரும்புகிறோம். ஆனால், நிஜமாகவே தெரியுமா என்ற சந்தேகம், நம் மனதுக்குள் பதுங்கிப் பதுங்கிக் கூடவே வந்துகொண்டு இருக்கிறது.

இளம் குற்றவாளிகளைக் கைது செய்யும் பல சமயங்களில், அந்தச் சிறுவர்களின் பெற்றோர், தங்கள் குழந்தைகள் இப்படிப்பட்ட குற்றத்தைச் செய்திருக்க வாய்ப்பே இல்லை என்று அடித்துச் சொல்வதைப் பார்க்கிறோம். கொலை, கொள்ளை, திருட்டு போன்ற குற்றங்கள் ஒருபுறம் இருக்கட்டும்... பெண் சீண்டல்,

போதைப் பொருள் பயன்படுத்தல் போன்ற குற்றங்களில் ஈடுபட்ட சிறுவர்களின் பெற்றோர்களால் தங்கள் குழந்தைகள் இப்படியெல்லாம் நடந்துகொள்வார்கள் என்று நம்ப முடியாமல், அதிர்ச்சி அடைகிறார்கள்.

இன்றைய சமூகத்தில் ஒரு சில பெற்றோர்களுக்கு மட்டுமே நிச்சயமாகத் தங்கள் குழந்தைகள் எப்படிப்பட்டவர்கள் என்பது தெரியும். இன்னும் பலருக்கு எதுவும் தெரியாது. எந்தத் தப்புத் தண்டாவும் செய்ய மாட்டார்கள் என்று நம்பிக்கையில் மட்டுமே இருப்பார்கள். வேறு சிலருக்கு சின்னச் சின்ன தவறுகள் என்ற அளவில் தெரிந்தாலும், காலப்போக்கில் எல்லாம் சரியாகிவிடும் என்று நம்பி இருப்பார்கள்.

நம் குழந்தைகளின் நண்பர்களுக்குப் புரிந் ததைவிட, நமக்கு அதிகம் புரியும் என்று குடும்பம் நினைத்துக்கொள்கிறது. அது பெரும்பாலும் வெறும் நினைப்புதான். நமக்குத் தெரியாதவை எல்லாம் நண்பர்களுக்குத்தான் தெரிந்திருக் கின்றன.

அதே போலத்தான், நம் குழந்தைகளுக்கும் நம்மை நிஜமாகவே தெரியுமா?

தெரியும் என்பது இப்போதும் ஒரு நம்பிக்கைதான். 'என்னை யாருமே சரியா புரிஞ்சுக்கறது இல்ல' என்று சொல்லிக்கொள்வது நம் எல்லாருக்கும் ஏதோ ஒரு சமயத்தில் பிடித்தமானதாக இருக்கிறது.

ஒருவரையொருவர் புரிந்துகொள்வதும் தெரிந்துகொள்வதும் பெற்றோர்-குழந்தை உறவுக்கு மட்டுமல்ல, எல்லா மனித உறவு களுக்குமே அடிப்படையான ஒரு தேவை! அந்தத் தேவை தானாகப் பூர்த்தியடைந்துவிடாது; அதற்கான முயற்சிகள் தேவை.

அப்படிப்பட்ட புரிதல் இருக்கும் பெற்றோரால் தான் தங்கள் குழந்தைகளுக்கு இதர அறிவை எல்லாம் தருவது போல, பாலியல் தொடர்பான அறிவையும் வயதுக்கேற்ப அளிக்க முடியும்.

நம் குழந்தைகளை நாம் எந்த அளவு தெரிந்துவைத்திருக்கிறோம் என்ற கேள்வித்தாளுக்கு அம்மாவும் அப்பாவும் விடைகள் எழுதிச் சரிபார்ப்பது போல, நம்மை எந்த அளவுக்குக் குழந்தைகள் தெரிந்துவைத்திருக்கிறார்கள் என்பதையும் நாம் தெரிந்துகொள்வது அவசியம். அவர்களும் பதில் எழுத ஒரு கேள்வித்தாள் உண்டு. அதை இப்போது பார்ப்போமா?

உங்கள் குழந்தைகளுக்கான கேள்விகள் இதோ:

## இன்றைய ஹோம் ஒர்க்:

01. அப்பா - அம்மா கல்யாணம் எப்படி நடந்தது? எங்கே நடந்தது? எப்போது நடந்தது?
02. அம்மா/அப்பாவுக்குப் பிடித்த (அவருடைய) டிரஸ் எது?
03. அம்மாவின்/அப்பாவின் நெருக்கமான நண்பர்கள் யார், யார்?
04. என்னைப் பற்றி அப்பாவுக்கு எந்த விஷயத்தில் பெருமை? அம்மாவுக்கு எதில் பெருமை?
05. சென்ற தேர்தலில் அம்மா/அப்பா யாருக்கு ஓட்டு போட்டிருப்பார்கள்?
06. அம்மாவிடம் அப்பாவுக்கும், அப்பாவிடம் அம்மாவுக்கும் பிடிக்காத விஷயங்கள் என்ன?
07. டி.வி. நிகழ்ச்சிகளில் அம்மாவுக்குப் பிடிக்காத நிகழ்ச்சி எது?
08. அப்பாவுக்குப் பிடிக்காத சினிமாப் பாட்டு எது?
09. உறவினர்களில் அப்பாவுக்குப் பிடித்த அம்மா பக்க உறவினர் யார்?
10. நான் என்ன ஆக வேண்டுமென்று அப்பா ஆசைப்படுகிறார்? அம்மா ஆசைப்படுகிறார்?
11. எனக்கு ஒரு மணி நேரம் ஃப்ரீ டயம் கிடைத்தால், அப்போது நான் என்ன செய்தால் அப்பாவுக்குப் பிடிக்கும்? அம்மாவுக்குப் பிடிக்கும்?
12. என் நண்பர்களில் யாரை அப்பா/அம்மாவுக்குப் பிடிக்காது? ஏன்?

13. அப்பா பார்த்த முதல் வேலை எது? என்ன சம்பளம்?

14. அப்பா/அம்மாவுக்குப் பிடித்த எழுத்தாளர்/இயக்குநர் யார்?

15. எந்த ஊருக்குப் போக அப்பா/அம்மாவுக்குப் பிடிக்கும்?

குழந்தைகளைப் பற்றி அப்பா - அம்மாவும், அவர்களைப் பற்றிக் குழந்தை களும் இந்தக் கேள்வித்தாள்களின் மூலம் தெரிவிக்கும் பதில்கள், நாம் ஒருவரையொருவர் எந்த அளவுக்குத் தெரிந்துவைத்திருக்கிறோம் என்பதை உணர்த்திவிடுபவை. 15 கேள்விகளில் பத்துக்காவது சரியான பதில்கள் நம்மிடம் இருந்தால், நிச்சயம் சந்தோஷப்படலாம்!

குழந்தைகளுடன் பாலியல் உள்ளிட்ட வாழ்க்கை அம்சங்கள் எல்லாவற்றைப் பற்றியும் அந்தந்த வயதில் பெற்றோர்கள் பேச வேண்டும் என்றால், முதலில் அப்படிப்பட்ட கருத்துப் பரிமாற்றம் பெற்றோருக்கிடையே இருக்க வேண்டும். இருக்கிறதா?

அரசியல் கட்சிகளில் உட்கட்சி ஜனநாயகம் இல்லாதது போலவே, நம் குடும்பங்களிலும் வீட்டு ஜனநாயகம் என்பது இல்லை. வீட்டுப் பிரச்னைகள் உட்பட எந்த விஷயத்தையும் கணவனும் மனைவியும் பேசி விவாதிக்கும் சூழ்நிலை, பெரும்பாலான வீடுகளில் இல்லை. யாரோ ஒருவர் - பெரும் பாலும் கணவர், சில சமயங்களில் மனைவி - முடிவு செய்கிறார். மற்றவர்கள் அதைச் சிலசமயம் உளமாற ஏற்றுக்கொண்டோ, பல சமயம் முணுமுணுப்புடன் சகித்துக்கொண்டோ பின்பற்றும் மரபில் தான் நாம் வாழ்கிறோம்.

குழந்தைகளுடன் செக்ஸ் பற்றி ஆரோக்கியமாக விவாதித்து, அவர்களைப் பக்குவமாக வழி நடத்தும் பணியைப் பெற்றோர் செய்ய வேண்டும் என்றால், அது குடும்பத்தின் இதர சூழலுக்குச் சம்பந்தமில்லாமல் செய்து முடித்து விடக்கூடிய ஒரு வேலை அல்ல. ஒட்டு மொத்தமான குடும்பச் சூழலே ஆரோக்கியமானதாக மாற்றப்பட்டால்தான் ஆரோக்கியமான குழந்தை வளர்ப்பும் சாத்தியப்படும்.

தவிர, குழந்தைகளுக்கு குடும்பத்துக்குள் செக்ஸ் எஜுகேஷன் என்பது பிறப்பு உறுப்புகளைப் பற்றிப் பாடம் நடத்துவது என்று

தவறாகப் புரிந்து கொள்ளப்படும் சூழலே இங்கே இப்போது இருக்கிறது. அதற்கு அடிப்படையான காரணம், 'செக்ஸ்' என்ற சொல்லே இங்கே எப்போதும் தவறாக புணர்ச்சி என்ற அர்த்தத்தில் மட்டுமே எடுத்துக்கொள்ளப்படு வதுதான்.

செக்ஸ் என்பது ஒருவரின் அடையாளம். நான் ஓர் ஆண்; நான் ஒரு பெண்; நான் ஓர் அரவாணி; நான் ஆண் உடலில் சிக்கிய ஒரு பெண்; நான் பெண் உடலில் சிக்கிய ஓர் ஆண்; செக்ஸ் என்பது என் உடல் - என் உள்ளம் இரண்டின் கூட்டு அடையாளம்.

இந்தப் புரிதல் ஏற்பட்டால்தான் எந்தப் பெற்றோரும் தங்கள் குழந்தைகளை வழி நடத்த முடியும்.

இந்தப் புரிதல் ஏற்பட்டுவிட்டால், செக்ஸ் என்பது உடல், உறவு இரண்டும் என்பதை இன்னொருத்தருக்கும் புரியவைக்க முடியும். உடலைப் புரிந்துகொள்ள அதன் உறுப்புகளைப் புரிந்துகொள்கிறோம். உறவுகளைப் புரிந்துகொள்ள, அவற்றால் ஏற்படும் மகிழ்ச்சிகளையும் வலிகளையும் உணர்ந்துகொள்ள வேண்டும்.

இந்தப் புரிதலை குழந்தை பேசத் தொடங்கிய நாள் முதல் படிப்படியாக பகிர்ந்துகொள்ள முடியும். அந்தப் பகிர்வில்தான் ஒரு குழந்தை இளைஞராகும் வரை இருக்கும் சுமார் 15 வருடங்களுக்குள், வாழ்க்கைக் கல்வியின் ஆதாரமான பத்துக் கட்டளைகளையும் அது கற்றுக்கொள்ளும்.

செக்ஸ் முதல் விண்வெளிப் பயணம் வரை, வாழ்க்கையில் எதையும் ஆரோக்கியமாகவும் ஆற்றலுடனும் கையாள ஒவ்வொரு மனிதருக்கும் தேவையான அந்தப் பத்துக் கட்டளைகள் என்ன?

அத்தியாயம் 20

# பத்துக் கட்டளைகள்

இந்தப் புத்தகத்தின் முதல் அத்தியாயத்தில் சில நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டு ஒரு கேள்வியை எழுப்பியிருந்தோம். அந்தக் கேள்விக்கான பதிலைத் தான் இனி தேடப் போகிறோம். அந்த நிகழ்ச்சிகள் என்ன? அந்தக் கேள்வி என்ன? நினைவுபடுத்திக்கொள்வோமா?

கிரிக்கெட் மட்டை வாங்கித் தர மறுத்த அப்பாவைக் கொன்றான் மகன்; 'என்னை விபசாரத்தில் ஈடுபடும்படி கட்டாயப்படுத்திய என் அப்பா, அம்மா மீது நடவடிக்கை எடுங்கள்' என்று கோரினார் இளம் நடிகை; கின்னஸ் சாதனை செய்வதற்குத் தனக்குப் போதுமான ஆதரவு கிடைக்கவில்லை என்று தற்கொலை செய்துகொண்டான் ஒரு சிறுவன். இந்த நிகழ்ச்சிகள் உணர்த்துவது என்ன?

17 வயதுப் பெண்ணுக்கு முகமெல்லாம் பரு. ‘காரணம், அவளுக்கு ஏதோ ஆண் சகவாசம் இருப்பதுதான். எனவே, படிப்பே தேவையில்லை’ என்று தன் மகளைக் கல்லூரியிலிருந்து நிறுத்திய அப்பாவை உங்களுக்குத் தெரியுமா?

சொந்த மகளைத் தன் இச்சைக்கு இணங்கக் கட்டாயப்படுத்தும் அப்பா விடம் இருந்து மகளைக் காப்பாற்றப் போராடிக்கொண்டு இருக்கும் அம்மாவை உங்களுக்குத் தெரியுமா?

மாயா (பெயர் மாற்றப்பட்டுள்ளது) அறிவுக் கூர்மையும் அபிலாஷைகளும் நிரம்பிய கல்லூரி மாணவி. வயது 19. அவளுடைய பிரச்னை என்ன? கேரியர் கைடன்ஸுக்காக அவள் சந்தித்த ஓர் 50 வயது உயர்அதிகாரியுடன் ஏற்பட்ட நட்பை, அவர் படுக்கையில் கொண்டு போய் முடித்தார். ஏற்கெனவே திருமணமான அந்த அதிகாரிக்கு, இப்போது மாயா அலுத்துவிட்டது. கேரியர் கைடன்ஸ் தேடும் இன்னொரு பெண் அவருக்குக் கிடைத்துவிட்டாள். ஆனால், மாயாவால் அவரை மறக்கவும் பிரியவும் முடியவில்லை.

மாயாவுக்கு இது ஏன் நடந்தது? அவளுக்கான தீர்வுதான் என்ன?

இது போல், இன்னொரு வீட்டில் இப்போது துள்ளித் திரிகிற 5 வயது சாயாவுக்கு நாளை மாயாவின் நிலை வராமல் இருக்கவும், நம் வீட்டு 20 வயது அழகேசன் நாளை அந்த உயர் அதிகாரி போல் ஆகாமல் இருக்கவும், தடுப்பு மருந்து ஏதும் உண்டா?

உண்டு!

அதுதான் வாழ்க்கைக் கல்வியின் பத்துக் கட்டளைகள்!

நுட்பமும், ஆழமும், விரிவும் நிரம்பிய அந்தப் பத்துக் கட்டளைகளைச் சற்றே எளிமைப்படுத்திப் பட்டியலிடுவோமா?

1.நான் யார் என்று உணர்.

2.உறவாடக் கற்றுக் கொள்

3.உரையாடக் கற்றுக் கொள்

4.தன்னைப் போல் பிறரை நினை.

5.எதையும் கேள்வி கேள்.

6.எதற்கும் பதில் கண்டுபிடி.

7.சிக்கல்களை அவிழ்.

8.தெளிவான முடிவு எடு.

9.அழுத்தங்களை லேசாக்கு.

10.உணர்ச்சிகளை உணர்ந்துகொள்.

இன்னொரு முறை இந்தப் பத்துக் கட்டளைகளையும் படித்துப் பாருங்கள். இவை வாழ்க்கையில் பெட்ரூம் முதல் போர்டு ரூம் வரை தொடர்ந்து பயன்படக் கூடியவை என்பது புரியும். இவை உணர்த்தும் பத்து ஆற்றல்கள்தான், வாழ்க்கைக் கல்வியின் ஆதாரமான அடிக்கல்கள்.

முதல் நான்கு கட்டளைகளை (self awareness, inter personal relation ships,effective communication,empathy) சமூகம் சார்ந்த திறன்கள் (social skills) என்று வகைப்படுத்துகிறோம்.

அடுத்த நான்கும் (critical thinking, creative thinking, problem solving, decision making) சிந்திக்கும் ஆற்றல் (thinking skills) தொடர்பானவை.

கடைசி இரண்டும் (coping with stress, coping with emotions) சூழலுக்கு ஈடுகொடுத்துத் தாக்குப்பிடிக்கும் ஆற்றல் (negotiating skills) தொடர்பானவை. இவை எல்லா மனிதர்களுக்கும், எப்போதும் தேவையானவை.

ஆனால், இவற்றை வளர்த்துக் கொள்வது திடீரென்று ஓரிரவில் செய்துவிடக்கூடிய விஷயம் அல்ல. குழந்தைப் பருவத்திலிருந்தே இவற்றைப் பழகவும், பழக்கவும் வேண்டும்.

இது எதுவும் புதுமையானதோ, அந்நியமானதோ அல்ல. ஏற்கெனவே நாம் கையாண்டு வருபவைதான். கொஞ்சம் யோசித்துப் பார்த்தால், தினசரி நடவடிக்கைகளில் இவற்றை நாம் பயன்படுத்திக் கொண்டுதான் இருக்கிறோம் என்பது தெரியும். சில சமயம் சரியாகவும், சில சமயம் தவறாகவும், பல சமயம் அரைகுறையாகவும் பயன்படுத்திக்கொண்டு இருக்கக்கூடும்.

குழந்தைகளுக்கு இவற்றைச் சொல்லித் தருவது எப்படி? பெற்றோர்கள் வீட்டில் அன்றாடம் ஒவ்வொரு நடவடிக்கையின்போதும், இவற்றை அவர்களுக்கு உணர்த்தலாம். ஆசிரியர்கள்,

மாணவர்களிடம் குழுக் குழுக்களாக பயிலரங்குகளில் விதவிதமான விளையாட்டுகள் மூலம் கற்றுத் தர முடியும்.

ஒரு குட்டிக் கதையைப் பார்ப்போம். ஓர் ஆடு கடும் வெயிலில் நிழலும் உணவும் தேடித் திரிந்தது. வழியில் இன்னொரு ஆடு தன்னைப் போலவே பசியில் சோர்ந்து படுத்துக் கிடந்ததைப் பார்த்தது. இரண்டுமாக சேர்ந்து இரை தேடுவோம் என்று பேசிக்கொண்டு புறப்பட்டன. ஒரு மரத்தில் உண்ணு வதற்கான இலைகள் இருந்தன. ஆனால் எட்டவில்லை. கீழிருந்த ஒரு பெரிய கல்லைப் பார்த்த ஆடு, அதில் ஏறி எம்பிப் பார்த்தது. அப்போதும் எட்டவில்லை. இன்னொரு ஆடு தன் மீது ஏறி நின்று, இலையைத் தின்னச் சொல்லியது. அதன்படி ஒரு ஆடு தின்று முடித்ததும், அது மற்ற ஆட்டுக்கு தன் முதுகைக் காட்டி உதவியது. இரு ஆடுகளும் பசி தணிந்து மகிழ்ச்சியடைந்தன.

இந்தக் கதையில் ஆடுகள் வாழ்க்கைக் கல்வித் திறன்களை அற்புதமாகப் பயன்படுத்தியிருப்பதைக் கவனியுங்கள்.

தனக்குப் பசிக்கிறது; உணவும் நிழலும் தேவை என்பது தன் தேவையை உணர்ந்த நிலை. இன்னொரு ஆடும் தன்னைப் போலவே பசியில் இருக்கிறது என்பதைக் கவனித்தது 'எம்பதி'. அத்துடன் உறவாட ஆரம்பித்தது 'இன்டர் பர்சனல் ரிலேஷன்ஷிப்'. இருவரு மாக இரை தேடலாம் என்ற கருத்தைப் பகிர்ந்துகொண்டது 'கம்யூனிகேஷன்'. மரத்தில் இலைகள் எட்டாமல் இருந்தது 'பிராப்ளம்'. அதை அவிழ்க்க முதலில் யோசித்தது 'க்ரிட்டிகல் திங்க்கிங்'. கல்லையும், பின்பு ஒன்றின் முதுகை மற்றதும் பயன்படுத்தியது 'க்ரியேட்டிவ் திங்க்கிங்'. விளைவுதான் 'பிராப்ளம் சால்விங்'. உணவும் நிழலும் கிடைக்காமல் அலைந்ததில் ஏற்பட்ட மன அழுத்தத்தை லேசாக்கிக்கொள்ளவும், வருத்த உணர்ச்சியைக் கையாளவும் தவறியிருந்தால், இவை எதுவும் சாத்தியம் இல்லை.

ஆடுகளைவிட எக்ஸ்ட்ராவாக அறிவும் ஆற்றலும் உள்ள நாம் எத்தனை அற்புதமாக வாழ முடியும்! நான் யார் என்று உணர்வதுதான் முதல் படி.

நான் என்பது என் உடல். என் உள்ளம். இரண்டையும் எப்படி உணர்வது?

அத்தியாயம் 21

# நான் யார்? நீ யார்?

"அம்மா, நான் யாரும்மா?"

ஐந்து வயதுக் குழந்தை கேட்கும்போது என்ன பதில் சொல்கிறோம்?

"நீ என் செல்லக் கன்னுக்குட்டி!"

குழந்தை செல்லமாகச் சிணுங்குகிறது.

"போம்மா, நான் என்ன மாடா?"

குழந்தைக்கு தான் விலங்கு அல்ல என்பது தெரியும்; அது அம்மாவுக்கும் தெரியும் என்பதும் தெரியும்; அம்மா தன்னைக் கொஞ்சுகிறார் என்பதும் தெரியும்; அந்தக் கொஞ்சல் தனக்குப்

பிடித்திருக்கிறது என்பதும் தெரியும்.

இந்த அன்றாட உரையாடலில் குழந்தை தன்னைப் பற்றி உணர்ந்திருப்பது என்ன? தன்னைச் சுற்றியுள்ள செடி, கொடி, புல் பூண்டு, ஆடு, மாடு, இவற்றிலிருந்து தான் வேறுபட்ட ஒரு மனித உயிர் என்பதை உணர்ந்திருக்கிறது. தன்னைக் கவனித்துக் கொள்ள, தன்னிடம் அன்பு காட்ட, தன்னைப் போன்ற இன்னும் பல மனித உயிர்கள் தன்னைச் சுற்றி இருப்பதை உணர்ந்திருக்கிறது.

இப்படிப் பலப்பல உரையாடல்கள், நிகழ்ச்சிகள் ஒரு குழந்தையைச் சுற்றி அன்றாடம் நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன. இவை ஒவ்வொன்றும் குழந்தைக்கு தான் யார் என்று உணரச் செய்துகொண்டே இருக்கின்றன.

இன்னொருவிதமாகச் சொல்வதானால், நீ யார் என்று நம்மைச் சுற்றி உள்ள மற்றவர்கள் நமக்கு உணர்த்திக்கொண்டே இருக்கிறார்கள். அதாவது, நான் யார் என்று அவர்கள் கணிப்பதை, என் மீது அவர்கள் திணித்துக் கொண்டே இருக்கிறார்கள் என்றும் சொல்லலாம்.

குழந்தை வளர வளர, தான் யார் என்று தான் நினைப்பதும், உணர்வதும், தான் யார் என்று மற்றவர்கள் தனக்கு உணர்த்தியதும், ஒன்றா, வெவ்வேறா என்பதைச் சிந்திக்கும் ஆற்றலை அடைகிறது. இந்தச் சிந்திக்கும் ஆற்றல்தான், ஒருவருடைய ஆளுமை என்று சொல்லும் 'பர்சனாலிட்டி'யை வடிவமைத்துக் கொள்ள உதவுகிறது. நான் யார் என்று தன்னைத்தானே உணர்வது, ஒவ்வொரு மனிதருக்கும் தேவை. அது முற்றும் துறந்த ஞானிகளுக்கும், ஆன்மிகவாதிகளுக்கும் மட்டுமான விஷயம் அல்ல. 'நான் யார்' என்று நம்மை நாமே புரிந்துகொண்டால்தான் நம்மால் உணர்ச்சிகளைக் கையாள முடியும்; மன அழுத்தங்களுக்கு ஈடு கொடுக்கவும் முடியும்.

செக்ஸ், நம் வாழ்க்கையில் உணர்ச்சிகளுடனும் மன அழுத்தத்துடனும் மிகவும் சம்பந்தப்பட்டு இருக்கிறது. செக்ஸ் தேவைகள் உணர்ச்சி சார்ந்தவை. அவை பூர்த்தி செய்யப்படாத நிலைமை, மன அழுத்தத்தை அதிகரித்தே தீரும். 'செக்ஸ்' என்ற இடத்தில் அன்பு, பணம் என்று இன்னும் வேறு சில சொற்களைப்

பொருத்திப் பார்த்தாலும், அவையும் பொருந்தும்.

தான் யார், தன் தேவைகள் என்ன என்பதை, குழந்தை ஒவ்வொரு கட்டத்தில் ஒவ்வொரு விதமாக வெளிப்படுத்துகிறது. பேசக் கற்பதற்கு முன்னால் இதை அழுகையில் தெரிவிக்கிறது குழந்தை. 'அழுத பிள்ளை பால் குடிக்கும்' என்பது மரபான சொலவடை. அழாத பிள்ளை, தன் பசியைப் பிறருக்கு உணர்த்தியிருக்க முடியாது. பசியை உணர்ந்ததும், பெரியவர்களிடம் போய் தனக்குப் பசிக்கிறது என்று தெரிவிக்கக் கற்றுக்கொள்ளும் குழந்தையால்தான் பசியைத் தணித்துக் கொள்ள முடியும். வளர்ந்த பருவத்தில் ஏற்படும் இன்னொரு தேவையான செக்ஸ் உறவைப் பூர்த்தி செய்துகொள்ள, சரியான துணையைத் தேடி 'ஐ லவ் யூ' சொல்வதும், அதேபோன்ற வெளிப்பாடு தான்!

யாரிடம் போய் தன் பசியைத் தெரிவிக்க வேண்டும் என்று வீட்டில் இருக்கும் குழந்தை புரிந்துவைத்திருப்பது போல, வளர்ந்த இளைஞரும் தன் செக்ஸ் தேவையை யாரிடம், எப்படித் தெரிவிப்பது, யார் யாரிடம் தெரிவிக்கக் கூடாது என்ற பக்குவமான அறிவைப் பெற்றிருக்க வேண்டும். இந்த அறிவு ஒரு நாளில் வருவது அல்ல!

நான் யார் என்பதைப் படிப்படியாகப் புரிந்துகொண்டதிலிருந்து தான் வரவேண்டும். நம் உடலைப் புரிந்துகொள்வது, உள்ளத்தைப் புரிந்துகொள்வது என இதன் இரு அம்சங்களையும் பார்ப்போம். நான் யார் என்று உணர்வது என்பது, முதலில் நான் என்னவாக இருக்கிறேனோ அதை ஏற்றுக்கொள்வதில் தொடங்குகிறது.

கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்தால், எப்படி இருக்கிறேன்?

பிரமாண்டமாக அகன்று விரிந்து, முகத்தையே ஆதிக்கம் செலுத்தியபடி இருக்கிறது என் மூக்கு. சிறிதாக, கூராக, ரோமானியர்களைப் போல இருந்தால்தான் அழகான மூக்கு என்கிறார்களே, அந்த 'அழகான' மூக்கு இல்லை என்னுடையது. அப்படியானால் நான் அழகாக இல்லையா?

அப்படி இல்லை. என் மூக்கு அழகாக இல்லை என்று வேறு யாரோதான் நினைக்கிறார்கள். நான் எப்படி இருந்தால், நன்றாக

இருக்கும் என்று அவர்கள் நினைக்கும் நினைப்பு அது.

அது என் நினைப்பு இல்லை.

எல்லோர் மூக்கும் ரோமானிய மூக்குபோல இருந்தால், எப்படி இருக்கும்? இப்படி இருந்தால்தான் அழகான உதடு; இப்படி இருந்தால் தான் அழகான கண்... இப்படி ஒவ்வொரு உறுப்புக்கும் ஓர் அழகு இலக்கணம் பிறர் வைத்திருக்கலாம். அந்த இலக்கணப்படியே அத்தனை முகங்களும் இருந்தால், எப்படி இருக்கும்? அலுப்பாக இருக்கும் என்பதுதான் உண்மை! எல்லா மனிதர்களும் ஜெராக்ஸ் பிரதிகளாக இருந்தால், நமக்கு ஒருவரையொருவர் பார்த்துப் பேசவே வெறுப்பாகிவிடக் கூடும். வகைவகையாக முகங்கள் இருப்பது தான், நம் வாழ்க்கையை சுவாரஸ்யமாக வைத்திருக்கிறது.

எனவே, எனக்கு என் மூக்கு, என் முகம் அழகாகத்தான் இருக்கிறது. அதுபோலவே என் மூக்கிலிருந்து, என் முகத்திலிருந்து வேறுபட்ட பிற விதவிதமான முகங்கள் எல்லாமே அழகாகத்தான் இருக்கின்றன.

கண்ணாடியில் என் முகத்தைப் பார்க்கிறேன். சோகமாக வைத்துக் கொள்கிறேன். அழுதபடி பார்க்கிறேன். அந்த முகம் எனக்குப் பிடிக்கவில்லை. சட்டென்று மாறிச் சிரிக்கிறேன். இந்த முகம் பிடித்திருக்கிறது. என் முகம் மட்டுமல்ல, எந்த முகமும் அழும்போது பிடிக்கவில்லை. அழுகையின் பின்னே இருக்கும் வலி உறைப்பதுதான் காரணம்.

நான் யார்? என் வலி, மற்றவர் வலி பிடிக்காத ஒரு மனிதன்.

குழந்தைகளைக் கவனியுங்கள். தங்களுக்கு வலிக்கும்போது மட்டும் அவர்கள் அழுவதில்லை. இன்னொரு குழந்தை அழுவதைப் பார்க்கும் குழந்தையும் சங்கடமாக உணர்கிறது. அதில்தான் ‘எம்பதி’ எனப்படும், தன்னைப் போல் பிறரை நினைக்கும் உணர்ச்சியின் விதை இருக்கிறது.

எல்லா சந்தர்ப்பங்களிலும் நாம் தன்னைப் போல் பிறரை எண்ணிப் பார்க்கிறோமா?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. என் உடலில் எனக்குப் பிடித்த பகுதி எது? ஏன்?
2. எனக்குப் பிடிக்காத பகுதி எது? ஏன்?
3. கண்ணாடியில் என்னைப் பார்க்கும்போது எனக்கு என்ன தோன்றுகிறது?
4. என் உடலில்/முகத்தில் மற்றவர்களுக்குப் பிடித்த, அழகான அம்சம் எது?
5. என் உடலில்/முகத்தில் மற்றவர்கள் விமர்சிக்கும் அம்சம் எது?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 22

# நான் வாழ நான் போதுமா?

'தன்னைப் போல் பிறரை நினை!' என்று சொல்வது எளிதானது; ஆனால், பின்பற்றுவதற்குச் சற்றுக் கடினமானது!

ஏனென்றால், நான் யார் என்று நம்மை நாமே உணரும் முயற்சியில், நமக்கு முதலில் புரிவதெல்லாம் நம்முடைய தேவைகள்தான்; நம்முடைய உணர்ச்சிகள்தான். 'எனக்கு இது வேண்டும். எனக்கு இது பிடித்திருக்கிறது. எனக்கு இது வேண்டாம். எனக்கு இது பிடிக்கவில்லை' என்பவைதான், நம்மை நாம் உணர்ந்ததன் அடையாளமாக, முதலில் நமக்கே சொல்லிக்கொள்ளும் விஷயங்கள்.

இந்த உணர்வு மட்டும்தான் நாம் என்று இருப்போமேயானால், நாம் முற்றிலும் சுயநலம் மட்டுமே உள்ள மனிதர்களாக ஆகிவிடுவோம். அப்படி ஆகிவிடுவதற்கான ஆபத்தின் அறிகுறிகளை, அன்றாட உரையாடல்களில் காண முடியும்.

''ரமேஷ் தினமும் ஸ்கூலுக்கு ஃபோர்ட் எண்டீவர் கார்ல வரான். இன்னும் என்னை ஓல்டு மாடல் மாருதில கொண்டு போய் விடறீங்க!''

''ஐஸ்வர்யாகிட்ட வீடியோ, டிஜிட்டல் செல்போன் இருக்கு. என்கிட்ட இன்னும் 1100 மாடல்தான்!''

இப்படிப்பட்ட உரையாடல்களைப் பணக்கார வீட்டுச் சிறுவர்கள் முதல் ஏழை வீட்டுக் குழந்தைகள் வரை பல தரப்பினரிடமும், அவரவர் வாழ்க்கை நிலைக்கேற்ப கேட்க முடியும்.

இவையெல்லாம் பிறரைப் போல் தன்னை நினைக்க விரும்புவதால் வருபவை. தன்னைப் போல் பிறரை கருதத் தொடங்கினால் மட்டுமே மாறக்கூடியவை. அதற்காக, 'உனக்கும் கீழே உள்ளவர் கோடி. நினைத்துப் பார்த்து நிம்மதி நாடு' என்று மாற்றம் நாடாத மனநிலைக்குச் செல்ல வேண்டும் என்று சொல்லவில்லை.

மனித வாழ்க்கையில், எந்த ஒரு தனி மனிதரும் சுயச்சார்புடன் மட்டுமே வாழ்ந்துவிட முடியாது. ஒவ்வொருவரும் மற்றவரை நேரடியாகவோ மறைமுகமாகவோ சார்ந்து தான் வாழ்ந்தாக வேண்டும். அப்படித் தான் வாழ்கிறோம். நாம் நம் தேவை களுக்காகப் பலரைச் சார்ந்திருப்பதைப் போலவே, தங்கள் தேவைகளுக்காகப் பலர் நம்மைச் சார்ந்து இருக்கிறார்கள். இதையும் நாம் உணர வேண்டும். தன்னைத் தானே உணர்வதில், இதுவும் ஒரு முக்கியமான பகுதி. நம் மீது நமக்கே மதிப்பும் மரியாதையும் ஏற்படுவதற்கான காரணங்களில் இதுவும் ஒன்று.

எப்படியெல்லாம் மனிதர்கள் ஒருவரை ஒருவர் சார்ந்திருக்கிறோம் என்பதை நம் குழந்தைகளுக்கு தினமும் சொல்லித்தர ஏராளமான சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. தட்டில் வந்து விழும் சாப்பாடு எங்கிருந்து வருகிறது என்பதை நாம் சொல்லுவ தில்லை. காசு கொடுத்தால், கடையில் அரிசி கிடைக்கும். காசு கொடுத்தால்,

கேஸ் சிலிண்டர் வீட்டுக்கு வரும். காசு கொடுத்தால் காய், பழங்கள் நம் கூடையில் நிரம்பும். காசு கொடுத்தால், தனக்குப் பிடித்தமான உடை கிடைக் கும். இதை எல்லாக் குழந்தைகளும் நாம் எடுத்துச் சொல்லத் தேவையின்றி, தங்கள் அனுபவத்திலேயே நன்றாக அறிந்துவைத்திருக்கிறார்கள்.

காசு கொடுத்தால் நம்முடைய தேவைகள் பூர்த்தியாகிவிடும் என்று மட்டும் புரிந்துவைத்திருப்பது ஆபத்தானது. காசு கொடுத்து வாங்கும் ஒவ்வொரு பொருளின் உற்பத்தியிலும் காசு கொடுத்துப் பெறும் ஒவ்வொரு சேவையின் பின்னாலும், எத்தனை எத்தனை மனிதர்களின் அறிவும் உழைப்பும் இருந்தாக வேண்டியிருக்கிறது என்பதை நம் குழந்தை களுக்கு சொல்லித் தர வேண்டும்.

'பருப்புப் பாயசம் இன்னும் ஒரு டம்ளர் வேணும்!'

'நல்லா இருக்கா?'

'ம்...'

'அதுல வெல்லம் போட்டிருக்கு. தெரிஞ்சுதா?'

'சர்க்கரை போடலியா?'

'இல்லே. ஆனா சர்க்கரை, வெல்லம் ரெண்டையும் கரும்புலேர்ந்துதான் தயாரிக்கறாங்க, தெரியுமா?'

'பின்னே எப்பிடி ரெண்டும் வேற வேறயா இருக்கு?'

'முதல்ல கரும்பு எப்பிடி வெளையுதுனு உனக்குத் தெரியுமா?'

கரும்பு விவசாயம் முதல் சர்க்கரை ஆலைகளின் தொழில்நுட்பம் வரை, உழவர்கள் வேலை முதல் ஆலைத் தொழிலாளர் வேலை வரை, வேளாண் விஞ்ஞானி முதல் மெக்கானிக்கல் இன்ஜினீயர் வரை எப்படிப் பல விதமான மனிதர்களின் உழைப்பு பருப்புப் பாயசத்துக்குப் பின்னால் சம்பந்தப்பட்டு இருக்கிறது என்பதை எளிமையாக, அதே சமயம் சுவையான கதை போல் குழந்தையிடம் சொல்லிக் கொண்டே போக முடியும்.

பல மனிதர்கள் நம் தேவைகளுக்காகத் தங்கள் அறிவையும் உழைப்பையும் தருகிறார்கள். அந்த விவரங்களை அறிந்தால்தான், நாமும் அதுபோல அவர்களுடைய தேவைகளுக்காக நம்

உழைப்பையும் அறிவையும் தர வேண்டும் என்ற உணர்ச்சி குழந்தை களுக்கு ஏற்படும்.

அதே சமயம், எல்லாமே உலகத்தில் காசுக்காக மட்டுமே நடப்பதில்லை. காசு வாங்கிக்கொள்ளாமல் நமக்காக எத்தனையோ பேர் உழைக்கிறார்களே, ஏன்? நம் மீது இருக்கும் அன்பினால்தான் என்பதைக் குழந்தைகளுக்கு உணர்த்த வேண்டும். அன்பின் நிமித்தம் சக மனிதருக்குத் தேவையானதைத் தானும் செய்ய வேண்டும் என்ற உணர்ச்சியைக் குழந்தைக்கு ஏற்படுத்த வேண்டும்.

'எம்ப்பதி' எனப்படும் தன்னைப் போல் பிறரைக் கருதும் உணர்ச்சியைப் பழக, முதலில் வீட்டிலிருந்து தொடங்கலாம். தொடர்ந்து பள்ளிக்கூடத்தில், நண்பர்கள் வட்டாரத்தில், அடுத்தடுத்து எல்லா சக மனிதர்களிடமுமாக இதை விரிவுபடுத்தலாம்.

'எம்ப்பதி'யின் தொடக்கப் புள்ளி, 'என்னை நான் உணர்வதுபோல, அடுத்தவரை நான் புரிந்துகொள்ள முற்படுவது'தான்!

12 வயது பார்த்திபனுக்கு புது ரீபாக் ஷூ வேண்டும் என்று ஆசையாக இருக்கிறது. டூப்ளிகேட் உட்லண்ட்ஸ் வாங்குவதாயிருந்தால்கூட சுமார் 800 ரூபாய் தேவை. அப்பா இப்போது பணம் இல்லை என்று சொல்லிவிட்டார்.

எரிச்சலாக இருக்கிறது. 'நான் என்ன மாதாமாதமா ஷூ கேட் கிறேன்? இந்த வாரம் மேட்ச்சுக்கு வரும்போது புது ஷூவுடன் வருவேன் என்று குரூப்பில் சொல்லி வைத்தது எல்லாம் வேஸ்ட்! நான் எப்படி அவர்கள் முகத்தில் விழிப்பேன்!'

கடுப்பில் சரியாகத் தூக்கம்கூட வரவில்லை. நடு ராத்திரியில் சட்டென்று விழிப்பு வருகிறது. யாரோ இருமும் சத்தம். யார்? அப்பாதான். வாஷ்பேஸினில் துப்பிக்கொண்டே இருமுகிறார்.

'என்னப்பா ஆச்சு?'

'ஒண்ணும் இல்லை. நீ போய்ப் படு!'

அடுத்த நாள்... அடுத்த வாரம்... இரவில் அப்பாவின் இருமல் தொடர்கிறது.

'டாக்டரைப் போய்ப் பார்க்கலாம், வாங்களேன்!' - அழைக்கிறாள் அம்மா.

'போகலாம், போகலாம்!' ஆனால், போகவில்லை.

'ஏம்மா, அப்பா டாக்டர்கிட்டே போக மாட்டேங்கறார்?'

'போனா, எக்ஸ்-ரே எடுக்கச் சொல்லுவார். ஏராளமா மருந்து எழுதிக் கொடுப்பார். 600, 700 ரூபாய் செலவாகும். அதான் இப்ப வேணாம், அடுத்த மாசம் அரியர் பணம் வந்ததும் போறேங்கறார்!'

பார்த்திபனுக்கு ரீபாக் ஷூ ஒரு நொடி மனதில் தோன்றி மறைகிறது. அப்பா தன் ஷூவை மட்டும் மறுக்கவில்லை; தனக்கான மருத்துவத்தையும் மறுத்துக் கொண்டு இருக்கிறார். மகன் அப்பாவைப் புரிந்துகொள்ள ஆரம்பிக்கும் முதல் புள்ளி இது!

## இன்றைய ஹோம் வொர்க்:

1. என் தேவை என்ன என்பதை எப்படித் தீர்மானிக்கிறேன்? மற்றவர்களிடம் இருப்பதை வைத்தா? எனக்குத் தேவை என்ற அடிப்படையிலா?
2. என் அன்றாடத் தேவைகளுக்கு நான் யார் யாரைச் சார்ந்திருக்கிறேன்?
3. தினமும் என்னைச் (என் பணியை) சார்ந்து நேரடியாகவும் மறைமுகமாகவும் யார் யார் இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியுமா?
4. ஊதியம் பெறாமல் அன்பினால் என் தேவைகளை அளித்து வருபவர்கள் யார் யார்?
5. ஊதியம் வாங்காமல் அன்பின் காரணமாக நான் யார் யாருக்கு உதவிகரமாக இருக்கிறேன்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 23

# உன் கண் வழியே நான் பார்த்தால்?

‘நான் விரும்பும் லேட்டஸ்ட் ஷூவுக்கு மட்டுமல்ல, அப்பாவுக்கான மருத்துவ செலவுக்குக்கூடப் போதுமான பணம் நம் குடும்பத்தில் இப்போது இல்லை’ என்று பன்னிரண்டு வயது பார்த்திபனுக்குப் புரியத் தொடங்கும்போது, எதற்கு முன்னுரிமை தரவேண்டும் என்பதும் புரியத் தொடங்குகிறது. அதுதான் கிரிட்டிகல் திங்க்கிங்!

சைக்கிள் பஞ்சராகி வழியில் ரிப்பேர் செய்யக் கடையும் இல்லாமல், பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்கு சைக்கிளைத் தள்ளிக்கொண்டே வரும்போது வீட்டு வேலைக்காரம்மா, ‘என்னா

கண்ணு பஞ்சராயிடுச்சா?' என்று விசாரித்ததும், 'அதான் பாத்தா தெரியுது இல்லே? அப்புறம் எதுக்குக் கேக்கறே?' என்று எரிச்சலுடன் முணுமுணுக்கிறான் பார்த்திபன். வீட்டுக்குள் நுழையும் வேலைக்காரம்மாவின் முகம் தெரிந்ததும், தன்னிடம் எரிச்சலூட்டும் கேள்வியைக் கேட்டதைப் பற்றி அம்மாவிடமும் சிணுங்குகிறான்.

'கொழந்தை பாவம். சைக்கிள் பஞ்சர். கஷ்டப்பட்டு தள்ளிக்கிட்டு வந்திருக்கான். நீ வேற

எதுக்கு அவனை எரிச்சல் பண்ணே?' என்று கேட்கும் அம்மாவால் பார்த்திபன் மனதில் எம்பதியையும் ஏற்படுத்த முடியாது; கிரிட்டிகல் திங்க்கிங்கையும் உருவாக்க முடியாது.

'அவங்க அக்கறையாதானே கேட்டாங்க. நீ ஒரு நாள் நடந்து வந்ததுக்கே அலுப்பா இருக்கு இல்லே? அவங்க தெனமும் ரெண்டு கிலோ மீட்டர் நடந்துதான் நம்ம வீட்டுக்கு வேலை செய்ய வர்றாங்க, தெரியுமா?' என்று சொல்லும் அம்மாதான் பார்த்திபன் மனதில் எம்பதிக்கும் கிரிட்டிகல் திங்க்கிங்குக்கும் விதை ஊன்ற முடியும். அடுத்த முறை சைக்கிளில் வேகமாக, வேலைக்காரம் மாவை ஓவர் டேக் செய்யும்போது, நிறுத்தி 'நம்ம வீட்டுக்குதானே போறீங்க? வாங்க கூட்டிட்டுப் போறேன்' என்று பார்த்திபன் சொல்ல நினைத்தால், அவனுடைய எம்பதியும் கிரிட்டிகல் திங்க்கிங்கும் அடுத்தகட்டமாக கிரியேட்டிவ் திங்க்கிங்குக்கும் அவனை இட்டுப் போய்விட்டதாக அர்த்தம்.

தன்னைப் போல் பிறரைக் கருதும் மனம்தான், முதல் கட்டத்தில் குழந்தைக்கு தன்னைச் சுற்றியுள்ளவர்களுடன் தன் உறவின் தன்மையைத் தெளிவுபடுத்திக்கொள்ள உதவும். குழந்தையின் முதல் நெருக்கமான வட்டம் அப்பா, அம்மா, உடன்பிறப்புகள். தாத்தாக்கள், பாட்டிகள், அத்தை, பெரியப்பா, சித்தப்பா, பெரியம்மா, சித்தி வகையறாக்கள் கூடவே இருந்தால் அடுத்த வட்டம். பக்கத்து வீட்டுக் காரர்கள், வீட்டுக்கு வந்து போகும் பூக்காரர், பால்காரர், பேப்பர்காரர், கேஸ்காரர், காய்கறி வியாபாரி, கடைக்காரர்கள், பள்ளிக்கூட நண்பர்கள், ஆசிரியர்கள், என்று அடுத்த வட்டங்கள் விரிவடைகின்றன.

இந்த உலகத்தில், தன்னைச் சுற்றியுள்ள ஒவ்வொருவருக்கும் தனக்கும் உள்ள உறவு என்ன என்பதைக் குழந்தை எப்படிப் புரிந்துகொள்கிறது? பெரியவர்களின் கண்கள் வழியாகத்தான் முதலில் ஒவ்வொருவரையும் குழந்தை பார்க்கக் கற்றுக்கொள்கிறது. முன்பே இந்தத் தொடரில் குறிப்பிட்ட கவிஞர் வெண்ணிலாவின் கவிதையில் சொன்னது போல, காலையில் வாசலில் விழும் பேப்பரை அப்பாவிடமும் பால் கவரை அம்மாவிடமும் கொடுக்க குழந்தை (காப்பியடித்துக்) கற்றுக்கொண்டு இருக்கும்.

ஒரு குழந்தையின் மொழியில் தெரியும் வாழ்க்கைப் பார்வை பெரியவர்களிடமிருந்து இரவல் வாங்கியதுதான். வேலையாட்கள், பூ, பால், காய் விற்பவர்கள் ஆகியோரை அவன், அவள், வந்தாள், போனாள் என்று குழந்தை சொல்வது எப்படி? டாக்டர், இன்ஜினீயர், ஆடிட்டர், டீச்சர் ஆகியோரை மட்டும் அவர், இவர், வந்தார், கேட்டார் என்று பேசுவது எப்படி? குழந்தையின் முதல் வட்டத்தில் இருக்கும் பெரியவர்கள் வழியாகத்தான் சாதிப் பார்வை, வர்க்கப் பார்வை, சமூக அந்தஸ்து அடுக்குகள் பற்றிய புரிதல் அனைத்தும் குழந்தைக்குக் கற்பிக்கப்படுகின்றன. இதை அடுத்தடுத்த வட்டங்கள் மறு உறுதி செய்கின்றன.

வளர்ந்து படித்துச் சொந்தமாகச் சிந்திக்கும் ஆற்றல் அதிகரிக்கும்போதுதான் இவை பற்றிய கிரிட்டிகல் திங்க்கிங் ஏற்பட முடிகிறது. அதற்கும் ஒவ்வொரு மனிதரிடமும் சாதி, வர்க்கப் பழக்கவழக்கங்கள் நிறையவே படிந்துவிடுகின்றன. இவற்றால் உருவான ஆதிக்க மனநிலை/அல்லது அடிமை மனநிலை என்பதிலிருந்து வெளியேறுவது என்பது தொடர்ந்து விழிப்போடு மேற்கொள்ளும் தீவிர முயற்சிக்குப் பிறகே சாத்தியமாகும்.

அதிலும் குறிப்பாக, ஆண்-பெண் வேறுபாடுகள் பற்றி குழந்தைப் பருவத்தில் மனதில் விதைக்கப்படும் கருத்துகள் பெரியவர்களான பின்னரும் எளிதில் நீக்கிவிட முடியாத வல்லமை உடையவை. ஆணுக்குப் பெண்ணிடமும் பெண்ணுக்கு ஆணிடமும் சக மனிதர்களாக இருக்க வேண்டிய எம்பதி, இருவரும் வளர்ந்த பிறகுதான் அவரவர் விருப்பப்படி உருவாக்கிக்கொள்ள வேண்டியதாக இன்றைய நம் குடும்ப-சமூக அமைப்பில் இருக்கிறது.

இது இப்படி இருப்பதுதான் ஆண்-பெண் பாலியல் உறவுகளில் தொடர்ந்து பல சிக்கல்களையும் ஏற்படுத்தி வருகிறது. எனவே, குழந்தைப் பருவத்திலேயே ஆண்-பெண் அடையாளம் தொடர்பான எம்ப்பதியை நாம் ஏற்படுத்தியாக/விதைத்தாக வேண்டும்.

பெண்களைக் கிண்டல் செய்யும் ஜோக் இந்த எம்ப்பதிக்கான தடைக் கற்களில் ஒன்று. அண்மைக்காலமாக ஆண்-பெண் சமத்துவத்தை ஊக்குவிக்கும் மாற்று நகைச்சுவைக் கதைகள் மாற்று சிந்தனையாளர்களால் உருவாக்கப்பட்டு வலம் வரத் தொடங்கியுள்ளன. பலவித வடிவங்களில் இந்தக் கதைகள் இருக்கின்றன. 'சும்மா' என்ற தலைப்பில் பத்தாண்டுகளுக்கு முன்பு இரு குறும்படங்களை நான் தயாரித்தேன். பின்னர் 'எலிபதி' என்ற தலைப்பில் ஒரு குறும்படத்தை என் நண்பர் விஸ்வநாதன் தயாரித்திருக்கிறார். (அதில் வரம் தரும் சாமியாராக என்னை வைத்து!). இந்த வருடத்தில் பெண்களுக்கு மிகவும் பிடித்த இ-மெயில் கதை என்று பெயர் வாங்கியிருக்கும் அப்படிப்பட்ட ஒரு குட்டிக் கதையைப் பார்ப்போமா?

இ- மெயில் கதை இதோ:

'நான் மட்டும் தினமும் ஆபீஸ் போய் அல்லாட வேண்டியிருக்கிறது. இவளோ ஜாலியாக நாளெல்லாம் வீட்டில் உட்கார்ந்துகொண்டு இருக்கிறாளே' என்று ஒரு கணவனுக்கு மனைவி மீது பொறாமை ஏற்பட்டது. இரவு கட்டிலுக்குப் பக்கத்தில் தரையில் மண்டியிட்டு கடவுளை வேண்டினான். ' நாம் படும் கஷ்டம் அவளுக்குப் புரிய வேண்டும். எனவே, ஒரே ஒரு நாள் எங்கள் உடல்களை மட்டும் மாற்றிவிடு' என்றான். அப்படியே ஆகட்டும் என்றார் கடவுள்.

மறு நாள் காலையில் இவன் பெண்ணாக விழித்தெழுந்து துணைவருக்குச் சமையல் செய்தான்(ள்). குழந்தைகளை எழுப்பிக் குளிப்பாட்டி உடை உடுத்தி சோறு ஊட்டி பள்ளிக்கூடத்துக்கு தயார் செய்து அனுப்பிவிட்டு, துணிகளைத் தோய்ப்பதற்கு ஊற வைத்தான்(ள்). மளிகைக் கடைக்குப் போய் பொருட்களை வாங்கிவிட்டு, மின்வாரியத்துக்குப் போய் கியூவில் நின்று பில் கட்டிவிட்டு, வீடு திரும்ப மதியமாகிவிட்டது.

அவசரஅவசரமாகத் துணி தோய்த்து, உலர்த்திவிட்டு சமையலறை, கழிப்பறைகளைத் தேய்த்துப் பெருக்கி சுத்தப்படுத்தினான்(ள்). பள்ளிக்கூடத்துக்குப் போய் குழந்தைகளைக் கூட்டிவரும் வழியில் அவர்களுடன் சண்டையும் சமாதானமுமாகப் போராடி எரிச்சலாயிற்று. அவர்களுக்குச் சாப்பிட டிபன் கொடுத்துவிட்டு மறு நாள் டிரெஸ்ஸை அயர்ன் செய்தான்(ள்). ஹோம் வொர்க் சொல்லிக் கொடுத்தான்(ள்). டி.வி. பார்த்தபடியே அவர்களைச் சாப்பிட வைத்துவிட்டு தூங்கப் பண்ணினான்(ள்). மணி ஒன்பதாகிவிட்டது.

அலுவலகத்திலிருந்து திரும்பி வந்த துணைவருக்கு உணவு பரிமாறி முடித்து அடுக்களையை ஒழித்துவிட்டு வந்து படுத்தால், துணைக்கு அடுத்த பசி. அதையும் முணுமுணுக்காமல் தீர்த்துவிட்டு தூங்கி... மறு நாள் காலை எழுந்த கணவன்(ள்) சட்டென்று தரையில் மண்டியிட்டு 'கடவுளே. இதெல்லாம் இப்படி இருக்கும் என்று எனக்குத் தெரியாது. தயவுசெய்து உடனே எங்களைப் பழையபடி உடல் மாற்றிவிடு' என்று வேண்டினான்(ள்).

கடவுள் சொன்னார்: ' ரொம்ப சந்தோஷம். உனக்குப் புத்தி வந்திருக்கிறது. பழையபடி உன்னை ஆக்கிவிடுகிறேன். இன்னும் ஒரு பத்து மாதங்கள் மட்டும் காத்திருக்க வேண்டும். ஏனென்றால் நேற்று ராத்திரி நீ கர்ப்பமாகிவிட்டாய்.'

பெண்ணின் வாழ்க்கைச் சிரமங்களை ஆண்கள் புரிந்துகொள்வதில்லை என்பது போலவே ஆணின் நெருக்கடிகளைப் பெண்கள் புரிந்துகொள்வதும் கடினமாகத்தான் நம் சமூகத்தில் இருக்கிறது. ஆனால், புரிந்துகொள்ள வேண்டும் என்று அவளிடம் எதிர்பார்க்கப்படுகிறது.

இப்படிப்பட்ட கதைகளுக்கு அவசியமில்லாத பெரியவர்களாக நம் குழந்தைகளை வளர்ப்பது எப்படி?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. வீட்டின் பொருளாதார நிலை எப்படிப்பட்டது என்பது எந்த வயதில் உங்களுக்குத் தெரியவந்தது?

2. வீட்டில் கேட்கும்போதெல்லாம் பணம்/ கேட்டது கிடைத்தது/ கிடைக்காதது பற்றி... பெற்றோருடன் பேசியது உண்டா? அவர்கள் என்ன சொன்னார்கள்? நீங்கள் என்ன சொன்னீர்கள்?
3. எந்த வயதில் இது எனக்குத் தேவையான செலவு, இது எனக்குத் தேவையற்ற செலவு என்று பெற்றோரிடம் சொல்ல ஆரம்பித்தீர்கள்?
4. வீட்டில் வேலை செய்பவர்கள், பல்வேறு சிறு வியாபாரிகள் ஆகியோருடன் உங்கள் குழந்தைப் பருவ உறவு எப்படிப்பட்டது? எப்படிப்பட்ட மொழியைப் பயன்படுத்தினீர்கள்? ஏன்?
5. அப்பாவின் வேலை, அம்மாவின் வேலை இரண்டும் எப்படிப்பட்டவை என்று எந்த வயதில் கவனிக்க ஆரம்பித்தீர்கள்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 24

# ஆம்பளை மாதிரி... பொம்பளை மாதிரி...ன்னா என்ன?

ஒவ்வொரு ஆண் குழந்தையும் பெண் குழந்தையும், தான் ஓர் ஆண், தான் ஒரு பெண் என்பதை இரண்டுவிதங்களாக அறிந்துகொள்கின்றன. ஒன்று, பார்த்ததும் தெரியும் உடற்கூறு. இரண்டாவது, கலாசாரப் பழக்கவழக்கங்கள்.

காந்தி தன் ஆசிரமங்களில் பின்பற்றி வந்த விதிகளில் முக்கியமான ஒன்று, குழந்தைகள் அனைவரும் ஆண் - பெண் வித்தியாசமின்றி ஒன்றாகக் கிணற்றடியில் சேர்ந்து குளிப்பது என்பதாகும். குழந்தைப் பருவத்திலேயே வெவ்வேறு உடல் அமைப்புகள் பற்றித் தெரிந்துகொள்வது, பின்னாட்களின் மன ஆரோக்கியத்துக்கு நல்லது என்பதே காந்தியின் முடிவு.

மேற்கத்திய நவீன உளவியல் துறையில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்திய அறிஞர் சிக்மண்ட் ஃபிராய்ட், பிறந்த குழந்தை முதலே பாலியல் உணர்வுகள் உளவியல்ரீதியாக இருப்பதைத் தன் ஆய்வுகள் மூலம் வெளிப்படுத்தினார். அவை பெரும்பாலும் இன்றளவும் உளவியல் துறையில் ஏற்கப்பட்ட கருத்துக்களாகவே உள்ளன.

ஃபிராய்ட் உருவாக்கிய கருத்தாக்கங்களில் ஒன்றுதான், ‘பெனிஸ் என்வி’ (penis envy). இது சொல்லப்பட்டு, இன்று சரியாக நூறாண்டுகள் ஆகின்றன. அதற்கு எதிராகப் பல மாற்றுக்

கருத்தாக்கங்கள் - கருப்பைப் பொறாமை, யோனிப் பொறாமை என்றெல்லாம் வந்துவிட்டன. இந்தக் கருத்தாக்கங்கள் என்ன, எதன் அடிப்படையில் இவை உருவாக்கப்பட்டன என்பதைப் புரிந்து கொண்டால், இன்றும் நம் சிந்தனைகள் எப்படி வார்க்கப்படுகின்றன என்பதை உணர முடியும்.

ஃபிராய்ட் சொல்கிற தத்துவம் பலருக்கு ஜீரணிக்கக் கஷ்டமாக இருக்கும்! பெண் குழந்தை வளரும்போது - சுமார் 3 முதல் 5 வயதுக்குள் - தனக்கு ஆண் குழந்தையைப் போல ஒரு பெனிஸ் - ஆண் குறி இல்லையே என்று உளவியல்ரீதியில் பொறாமைப்படுகிறது என்கிறார் ஃபிராய்ட். ஏன் பொறாமை?

பெண் குழந்தையின் ஆழ்மனம் தன் அம்மா மீது மையல் கொள்கிறது. அதேசமயம், ஆண்குறி தனக்கு இல்லையென்று உணரும்போது, அப்படி தான் உருவானதற்கு காரணமே அம்மாதான் என்றும் கருதுகிறது. அதேசமயம், அப்பா மீது அந்தக் குழந்தையின் ஆழ்மனம் ஈடுபாடு கொள்கிறது.

அம்மாவை நோக்கி அப்பாவுக்கு இருக்கும் ஈர்ப்பைத் தன் பக்கம் திருப்பிக்கொள்ள முயற்சிக்கிறது. இதன் மூலம் அம்மாவைத் தண்டிப்பதாக நினைக்கிறது. அப்பாவை ஈர்ப்பதற்கோ, தன் அம்மாவின் நடவடிக்கைகளைக் காப்பியடிக்கிறது. வளர வளர, அப்பா மீது தனக்கு ஏற்பட்ட ஈர்ப்பையே, இதர ஆண்கள் மீதான ஈர்ப்பாக அது மாற்றிக்கொள்கிறது.

இதே போல, ஆண் குழந்தைகளும் இதே பருவத்தில் (3-5) அம்மாவை நோக்கி ஈர்க்கப்பட்டாலும், அதைப் பின்னர் (பெண்

குழந்தையைப் போல) அப்பாவை நோக்கி மாற்றுவதில்லை. ஏனென்றால், அவை இயல்பாகவே தங்களை அப்பாவுடன் அடையாளப்படுத்திக்கொள்கின்றன. அம்மாவின் ஈர்ப்பைப் பெறுவதில் அப்பாவை தன் போட்டியாக நினைக்கின்றன ஆண் குழந்தைகள்!

ஆனால், அப்பாவின் அதிகார பலத்துக்குப் பயப்படும் ஆண் குழந்தை, அம்மா மீதுள்ள ஈர்ப்பை வளர வளர இதர பெண்கள் மீதானதாக மாற்றிக்கொள்கின்றன.

இதுதான் ஃப்ராய்டின் கருத்து.

ஃப்ராய்டுக்குப் பின் வந்த பல உளவியல் அறிஞர்கள், பெண்ணியப் பார்வையில் உளவியலை மறு பரிசீலனை செய்தார்கள். இவர்கள் 'பெனிஸ் என்வி' கருத்தாக்கத்தை முழுமையற்றது என்று அலசி ஆராய்ந்து, சுட்டிக்காட்டியிருக்கிறார்கள்.

தனக்கு ஆண் குறி இல்லை என்று பெண் குழந்தை உளவியல்ரீதியாகப் பொறாமைப்படும் என்றால், தனக்குக் கருப்பை இல்லை என்றோ, யோனி இல்லை என்றோ, மார்பகங்கள் இல்லை என்றோ ஆண் குழந்தையும் பொறாமைப்படாதா என்று எதிர்க் கேள்விகள், கருத்தாக்கங்கள் உருவாகிஇருக்கின்றன.

என்றாலும், ஃப்ராய்டின் பார்வை இன்னமும் உலகம் முழுவதும் பல சமூகங்களில் தாக்கம் செலுத்தி வருகிறது. 'தாயைப் போல பிள்ளை, நூலைப் போல சேலை', 'அப்பனுக்குப் பிள்ளை தப்பாமப் பொறந்திருக்கு' போன்ற சொலவடைகளும் சில புராணக் கதைகளும், ஃப்ராய்டுக்குச் சம்பந்தமில்லாத சமூகங்களிலும் அதே போன்ற கருத்தாக்கங்கள் நிலவியதைக் காட்டுகின்றன.

எனவே, ஆணும் பெண்ணும், தன்னை ஆணாகவும் பெண்ணாகவும் உணர்வது என்பது உடல்கூறு அடிப்படையில் மட்டுமல்ல; ஆண் என்றால் என்ன, பெண் என்றால் என்ன என்று அவரவர் கலாசாரப் பழக்கவழக்கங்கள் தீர்மானித்து வைத்தி ருப்பதன் அடிப்படையிலும் ஆகும்.

கலாசாரம் என்பது வாழ்க்கை முறை மட்டுமல்ல; அதிகாரம் ஒரு சமூகத்தில் யாரோடெல்லாம் எப்படிப் பகிர்ந்துகொள்ளப்படுகிறது,

யாருக்கெல்லாம் எப்படி எப்படி மறுக்கப்படுகிறது என்கிற சமூக அரசியலுமாகும். ஃப்ராய்டின் அலசல்கள் அந்தச் சமூகத்தின் அரசியலுக்குப் பொருந்தலாம்; இன்னொரு சமூகத்தின் வேறுபட்ட அரசியலில் அது மாறலாம்.

அதாவது, ஒரு சமூகத்தில் ஆண் வகிக்கும் பாத்திரம், பெண் வகிக்கும் பாத்திரம் அந்தச் சமூகத்தின் அரசியல் கலாசார அதிகார மாற்றங்களுக்கேற்ப மாறிக்கொண்டே இருக்கிறது; இருக்கும். இன்றைய நமது சமூகத்திலும் ஏராளமான மாற்றங்கள் நிகழ்ந்தபடி இருக்கின்றன. பழையவற்றில் சிலதை விட முடியாமலும், புதியதில் சிலவற்றைத் தள்ள முடியாமலும் ஒவ்வொரு சமூகமும் தனக்குத்தானே போராடித்தான் அடுத்தகட்டத்துக்குச் செல்லும் என்பதுதான் மனித வரலாறு.

மதம், சாதி, மொழி, இனம் ஆகிய அடிப்படைகளில் இருக்கும் ஏற்றத்தாழ்வுகள், அதிகார வித்தியாசங்கள் ஆகியவற்றைச் சரி செய்ய ஒரு சமூகத்தில் பல்வேறு சக்திகளும் சிநேகமாகவோ, பகையாகவோ போராடிக்கொண்டே இருக்கின்றன. அதே போல, ஆண் - பெண் என்ற அடிப்படைகளில் இருக்கும் வித்தியாசத்தைக் களையவும் இந்த உறவில் சமத்துவத்தை ஏற்படுத்தவும், சிநேக மாகவும் பகையாகவும் சண்டைகள் நடந்துகொண்டுதான் இருக்கின்றன. இந்தச் சண்டைகளில் யார் கை ஓங்கியிருக்கிறது என்பதை, அடுத்தடுத்த தலைமுறைகளின் ஆண் - பெண் பாத்திர வார்ப்புகள் அடையாளம் காட்டுகின்றன.

நம் குழந்தைகளை எப்படிப்பட்ட வார்ப்புகளாக உருவாக்கப்போகிறோம்? பெண்கள் மென்மையானவர்கள், வலிமையற்றவர்கள், பலவீனமானவர்கள், சுயச்சார்பு இருக்க முடியாதவர்கள் என்ற கருத்துக்கள் ஆதிக்கம் செலுத்தியதை மாற்ற முற்பட்டபோது, சிலர் பெண் பிள்ளையை 'ஆம்பளை' மாதிரி வளர்க்க வேண்டும் என்பதை மாற்று வழிமுறையாக வைத்தார்கள். தங்கள் வீட்டுப் பெண்ணை இப்படி ஆம்பளை மாதிரி வளர்த்திருப்பதைப் பெருமையாக இன்றும் சொல்பவர்கள்

உண்டு.

இந்திராகாந்தி பிரதமராக இருந்தபோது, அவருடைய அமைச்சரவையில் இருந்த ஒரே ஆம்பளை அவர்தான் என்று அவருடைய விமர்சகர்கள் சிலர் சொன்னார்கள். அது பாராட்டல்ல! இன்றும் சில அரசியல் கட்சிகள் போராட்டம் நடத்தும்போது, தாங்கள் கண்டிக்கும் தலைவருக்கு வளையலும் சேலையும் அனுப்பி அணியச் சொல்லிக் கிண்டல் செய்வது, அவர் ஒரு பெண் மாதிரி பலவீனமாக, பயந்தாங்கொள்ளியாக நடந்துகொள்வதாகச் செய்யும் விமர்சனம்தான்.

இன்று பல சபைகளில் நான் முன்வைக்கும் பரிந்துரை, பெண் குழந்தைகளை எப்படி வளர்க்க வேண்டும் என்பது பற்றியல்ல. ஆண் குழந்தைகளை எப்படி வளர்ப்பது என்றுதான்! 'பொம்பளை மாதிரி வளர்க்கணும்' என்று சொல்கிறேன். ஏன்..?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. குழந்தைப்பருவத்தில் எதிர் பால் குழந்தைகளுடன் சேர்ந்து குளித்தது உண்டா?
2. இப்போது உங்கள் வீட்டுக் குழந்தைகள் அப்படிக் குளித்தால் என்ன நினைப்பீர்கள்?
3. ஆணுக்குப் பெண் உடல் மீதும் பெண்ணுக்கு ஆண் உடல் மீதும் ஈர்ப்பு இருக்கிறதா..? அல்லது பொறாமை இருக்கிறதா?
4. உங்கள் அப்பா/அம்மா இருவருடனும் குழந்தையாக உங்கள் உறவு எப்படிப்பட்டதாக இருந்தது? பயமா? காதலா? எது மிகை?
5. ஒரு ஆணுக்கு வளையலும் சேலையும் அனுப்புவது அவரைக் கேலி செய்வதா? பெண்களைக் கேலி செய்வதா?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 25

# கயல்விழிக்கு சொப்பு கணேசனுக்கு கார்...

நான் யார் என்று தன்னைத்தானே அறியும் தேடலில் ஒவ்வொரு குழந்தையும் தன்னைத் தனியாக யார் என்று உணர்வதில்லை. உடன் இருக்கும் இன்னொருவருடன் தன்னை ஒப்பிட்டுப் பார்த்தே தான் யார் என்ற மனச் சித்திரத்தை வார்த்துக்கொள்கிறது. நான் ஓர் ஆண் குழந்தை, நான் ஒரு பெண் குழந்தை, அவன் ஓர் ஆண் குழந்தை... அவன் அப்படி இருக்கலாம், அவள் ஒரு பெண் குழந்தை... அவள் அப்படித்தான் இருக்க வேண்டும் என்கிறரீதியில் தன்னை உருவாக்கிக்கொள்கிறது.

ஆண் குழந்தையைப் பெண் குழந்தையைப் போல வளர்க்க வேண்டும் என்று நான் சொல்வதை இந்தச் சூழலில் புரிந்துகொள்ள

வேண்டும். வீட்டில் பெண் குழந்தை சமையலறையில் அம்மாவுக்கு உதவியாக எடுபிடி வேலைகள் செய்வதும், கோலம் போட, வீடு பெருக்கக் கற்றுக்கொள்வதும் இங்கே இயல்பானவையாகக் கருதப்படுகின்றன. இதே பணிகளை அதே வீட்டிலிருக்கும் ஆண் குழந்தை செய்ய முற்படுவதும் இல்லை; முற்பட்டால் அனுமதிப்பதும் இல்லை. அதுவே, பெண் குழந்தை இவற்றைச் செய்யாமல் இருந்தால், சின்னச் சின்னக் கண்டிப்புகளில், இவற்றையெல்லாம் தானே விரும்பிச் செய்பவளாக அவளை மாற்றுவது நிகழ்கிறது.

இன்னொரு பக்கம், ஆணைப் போலவே பெண்ணையும் வளர்க்க விரும்பிய முயற்சிகளின் விளைவாக, ஆண்கள் செய்யும் எந்தப் பணியையும் தானும் செய்ய முடியும் என்ற தன்னம்பிக்கையுடன் உருவான பல பெண்கள் படித்து முடித்து, பல்வேறு அலுவலகங்களில் ஆண்களுடன் சக அலுவலர்களாக வந்து உட்கார்ந்திருக்கிறார்கள்.

பல இடங்களில் இந்த இரு பாலின இளைஞர்களுக்கிடையே காதல் மலர்கிறது. நாம் அறிந்தும் அறியாமலும் இருக்கும் பல விஷயங்களில், காதல் மிக முக்கியமான ஒரு சப்ஜெக்ட்! எது காதல் என்பது தனி ஆராய்ச்சிக்குரியது.

பரஸ்பரம் ஈர்க்கப்படும் இவர்கள் ஒருவர் மற்றவரின் புத்திசாலித்தனத்தை, அறிவுக்கூர்மையை, எந்த ஒரு விஷயத்தைப் பற்றியும் விவாதிக்கும் வசதியை மெச்சிக்கொள்கிறார்கள். வீடு என்ற அமைப்புக்கு வெளியே இவை மகிழ்ச்சிக்குரியவையாக இருக்கின்றன.

அவன் நண்பர்களுடன் தங்கியிருக்கும் இடத்துக்கு அவளோ, அவள் சிநேகிதிகளுடன் தங்கியிருக்கும் வீட்டுக்கு அவனோ ஒரு முறை விஜயம் செய்யும்போதே, சமூகம் அவர்களை ஆணாகவும் பெண்ணாகவும் வார்த்து வைத்திருக்கும் பிம்பங்கள் தலைதூக்க ஆரம்பித்துவிடுகின்றன.

'வீட்டை இப்படியா குப்பையா வெச்சுட்டு இருக்கிறது?', 'டயமே இல்லை! சரி, டீ சாப்பிடறியா? நான் சுமாராதான் போடுவேன்!', 'நவுரு! நான் போடறேன். அட, என்னப்பா இது... டீத்தூளை ஒரு

டப்பாவுல கொட்டிவைக்க மாட்டீங்களா? கவரை கட் பண்ணி அப்படியே வெச்சிருக்கீங்களே?'... இப்படி ஒவ்வொரு சின்னச் சின்ன உரையாடலிலும், தாங்கள் ஆணாகவும் பெண்ணாகவும் வளர்க்கப்பட்டு இருப்பதை வெளிப்படுத்திக்கொண்டே இருக்கிறார்கள். இப்படி வார்க்கப்பட்டு இருப்பது இருவருக்கும் பிடித்திருந்தால், காதல் அடுத்த கட்டத்துக்கு நகர்கிறது.

ஆனால், இன்று இந்த வார்ப்பு பலருக்கு உடன்பாடாக இல்லை. குறிப்பாக, பெண்களுக்கு!

நவீனக் கல்வி அறிவு பெற்று, அதிகச் சம்பளம் பெறக்கூடிய வேலைகளைத் தங்கள் புத்திக்கூர்மையால் தேடிக்கொண்டு சுயச் சார்பு அடைந்துவிட்ட பல இளம் பெண்களுக்குக் காதலில் ஏற்படும் முதல் சிக்கல்... தன் சகா வெளிப்பார்வையில் மட்டுமே ஆண் - பெண் சமத்துவத்தை ஏற்றுக்கொண்டவனாகத் தெரிவது. கொஞ்சம் சுரண்டிப் பார்த்தால், தன் அம்மாவை அப்பா நடத்திய மாதிரிதான் இவனும் இருப்பான் என்று புரிந்துவிடுகிறது.

பையன்களில் சிலர் 'தெளிவாக' இருக்கிறார்கள். புத்திசாலித்தனமும் தன்னுடன் எதையும் பேசி விவாதிக்கும் அறிவும் உள்ள பெண்கள் எல்லாம் 'கடலை போட' மட்டுமே லாயக்கு; திருமணம் செய்துகொண்டு குடும்பம் நடத்த, 'அடக்கமான, அதேசமயம் வேலைக்குப் போகிற' பெண்ணாக வீட்டில் பார்த்து ஏற்பாடு செய்வார்கள் என்று நினைக்கிறார்கள்.

இத்தகைய சூழலில், 'என்னைப் போல இவனும் படித்தவன். அலுவலகத்தில் நல்ல சகாவாக இருக்கிறான். இங்கே என்னைச் சமமாக நடத்துவது போல வீட்டிலும் நடத்துவான்' என்று நம்புகிற பெண்களும், 'அப்படி நீ நம்பினால், அதற்கு நானா பொறுப்பு?' என்று நினைக்கக்கூடிய ஆண்களும் திருமணம் செய்துகொள்ளும்போது, சில நாட்களிலேயே ஒருவரின் சுயரூபம் மற்றவருக்குத் தெரிய வந்து, கசப்புடன் பிரிவது நடக்கிறது.

எல்லாச் சிக்கல்களுக்குமான ஆரம்ப வித்து, நாம் நம் குழந்தைகளை எப்படிப்பட்ட அடையாளங்களுடன் வளர்த்திருக்கிறோம் என்பதில்தான் இருக்கிறது. ஆண், பெண், அரவாணி ஆகிய வேறுபாடுகள், நம் உடலின் அடையாளம் மட்டும்தான்.

நம் உள்ளத்தின் அடையாளம், நாம் எல்லாரும் மனிதர்கள் என்பதாகவே இருக்க வேண்டும்.

இதை நோக்கிய பயணத்தில்தான், இன்று பெண் குழந்தைகளை வளர்ப்பதில் இதுதான் இயல்பு என்று கருதப்படும் அணுகுமுறையை இனி ஆண் குழந்தைகளிடமும் கையாள வேண்டும் என்கிறேன். சமைத்தல், கோலம் போடுதல், வீடு பெருக்குதல், துணி துவைத்தல் என எல்லாவற்றையும் பெண்களுக்கான வேலைகளாக இல்லாமல், ஆண் குழந்தைகளும் செய்யக்கூடிய பொது வேலைகளாகப் பார்க்கவும், பழகவும் நாம் பயிற்றுவிக்க வேண்டி இருக்கிறது.

அப்படிப் பழகுகிற ஆண் குழந்தை பெரியவனாகும்போது சமையலறை, வீட்டு வேலைகள் எல்லாம் பெண்ணுக்குரியவை என்று பிரித்துப்பார்க்க மாட்டான். இருவரும் அவரவர் அலுவலகத்திலிருந்து வீடு திரும்பியதும் ஆண் உடை மாற்றிக்கொண்டு சோபாவில் சாய்ந்து டி.வி. பார்ப்பதும், பெண் உடைகூட மாற்றாமல், அடுப்பில் பாலைக் கொதிக்க வைத்துவிட்டு, பின்னரே நைட்டிக்கு மாறுவதும் நிகழாது.

'வீட்டு வேலையைப் பகிர்ந்துகொள்ளும் மனநிலை உடையவன் நான்' என்று தன்னைக் கருதிக்கொள்ளும் பல ஆண்களும்கூட, டிஷ் வாஷிங், (வெங்காயம் அல்லாத இதர) வெஜிடபிள் கட்டிங், (துடைப்பம் எடுத்து வீடு பெருக்குதல் அல்லாத) ஒட்டடை அடித்தல், ஜன்னல் தூசிகளைத் துடைத்தல் என்ற அளவுகளைத் தாண்டுவதில்லை. தன் கணவர் இந்த அளவுக்கு உதவியாக இருப்பதையே பெரிதாகக் கொண்டாடி மகிழும் நிலையில் பெண் மனம் வார்க்கப்பட்டு இருக்கிறது. காரணம், குழந்தைப் பருவத்தில் ஆழமாக ஊறிப்போன, பால் சார்ந்த வேலைப் பிரிவினையை நம்மால் இன்னமும் முற்றாகத் துடைத்தெறிய முடியாமல் இருப்பதுதான்.

குழந்தைகளுக்கு விளையாட்டுப் பொருட்கள் வாங்கும்போது, சமையல் சொப்பு செட் கயல்விழிக்கு, கார் பொம்மை செல்வனுக்கு என்று மனதுக்குள் பிரிக்கும்போதே, ஆண் - பெண் சமத்துவம் ஏற்படுவதை இன்னும் இருபது வருடம் தள்ளிப் போடுகிறோம்

என்பதை நாம் உணர வேண்டும்.

நம் சமூகம் ஆண் - பெண் என்று மட்டுமா பிரிந்துகிடக்கிறது? உடலால் ஆண் வேறு, பெண் வேறு என்பதால் அந்தஸ்தும் வெவ்வேறுதான் என்று ஆக்கிவைத்திருப்பதைப் போல, உடலால் ஆணாகவும் இல்லாமல், பெண்ணாகவும் இல்லாமல் இருப்ப வர்களுக்கு நாம் என்ன அந்தஸ்து கொடுத்திருக்கிறோம்?

நம் வீட்டுக் குழந்தைகளுக்கு அரவாணிகளை எப்படி அடையாளப் படுத்தி இருக்கிறோம்?

'ஒம்போது!'

அப்படியானால் ஆணின் எண் என்ன? பெண்ணின் எண் என்ன?

## இன்றைய ஹோம் வொர்க்:

**ஆண்களுக்கு...**

1. குழந்தைப் பருவத்தில் அம்மாவுக்குச் சமையல் வேலையில் உதவி செய்தது உண்டா? எப்படிப்பட்ட உதவிகள்?
2. வளர்ந்த பின் வீடு பெருக்குவது, சமைப்பது, துவைப்பது... இதில் எதை அதிகம் செய்திருக்கிறீர்கள்?

**பெண்களுக்கு...**

1. குழந்தைப் பருவத்தில் வீடு பெருக்குவது, சமைப்பது போன்ற வேலைகளில் அம்மாவுக்கு உதவ மறுத்தது உண்டா? ஏன்? விளைவுகள் என்ன?
2. வளர்ந்த பிறகு, இப்படிப்பட்ட வேலைகளில் உங்கள் வீட்டு ஆண்களை எந்த அளவுக்கு ஈடுபடுத்த முயன்றிருக்கிறீர்கள்? விளைவுகள் என்ன?

**இருவருக்கும்...**

வீட்டு வேலைகளை ஆண், பெண் இருவரும்
பகிர்ந்துகொள்வது கடமையா? சலுகையா?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல;
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 26

# ஆண் பெண்ணைப் புரிந்துகொள்ள அரவாணியை அறிவோம்...

அரவானிகள், அலிகள் என்றெல்லாம் அழைக்கப்படுபவர்கள், 'ஒம்போது' என்று இழிவுசெய்யப்படுபவர்கள் யார் ?

ஆணும் அல்ல; பெண்ணும் அல்ல என்று மட்டும்தான் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை மேம்போக்காகப் புரிந்து வைத்திருக்கிறோம். ஆனால் அது முழு உண்மையல்ல.

இது ஆண் உடல்; இது பெண் உடல். இந்த அடிப்படையே மனிதர்களாகிய நாம் வகைப்படுத்தி வைத்திருப்பதுதான். உடற்கூறு அடிப்படையில் இன்னின்ன அம்சங்கள் இருந்தால் ஒருவரை ஆண் என்றும், வேறு வித அம்சங்கள் இருந்தால் பெண் என்றும் நாம்

வகைப்படுத்திக் கொள்கிறோம்.

ஆனால் இயற்கை, ஆணின் உடல் தன்மைக்கும் பெண்ணின் உடல் தன்மைக்கும் இடையில், பலவிதமான சின்னச் சின்ன வேறுபாடுகளுடனும் மனிதர்களை உருவாக்கிக் கொண்டேதான் இருக்கிறது. அவற்றையெல்லாம் வகைப்படுத்த முடியாதபோது எளிமைப்படுத்தி ஆண், பெண், இரண்டுமல்லாதவர்கள் என்று சொல்லி விட்டுவிடுகிறோம்.

என்றாலும், அறிவியலும், மருத்துவமும் ஒவ்வொரு வேறுபாட்டையும் தனித்தனியே பதிவு செய்வதையும் ஆராய்வதையும் வகைப்படுத்துவதையும், தொடர்ந்து செய்துகொண்டே இருக்கின்றன.

முதலில் சாதாரண மனிதர்களாகிய நமக்கு ஆச்சரியமான, ஆனால் மருத்துவத் துறைக்கு சாதாரணமான ஓர் உண்மையை தெரிந்துகொள்வோம். கருவில் இருக்கும்போது நாம் எல்லாருமே பெண் உடலாகத்தான் உருவாகிறோம்! இன்னொரு விதமாகச் சொல்வதானால், ஆண்-பெண் அம்சங்கள் இரண்டுடனுமேதான் உருவாகிறோம் !

சுமார் ஆறு வாரங்களுக்குப் பின்னர்தான் ஆண் உடலுக்குரிய பால் உறுப்புகளுக்கான வளர்ச்சி, ஆண் குழந்தைகளுக்கு ஏற்படத் தொடங்குகிறது. அது போலவே பெண் குழந்தைகளுக்கும்.

ஆண் என்றால் எக்ஸ், ஒய் க்ரோமோசோம்; பெண் என்றால் எக்ஸ், எக்ஸ் க்ரோமோசோம் என்பது அடிப்படை விதி. கரு எந்த க்ரோமோசோம் என்பதைப் பொறுத்து ஆறு வாரங்களுக்குப் பின் அதற்குரிய பாலுறுப்பு உருவாகத் தொடங்குகிறது.

கரு உருவாகி வளரும் ஒவ்வொரு கட்டமும் மருத்துவ அறிவியலாளர்களால் துல்லியமாக ஆய்வு செய்து விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு மருத்துவ மாணவரும் இவற்றை அறிந்திருப்பார்.

நம்முடைய புரிதலுக்காக, நுட்பமான பல்வேறு கட்டங்களை சுருக்கிச் சொல்வதானால், கருவில் முதல் சில வாரங்களில் உருவாகியிருக்கும் பாகங்களில்

இரண்டு நாளங்கள் (ducts) தான் பாலுறுப்புகளின் முதல் ஆரம்பம். இரண்டுமே ஜெர்மன் மருத்துவ விஞ்ஞானிகளின் பெயர்களில் உள்ளவை. ஒன்று முல்லர் நாளம். இது பற்றி 1830ல் ஜொஹனஸ் பீட்டர் முல்லர் எழுதினார். இரண்டாவது உல்ஃப் நாளம். இதைப் பற்றி 1759ல் எழுதியவர் காஸ்பர் பிரெட்ரிக் உல்ஃப்.

உல்ஃப் நாளம்தான் பின்னர் ஆணின் விந்துப் பை சார்ந்த உறுப்புகளாக மாறுகிறது. முல்லர் நாளம்தான் பெண்ணின் வருங்கால கருப்பை, யோனிக் குழாய், தொடர்பானது. கருவில் இருக்கும் சிசுவின் உடலில் முதலில் இரு நாளங்களும் தோன்றுகின்றன. க்ரோமோசோமுக்கு ஏற்ப, சுரப்புகள் வேறுபடுகின்றன.

ஆண் கருவில் டெஸ்டெஸ்ட்ரோன் சுரப்பு அதிகரிக்க அதிகரிக்க, உல்ஃப் நாளம் ஆணின் உட்புறப் பாலுறுப்புகளாக வளர்ச்சி பெறுகிறது. ஆண் கருவில் இருக்கும் முல்லர் நாளம் குன்றி வளர்ச்சி இன்றி பின்தங்கிவிடுகிறது. இதே போல பெண் கருவில் டெஸ்டெஸ்ட்ரோன் சுரப்பு இல்லாததால் உல்ஃப் நாளம் வளர்ச்சி இன்றி குன்றிப் போய்விடுகிறது.

இதே போல, கருவில் முதல் கட்டத்தில் உருவாகும் கொனாட் (gonad) என்ற பகுதிதான் பின்னர் ஆணின் விதைகளாகவும், பெண்ணின் சினைப்பையாகவும் வளர்ச்சி பெறுகிறது.

டெஸ்டெஸ்ட்ரோன் சுரப்பு ஆண் கருவுக்குக் குறைவாகவும், பெண் கருவுக்குக் கூடுதலாகவும் இருந்துவிட்டால்.......? ஒரு நொடி அதைக் கற்பனை செய்து பாருங்கள். உல்ஃப், முல்லர் நாளங்களின் வளர்ச்சி அந்தந்த பாலுக்கேற்ப இல்லாமல் மாறிப் போகும். விளைவு? உடலுக்குள்ளே இருக்க வேண்டிய இனப் பெருக்க உறுப்புகள் - ஆணுக்கு விந்து சேகரப் பை, விந்துக் குழாய்கள் , பெண்ணுக்கு கருப்பை, யோனிக்குழாய் போன்றவை - முழுமையாக இல்லாமல் போகும்.

அடுத்து ஆண்-பெண் வெளிப்புற பாலுறுப்புகள் கருவிலேயே எப்படி உருக் கொள்கின்றன என்று பார்ப்போம். கரு வளர்ச்சியில் சுமார் ஒன்பதாவது வாரம் வரை வெளிப்புறம் ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரே மாதிரிதான் இருக்கிறது !

கரு உடலின் கீழ்ப்புறத்தில் இப்போது உருவாகியிருக்கும் ஜெனிட்டல் டியூபர்கிள்தான் (genital tubercle)ஆணுக்கு லிங்கமாகவும் (penis) பெண்ணுக்கு கந்துவாகவும் (clitoris) வளர்ச்சி பெறுகிறது. டியூபர்கிளையொட்டி உருவான பகுதிதான் சதை மடிப்புகளாக வளர்ந்து ஆணுக்கு விரைப்பையாகவும் பெண்ணுக்கு யோனி உதடுகளாகவும் உருமாறுகிறது.

க்ரோமோசோம் மாற்றங்கள், டெஸ்டெஸ்ட்ரோன் சுரப்பு அளவு மாற்றங்கள், நம் உடல் ஆண் உடலா, பெண் உடலா என்ற சந்தேகங்களை எழுப்பும் அளவுக்கு பல உடல் மாற்றங்களை உண்டுபண்ணமுடியும்.

க்ரோமோசோம் அடிப்படையில் எக்ஸ், எக்ஸ் இருந்தால் பெண்; எக்ஸ்,ஒய் இருந்தால் ஆண் என்று முடிவு செய்வதே சரியா என்ற அளவுக்கு, இன்று இந்தத் துறையில் விவாதங்கள் தொடர்கின்றன. காரணம், க்ரோமோசோம்கள் தவிர, கரு உருவாகி வளரும் கட்டத்திலேயே ஏற்படக்கூடிய, வேறு பல மாற்றங்களும் கூட பால் அடையாளத்தை, உடல் வடிவத்தை, மனப் போக்கைத் தீர்மானிக்ககூடும் என்று கருதப்படுகிறது.

இப்படியெல்லாம் பல மாற்றங்களுக்கு உட்பட்டவர்களைத்தான் நாம் மொத்தமாக ஒரேயடியாக அரவாணிகள், அலிகள் என்று சொல்லிக் கொன்டிருக்கிறோம்.

உடலின் மாற்றங்கள் உள்ளத்திலும் மாற்றங்களை ஏற்படுத்த முடியும். உடலில் மாற்றம் இல்லாதபோதும், உள்ளத்தில் மாற்றம் ஏற்பட முடியும்.

உடல் மாற்றங்களை சமயத்தில் மாற்ற முடியலாம். உள்ளத்தின் மாற்றங்களை மாற்ற முயற்சிப்பது மேலும் சிக்கல்களை ஏற்படுத்தலாம்.

எப்படிப்பட்ட உடல் மாற்றங்கள், உள்ள மாற்றங்கள் நிகழ்கின்றன என்பதை ஒவ்வொன்றாக பார்ப்போமா?

டாக்டர் ஹாரி கிளின்ஃபெல்ட்டர் என்ற அமெரிக்க மருத்துவர் 1942ல் கண்டறிந்த நிலைக்கு கிளின்ஃபெல்ட்டர் நிலைமை (klinefelter syndrome) என்று பெயரிடப்பட்டது. எக்ஸ், ஒய் என்று

இரு க்ரோமோசோம் தவிர, கூடுதலாக இன்னும் ஒரு எக்ஸ் க்ரோமோசோம் இருக்கும் நிலையே இதுவாகும்.

இந்த ஆண்களுக்கு உடலில், பெண்ணுக்கு தேவைப்படும் சில சுரப்புகள் அதிகமாக சுரக்கின்றன. ஆணுக்கு தேவையானவை குறைவாகச் சுரக்கின்றன. இதன் விளைவாக, மார்பகங்கள் சற்று பெரிதாக வளரலாம். பெரும்பாலோருக்கு மலட்டுத் தன்மை இருக்கும். சுமார் 500 ஆண்களில் ஒருவர் என்ற விகிதத்தில் இப்படிப்பட்ட நிலை பிறப்பிலேயே ஏற்படுவதாக அமெரிக்காவில் கணக்கிடப்பட்டிருக்கிறது.

பெண்ணின் உடலில் இருக்க வேண்டிய எக்ஸ், எக்ஸ் க்ரோமோசோம்களில், ஒன்று குறைந்து போய் ஒரே ஒரு எக்ஸ் க்ரோமோசோம் மட்டுமே இருக்கும் நிலைக்குப் பெயர் டர்னர் சின்ட்ரோம். உல்ரிக், பொனெவி, டர்னர் என்று வெவ்வேறு மருத்துவர்கள் 1930களில் இதைக் கண்டறிந்தார்கள்.

இந்தப் பெண்களும் பெரும்பாலும் மலட்டுத்தன்மையோடே இருப்பார்கள். ஏனென்றால் பருவம் எய்தி மாதப் போக்கு என்பதே இருக்காது. தட்டையான மார்பு, குட்டையான உருவம் போன்றெல்லாம் இருக்கக்கூடும். ஆளுக்கு ஆள் வேறுபடும். ஆனால் இதன் தன்மை என்பது, ஒரு பெண்ணுக்குரிய தோற்றம், அமைப்பு என்பது வளர்ச்சி பெறாமல் குறைப்பட்டிருப்பதேயாகும்.

ஹார்மோன் எனப்படும் சுரப்புகளினால் ஏற்படும் மாற்றங்கள் இன்னும் முக்கியமானவை.

முதலாவது பிறவியிலேயே ஏற்படும் மிகையான ஆண்தன்மைச் சுரப்பு (congenital adrenal hyperplasia). இன்னொன்று ஆண்தன்மைச் சுரப்பை ஏற்காத நிலை ( androgen insensitivity syndrome).

இவற்றின் விளைவாகத்தான் நம் கண்களில் அடிக்கடி தென்படும் அரவாணிகளில் பலர் உருவாகியிருக்கிறார்கள். இவை ஏன் ஏற்படுகின்றன? இவற்றின் அறிகுறிகள் என்ன? விளைவுகள் என்ன? எந்த வயதில் நம் இதைக் கண்டறியமுடியும் ? இவற்றையெல்லம் இனி பார்ப்போமா?

ஒன்றை நாம் மறக்கக்கூடாது. அரவாணிகளைப்

புரிந்துகொள்ளாமல், ஆண், பெண் என்பதைப் புரிந்து கொண்டுவிட்டதாக நாம் நிச்சயமாகக் கருதமுடியாது !

## இன்றைய ஹோம் ஒர்க்:

1. ஒருவர் அரவாணியாக ஆவது எப்போது என்று நினைத்துக் கொன்டிருக்கிறீர்கள்? பிறக்கும்போதேவா? பின்னர் பருவம் எய்தும்போதா?
2. அரவாணிகளைப் பார்க்க நேர்ந்த போது உடனே உங்கள் மனதில் தோன்றிய உணர்வு என்ன?
3. மற்றவர்களிடம் அரவாணிகளைப் பற்றிப் பேசும்போது, என்ன சொல்லை உபயோகிக்கிறீர்கள்?
4. திரைப்படங்களில் காட்டிய அரவாணிப் பாத்திரங்களின் மூலமாக அவர்களைப் பற்றி உங்களுக்குக் கூடுதலாக தகவல் கிடைத்திருக்கிறதா?
5. உங்கள் குடும்பத்தில் ஒருவர் அரவாணியாக இருக்க நேர்ந்தால், அதை எப்படி எதிர்கொள்வீர்கள்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 27

# குழந்தை ஆணா? பெண்ணா? நம்பரா?

மருத்துவமனையில் ஒரு குழந்தை பிறந்ததும், அது ஆணா, பெண்ணா என்ற செய்திக்காக, சுற்றமும் நட்பும் ஆவலுடன் காத்தி ருக்கிறார்கள். தாதி வந்து ஆணா, பெண்ணா என அறிவித்ததும் மகிழ்ச்சி அல்லது வருத்தம் அடைவது அவரவர் பார்வைகளைப் பொறுத்தது. ஆனால், ‘குழந்தை ஆணாகவும் இல்லை; பெண்ணா கவும் இல்லை’ என்று தாதி அறிவித்தால், என்ன நிகழும் என்று ஒரு நொடி கற்பனை செய்து பாருங்கள்.

அப்படிப்பட்ட ஒரு செய்தியை எதிர்கொள்ள ஏற்ற மனநிலையில் நம் சமூகம் வளர்க்கப்படவில்லை என்பதுதான் சிக்கல். கனத்த மௌனத்தின் மூலமே இப்படிப்பட்ட செய்திகள்

எதிர்கொள்ளப்படுகின்றன. தொடரும் இந்தக் கனத்த மௌனம், வாழ்க்கை முழுக்க அந்தக் குழந்தையின் காதுகளில் செவிப் பறையைக் கிழிக்கும் கொடூரச் சத்தமாக ஒலித்துக்கொண்டே இருக்கிறது.

பிறக்கும்போது இன்ன பால் என்று வகைப்படுத்த முடியாத குழப்பத்துடன் சில குழந்தைகள் பிறப்பதற்கு மருத்துவத்தில் சொல்லப்படும் பெயர் - பிறவியிலேயே ஏற்படும் மிகையான

ஆண்தன்மைச் சுரப்பு (congenital adrenal hyperplasia). இந்தக் குழந்தைகள் எப்படிப்பட்டவையாகப் பிறக்கின்றன, எப்படி வளர்கின்றன என்று பார்ப்போம்.

நம் உடலில் இரு சிறுநீரகங்களின் மீதும் முக்கோண வடிவத்தில் அட்ரினல் சுரப்பிகள் உள்ளன. இவற்றிலிருந்து வரும் சுரப்புகளில் ஆண்தன்மை தொடர்பான சுரப்புகள் அளவுக்கு மீறிச் சுரந் தால், குழந்தையின் பால் அடையாளம் பிரச்னைக்கு உரியதாகி விடுகிறது.

எக்ஸ் - ஒய் க்ரோமோசோம் அடிப்படையிலான ஆண் குழந் தைக்கு ஆண்மைச் சுரப்பு அதிகமானால், பிரச்னை இல்லை. ஆனால் எக்ஸ் - எக்ஸ் க்ரோமோசோம் அடிப்படையில் உருவாகியிருக்கும் பெண் கருவின் அட்ரினல் சுரப்பி ஆண்மைச் சுரப்புகளை அளவுக்கு மீறிச் சுரந்தால், உடல் அடையாளத்திலேயே மாற்றங்கள் ஏற்படுகின்றன. இந்த மாற்றங்கள் சுரப்பின் மிகை அளவைப் பொறுத்து வேறுபடும்.

பெண் சிசுவின் பிறப்புறுப்பில் இருக்கும் 'கந்து'வின் (clitoris) அளவு, ஆண் குழந்தையின் லிங்கமோ என்று குழப்பம் ஏற்படுத்தும் அளவுக்குப் பெரிதாக இருக்கும். யோனிக் குழாயின் நுழைவாயில் துளை மிகவும் சிறியதாகிவிடும்.

மிகையான சுரப்புப் பிரச்னை இருக்கும் இன்னும் சில குழந்தைகளுக்கு முழுமையாக வளர்ந்த ஆண் உறுப்பு (லிங்கம்) இருக்கும்; விதைப் பையும் இருக்கும்; விதைகள் இருக்காது. உடலின் உட்புறத்தில் பெண்ணுக்குரிய சினைப்பை, கருப்பை, யோனிக்குழாய் எல்லாம் இருக்கும். வெளித் தோற்றத்தை வைத்துப் பார்க்கும்போது, மருத்துவரே கூட அது ஆண் குழந்தைதான்;

ஆனால், உட்புறமிருந்து விதைகள் மட்டும் இன்னும் வெளி இறங்க வில்லை என்று தவறாகக் கருதக்கூடும்.

வளர வளர, இக்குழந்தைகளுக்கு வயதுக்கு மீறிய பருவ முடி வளர்ச்சி, முகத்தில் முடி வளர்ச்சி, மாதப்போக்கு ஏற்படாத நிலை, சினை முட்டையே உருவாகாத நிலை எனப் பலவிதமான அறிகுறிகள் ஏற்படலாம். இவர்கள் ஆணாக வளர்வார்களா, பெண்ணாக வளர் வார்களா என்பது முதல் பிரச்னை. க்ரோமோசோம் அடிப்படையில் பெண் குழந்தையாக இருந்தாலும் பெண்ணுக்குரிய உறுப்புகள், ஆணுக்குரிய உறுப்புகள் இரண்டுமே முழு வளர்ச்சி அடையாத நிலையில், குடும்பமும் சமூகமும் இவர்களை எப்படி நடத்துகிறது என்பதே இவர்களின் வளர்ச்சிப் போக்கைத் தீர்மானிக்கிறது.

அதீத ஆண்மைச் சுரப்பு இருக்கும் குழந்தைகளுக்கு உடலில் சோடியம் உப்புச் சத்தைத் தக்கவைத்துக்கொள்ள முடியாமல் போய், சிறுநீரில் உப்பு வெளியேறி, தொடர்ந்து கடும் வாந்தி ஏற்பட்டு, உடல் நீர் வற்றி, மரணமடையும் வாய்ப்பும் உண்டு.

சுரப்பின் அளவைப் பொறுத்து உடலில் ஏற்பட்ட மாற்றங்களை, அறிகுறிகளைக்கொண்டு, பிறக்கும்போதோ, பிறந்து ஒரு சில நாட் களிலோ இந்தக் குழந்தைகளின் மாறுபட்ட தன்மையை மருத்துவர் கள் கண்டுபிடித்துவிட முடியும். தீர்வு என்பது உடல்கூறின் மாற்றங் களின் அளவைப் பொறுத்தது.

சுரப்புப் பிரச்னை என்பது, குழந்தை கருவில் இருக்கும்போது சுமார் ஏழாவது வாரத்தில் தொடங்கிவிடுகிறது. இதை அப்போதே கண்டறிந்தால், 11-வது வாரத்திலிருந்து ஹார்மோன் சிகிச்சைகள் தருவதன் மூலம், பெண் குழந்தை மிகையான ஆண் கூறுகளுடன் உருவாகாமல் ஓரளவேனும் தடுக்க முடியும். குறிப்பாக, ஒரு பெற்றோருக்கு முதல் குழந்தை அட்ரினல் சுரப்பிச் சிக்கலுடன் பிறந்திருந்தால், அடுத்த குழந்தையும் அதே சிக்கலுடன் பிறக்கும் வாய்ப்பு 25 சதவிகிதம் உள்ளது.

பெரும்பாலும், குழந்தைக்கு இரண்டு வயதிலிருந்து ஒன்பது வயதுக்குள் ஒவ்வொரு அறிகுறியாகத் தெரிய ஆரம்பிக்கிறது. குறிப்பாக, பருவம் எய்த வேண்டிய வயதுக்குச் சற்று முன்னதாகவே, பெண் குழந்தைக்கு அதிகமாக உடலில் முடி முளைக்கத் தொடங்கும்போதுதான், பெற்றோர்களும் மற்றவர்களும்

கவனிக்கிறார்கள்.

குழந்தைப் பருவத்தில் வெளிப்படாமல், வளர்ந்து பெரியவர்களான பிறகுதான் பால் குழப்ப அறிகுறிகள் வெளிப்படக்கூடிய இன்னொருவிதமான மருத்துவ நிலைமையும் உண்டு. அதுதான் 'ஆண்தன்மைச் சுரப்பை உடல் ஏற்காத நிலை' (androgen insensitivity syndrome).

ஆண்மைச் சுரப்புகளின் பொதுப் பெயர் ஆன்ட்ரோஜன். முக்கியச் சுரப்பு டெஸ்டோஸ்ட்ரோன். சுமாராக 13-வது வாரத்துக்குள் கருவில் ஆணுறுப்புகள் உருவம் பெற்றுவிடுகின்றன. அதற்குக் காரணம் ஆன்ட்ரோஜன் சுரப்புகள்தான். பின்னாளில் 13 வயதுவாக்கில், ஆண் இனப் பெருக்க வெளி-உள் உறுப்புகள் எல்லாம் முழு வடிவம் பெறவும், மீசை முதல் ஆசை வரை வளரக் காரணமாக இருப்பதும் ஆன்ட்ரோஜன்கள்தான்.

அந்த ஆன்ட்ரோஜனை உடல் திசுக்கள் ஏற்றுப் பயன்படுத்தத் தவறுவதையே 'இன்சென்ஸிடிவிடி சிண்ட்ரோம்' என்று குறிப்பிடு கிறோம். பிறக்கும்போது ஆண் குழந்தைக்கான க்ரோமோசோம்கள் என்று கருதப்படும் எக்ஸ்-ஒய் க்ரோமோசோம்களுடன் பிறந்த குழந்தை ஆன்ட்ரோஜனை ஏற்று வளரத் தவறினால் என்ன ஆகும்? எந்த அளவு ஆன்ட்ரோஜனைப் பயன்படுத்தத் தவறியுள்ளது என்பதற்கேற்ப, உடல் மாற்றங்களின் அளவும் வேறுபடும்.

ஆன்ட்ரோஜன் பயன்பாடு அதிகரிக்க அதிகரிக்க, உடலின் பால் அடையாள வேறுபாடுகள் குறையும். முழு ஆண் உடலாக உள்ளும் வெளியிலும் ஆண் உறுப்புகள் இருந்தும், விந்து உற்பத்தியே இல்லாமலோ, குறைந்தோ, மலட்டுத்தன்மையுடனோ, மிகவும் சிறுத்த லிங்கத்துடனோ இருக்கலாம். ஆன்ட்ரோஜன் ஏற்பு மிகக் குறைவாக இருக்கையில் பெரும்பாலும் பெண் உடலாகவும், யோனிக் குழாய் சிறிய அளவிலேனும் இருக்கும் நிலையும் ஏற்படும்.

ஆன்ட்ரோஜனை உடல் முழுமையாக நிராகரிக்கும் நிலை உள்ள ஒருவர் எக்ஸ்-ஒய் க்ரோமோசோம்களுடன் பிறந்திருந்தாலும், அவர் பெண் உடலுடன்தான் இருப்பார். சினைப் பை, கருப்பை, நாளங்கள் எதுவும் இராது. ஆணுக்குரிய விதைகள் கீழே இறங்காமல், உடலின் உட்புறத்திலேயே பொதிந்துகிடக்கும். லிங்கம் இருக்காது. யோனிக்

குழாய் சிறிதாகவேனும் இருக்கும்.

இங்கே ஒரு முக்கியமான அம்சத்தை நாம் கவனிக்க வேண்டும். க்ரோமோசோம்கள் அடிப்படையில் மட்டும் ஆண் அல்லது பெண் எனத் தீர்மானிக்க முடியுமா என்ற கேள்வி பல வருடங்களாகவே மருத்துவ உலகில் விவாதிக்கப்பட்டு வருகிறது. வாழ்க்கைக்கான பத்துக் கட்டளைகளில் முதல் கட்டளையான 'நான் யார் என்று உணர்' என்பதில் கீழ்வரும் கேள்விகளும் அடக்கம் அல்லவா?

## இன்றைய ஹோம் வொர்க்:

01. நாம் ஆணா, பெண்ணா என்று எப்படித் தீர்மானிப்பது?
02. க்ரோமோசோம்கள் அடிப்படையில் மட்டும் ஆண் அல்லது பெண் எனத் தீர்மானிக்க முடியுமா?
03. உடல் உறவு வைத்துக்கொள்ளும் திறனின் அடிப்படையிலா?
04. இனப்பெருக்கம் செய்யும் திறனின் அடிப்படையிலா?
05. கருத்தரிக்கும் அடிப்படையிலா?
06. கருத்தரிக்கச் செய்யும் திறன் அடிப்படையிலா?
07. தோற்றத்தின் அடிப்படையிலா?
08. சிந்தனைத்தன்மையின் அடிப்படையிலா?
09. ஆண் சிந்தனைத்தன்மை, பெண் சிந்தனைத்தன்மை என்று உண்டா?
10. அதைத் தீர்மானிப்பது உடலா?
11. உடலில் சுரக்கும் ஹார்மோன்களா?
12. அல்லது, நாம் எல்லாருமே அர்த்தநாரீஸ்வரர்கள்தானா?
13. உடலைக்கொண்டு உள்ளத்தை முடிவு செய்வதா?
14. உள்ளத்தைக்கொண்டு உடலை மாற்றிக்கொள்வதா?

வாழ்க்கைக்கான பத்துக் கட்டளைகளில் முதல் கட்டளையான 'நான் யார் என்று உணர்' என்பதில் மேற்கண்ட கேள்விகளும் அடக்கம் அல்லவா?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.<br>உங்களுக்கானவை...உங்களுடையவை!

அத்தியாயம் 28

# மனதில் பால்குழப்பம்

'நான் யார் என்று உணர்' என்ற வாழ்க்கைக்கான முதல் கட்டளையை மிகவும் ஆழ்ந்து சிந்திக்க சிந்திக்க, நம் உடலையும் உள்ளத்தையும் உணர்வதுதான் நான் யார் என்று உணர்வதற்கான வழி என்பது மறுபடியும் மறுபடியும் தெளிவாகும்.

நம் உடலை நாம் உணர்கிறபோதுதான் ஒரு சிலருக்கு நான் ஆணா, பெண்ணா என்ற சிக்கலான கேள்வியை சந்திக்க வேண்டி வருகிறது. ஒருவரை ஆண் அல்லது பெண் என்று எப்படித் தீர்மானிப்பது என்ற கேள்விக்கு இன்னமும் மனித சமூகமும் சரி, மருத்துவ உலகமும் சரி இறுதியான வரையறைகளுக்கு

வந்துவிடவில்லை. இந்த வரையறைகள் காலந்தோறும், குறிப்பாக கடந்த மூன்று நூற்றாண்டுகளாக மாறிக் கொண்டே இருக்கின்றன.

ஆணின் உடற்கூறுகளும் பெண்ணின் உடற்கூறுகளும் கலந்த உடற்கூறுகள், சிலர் வாழ்க்கையில் கருவிலேயே தீர்மானிக்கப்படும் சில விதங்களைக் கண்டோம். உடற்கூறு முற்றிலும் ஆணாகவோ, அல்லது பெண்ணாகவோ இருந்தாலும் நான் அந்தப் பால் அல்ல என்று ஒருவர் நினைக்க முடியுமா?

முடியும். அந்த அடிப்படையில் தங்களை எதிர் பாலாகக் கருதுபவர்களையும் நாம் அரவாணிகளாகவே அடையாளம் காண்கிறோம். முற்றிலும் ஆண் உடல்/பெண் உடல் இருந்த போதும், தன்னை இன்னொரு பாலாக ஒருவர் குழந்தையிலிருந்தே கருத ஆரம்பிப்பதன் அடையாளங்கள் என்ன?

நடை, உடை, பாவனை ஆகிய மூன்றும்தான். பெண்ணாக இருந்தாலும் ஆண் 'போல'வும் ஆணாக இருந்தாலும் பெண் 'போல'வும் நடந்துகொள்வது; இன்னொரு பாலிற்கு என்று ஏற்படுத்தப்பட்டிருக்கும் உடைகளை அணிவதில் ஆர்வம் காட்டுவது. தன்னை இன்னொரு பாலாகவே முற்றிலும் பாவித்துக் கொள்வது. இங்கே ஒன்றை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். உடை, விளையாட்டு, செயல்கள் என்று பலவற்றையும் இது ஆணுக்குரியது, இது பெண்ணுக்குரியது என்று வரையறுத்துவைத்திருப்பது சமூகம்தான். பிறந்த குழந்தையல்ல.

சமூகத்தின் வரையறைகளுக்கு உட்பட விரும்பாமல் மாற்றி யோசிக்கிறவர்கள் ஆரம்பத்தில் எப்போதுமே சமூகத்தால் முத்திரை குத்தப்படுவார்கள்— காலத்துக்குக் காலம் முத்திரைகள் வேறுபடலாம்; நக்சல்பாரி, பைத்தியம், அரவாணி.... கலிலீயோ முதல் காந்தி வரை சமூகத்தின் வரையறைகளிலிருந்து விலகி நின்றபோது வேறு விதமாக முத்திரை குத்தப்பட்டதுதான் வரலாறு. பின்னால் சமூகமே ஒரு சில சமயங்களில் தன் வரையறையை அவர்களுடையதுடன் இணைத்துக் கொண்டுவிடும்போது, 'பைத்திய'ங்கள் 'புனிதர்'களாகிவிடுவார்கள். இந்த 'பாக்கியம்'

எல்லாருக்கும் கிட்டிவிடுவதில்லை.

உடலால் ஆணாகவும் உள்ளத்தால் பெண்ணாகவும் தன்னை உணரும் ஒருவர் ஏன் அப்படி உணர்கிறார்? மருத்துவரீதியாக இப்போதைக்கு மூளையில் ஏற்படும் சில ரசாயன மாற்றங்கள் இதற்குக் காரணம் என்று முடிவாகியிருக்கிறது.

தங்களை ஆணாகவும் பெண்ணாகவும் உடற்கூறு ரீதியாக வகைப்படுத்திக் கொள்ள முடியாதவர்களுக்கு பழைய சமூகங்களில் இப்போதிருப்பதை விட மேலான நிலை இருந்ததாக சிலர் கருதுகிறார்கள். சீன, ரோமாபுரி சாம்ராஜ்யங்களில் முக்கிய அரசுப் பதவிகளில் பல அரவாணிகள் இருந்தது இதற்கு ஆதாரமாக சொல்லப்படுகிறது. வட இந்தியாவில் திருமணம் முதலிய சடங்குகளில் அரவாணிகளுக்கு மங்கலகரமான இடம் இன்றும் தரப்படுகிறது.

எனினும் தொடர்ந்து எல்லா சமூகங்களிலும் ஒருவர் தன்னை ஆண் அல்லது பெண் என்று இரண்டில் ஒன்றாகவே அடையாளப்படுத்திக் கொள்ளவேண்டும் என்ற சமூகக் கட்டாயம் தொடர்ந்து கடுமையாக இருந்துவருகிறது.

இரு விதமான உடற்கூறுகளும் கலந்து பிறந்த குழந்தையை அறுவை சிகிச்சைகள் மூலம் ஏதோ ஒரு பாலுக்குரியதாக மாற்றுவது மேலை நாடுகளில் பழக்கத்தில் இருக்கிறது. இப்படி அறுவை சிகிச்சை மூலம் மாற்றுவதைக் குழந்தைப் பருவத்திலேயே செய்ய வேண்டுமா, அல்லது குழந்தை வளர்ந்து சிந்திக்க தொடங்கியபின் தான் என்ன பாலாக இருக்க வேண்டும் என்று தானே தீர்மானித்தபின் செய்ய வேண்டுமா என்பது பற்றிய மருத்துவ அறச் சர்ச்சைகள் தொடர்ந்து இருந்து வருகின்றன.

உடற்கூறில் பால் குழப்பம் இல்லை எனினும் உள்ளத்தால் வேறு பாலாக இருப்பவர்களின் உரிமைகள் என்ன, என்பது சர்ச்சைகள் நிரம்பிய இன்னொரு துறையாகும். உடலுக்கேற்ற உள்ளம்தான் இருக்க வேண்டும் என்ற அடிப்படையில், இது மனக்கோளாறு ஆகத் தீர்மானிக்கப்பட்டு இப்படிப்பட்டவர்களுக்கு மன நல சிகிச்சைகள் அளிக்கப்படும் அணுகுமுறை ஒரு சமயம் இருந்தது.

இது இப்போது மாறி வருகிறது.

தன்னை இன்னொரு பாலாக உணர்வது மனப் பிறழ்வு அல்ல. அதுவும் மனித இயல்புதான் என்ற அணுகுமுறை இப்போது அதிகரித்து வருகிறது. 'உள்ளம் வேண்டியபடி செல்லும் உடல் கேட்டேன்', என்று பாரதி சொன்னது போல, இவர்களில் பலர் தங்கள் மனம் எந்தப் பாலோ அதற்கேற்ற உடல் வேண்டும் என்று விரும்பி, அறுவை சிகிச்சைகளை மேற்கொள்கிறார்கள்.

வளர்ச்சியடைந்த சில மேலை நாடுகளைத் தவிர பிற நாடுகளில் எல்லாம் இந்த அறுவை சிகிச்சைகள் மிகக் குரூரமான முறையில் நவீன வசதிகள் ஏதும் இல்லாமல் சமயங்களில் அரை வைத்தியர்களால் செய்யப்படுகின்றன. இதற்குக் காரணம், அரவாணிகளை இன்றைய சமூகங்கள் இழிவாகக் கருதுவதும் நடத்துவதும்தான். தற்போது பால் மாற்ற சிகிச்சைகளை அரசு மருத்துவமனைகளில் செய்யலாம் என்று தமிழகத்தில் முதல்வர் கருணாநிதி தலைமையிலான அரசு ஒரு முற்போக்கான உத்தரவைப் பிறப்பித்திருக்கிறது. அரவாணிகளின் மருத்துவம் சார்ந்த தேவைகளை பூர்த்தி செய்வதற்கான முக்கியமான முதற்படியாக இதைக் கருதலாம்.

தொல்காப்பியத்திலும் திருக்குறளிலும் அரவாணிகள் தொடர்பான பதிவுகள் இருக்கின்றன. அரசவைகளில் அரவாணிகள் பணியாற்றினார்கள் என்ற குறிப்புகள் வரலாற்றில் உள்ளன. எனினும் சங்க காலத் தமிழ்ச் சமூகம் தன் அரவாணிகளை எப்படி நடத்தியது என்பது பற்றி முழுமையான அதிக விவரங்கள் என் தேடலில் கிட்டவில்லை. இன்று எப்படி நடத்துகிறது என்பது நாம் எல்லாரும் அறிந்ததுதான்.

அரவாணிகள் என்ற சொல்லே எனக்கு உடன்பாடானது அல்ல. அது மகாபாரதக் கதையை அடிப்படையாகக் கொண்டது. மகாபாரதக் கதையை தம் புராணங்களில் ஒன்றாகக் கருதத் தேவையற்ற கிறித்துவ, இஸ்லாமிய, இதர மத அரவாணிகள் மீதும் அது சுமத்தப்பட்டிருக்கிறது. மதச் சார்பற்ற சொல்லைத் தமிழில் உருவாக்க வேண்டிய தேவை இருக்கிறது. பழஞ் சொற்களான

பேடு, பேடி முதலியன இன்று பொருள் திரிந்து, சென்னைத் தமிழில் ‘பாடு’ என்ற இழிவசைச் சொல்லாகி விட்டன.

இதற்கெல்லாம் காரணம், நம்மிலிருந்து வேறுபட்டிருக்கும் எதுவும் நம்மை அச்சுறுத்துவதுதான். அறியாமையால் வரும் பயம். அறிந்தும் அறியாமலும் இருப்பதால் வரும் பயம். இந்த பயத்தை, நாம் நம்மிலிருந்து வேறுபட்டிருப்பவர்கள் மீதான அருவெறுப்பு/கோபம் போன்ற உணர்ச்சிகளாகத் தவறாக வெளிப்படுத்தத் தொடங்குகிறோம்.

‘நான் யார் என்று உணர்வது’ என்பது ஒரு போதும் தனித்து நம்மை மதிப்பிட்டுக் கொள்ள முடியாத விஷயமாகும். எல்லாமே ஒப்பீட்டில்தான் நிகழ்கின்றன. இது விலங்கு; இது பசுமாடு; இது பாம்பு. நான் விலங்கு அல்ல. நான் பசு மாடு அல்ல. நான் பாம்பு அல்ல. நான் மனிதன். இவர் பெண். நான் பெண் அல்ல. நான் ஆண். இவர் ஆண் அல்ல. இவன் புத்திசாலி. நான் முட்டாள்; இவன் இந்த விஷயத்தில் முட்டாள்; நான் இந்த விஷயத்தில் புத்திசாலி என்று எல்லாமே ஒப்பீட்டில் உணரப்படும் விஷயங்கள்தான்.

தொடர்பற்ற வெறும் ஒப்பீடு போதாது. நான் நீயாக இருந்தால்? என் இடத்தில் நீ இருந்தால்? உன் இடத்தில் நான் இருந்தால்? இந்தப் பார்வைதான் நம்மை நம்மையும் சரியாக உணரவைக்கும் பிறரையும் சரியாக புரியவைக்கும். வாழ்க்கைக் கல்வியின் இரண்டாம் கட்டளையான ‘எம்பதி’ நம்மால் பிறருக்கு நன்மை ஏற்பட மட்டும் உதவுவது அல்ல. பிறர் நிலையில் நம்மை வைத்துக் காண்பதால் நமக்கும் நன்மை உண்டாக்கித் தருவது.

நான் அரவாணியாகப் பிறந்திருந்தால்? எனக்கு congenital adrenal hyperplasia அல்லது androgen insensitivity syndrome ஏற்பட்டிருந்தால்? என் உள்ளமும் உடலும் வெவ்வேறாக இருந்திருந்தால்? இப்படி சிந்திக்கத் தவறுவதால்தான் நம் சமூகத்தில் ஜாதி முதல் செக்ஸ் வரை பல பிரச்சினைகள் ஏற்படுகின்றன.

‘ஆண் உடல் பெண்ணுக்கானது. பெண் உடல் ஆணுக்கானது.’ என்றுதான் இந்த சமூகம் நமக்குப் பல விதங்களில் ஓயாமல் சொல்லிக் கொண்டே இருக்கிறது. எனில், ஆணும் பெண்ணுமாக

இல்லாத உடல் யாருக்கானது? முதலில் என் உடல் எனக்கானதா? அல்லது இன்னொருவருக்கானதா?

நான் உடலால் ஆணாக இருக்கிறேன். எனக்கு ஏன் பெண் உடலைத்தான் பிடித்திருக்க வேண்டும்? நான் உடலால் பெண்ணாக இருக்கிறேன்? அதனால் எனக்கு ஆண் உடலைத்தான் பிடித்திருக்க வேண்டுமா?

என்னை நானே உணர்வதில் இவையெல்லாம் தவிர்க்க முடியாத கேள்விகள். ஆனால் நாம் இந்தக் கேள்விகளையெல்லாம் சந்திக்க பயந்து நழுவிக் கொண்டே இருக்கிறோம். வேண்டாம். சந்திப்போமா?

## இன்றைய ஹோம் ஒர்க்:

1. நான் அரவாணியாகப் பிறந்திருந்தால்? எனக்கு congenital adrenal hyperplasia அல்லது androgen insensitivity syndrome ஏற்பட்டிருந்தால்?
2. என் உள்ளமும் உடலும் வெவ்வேறாக இருந்திருந்தால்?
3. 'ஆண் உடல் பெண்ணுக்கானது. பெண் உடல் ஆணுக்கானது.' என்றுதான் இந்த சமூகம் நமக்குப் பல விதங்களில் ஓயாமல் சொல்லிக் கொண்டே இருக்கிறது. எனில், ஆணும் பெண்ணுமாக இல்லாத உடல் யாருக்கானது?
4. முதலில் என் உடல் எனக்கானதா? அல்லது இன்னொரு வருக்கானதா?
5. நான் உடலால் ஆணாக இருக்கிறேன். எனக்கு ஏன் பெண் உடலைத்தான் பிடித்திருக்க வேண்டும்? நான் உடலால் பெண்ணாக இருக்கிறேன்? அதனால் எனக்கு ஆண் உடலைத்தான் பிடித்திருக்க வேண்டுமா?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 29

# யார் மனதில் யார்?

'உன்னழகைக் கண்டுகொண்டால் பெண்களுக்கே ஆசை வரும்...' என்று பாடுகிறான் திரைப்படக் கவிஞன். பெண் உடலால் ஆண் ஈர்க்கப்படுவதும், ஆண் உடலால் பெண் ஈர்க்கப்படுவதும் தான் இயல்பு. அதல்லாமல் பெண்ணைப் பெண்ணே ஈர்ப்பதும், ஆணை ஆணே ஈர்ப்பதும் இயற்கைதானா?

'நான் உடலால் ஆணாக இருக்கிறேன். எனக்குப் பெண் உடலைத்தான் பிடித்திருக்க வேண்டுமா? நான் உடலால் பெண்ணாக இருக்கிறேன். அதனால், எனக்கு ஆண் உடலைத்தான் பிடித்திருக்க வேண்டுமா?' - சிலருக்கு இவை தவிர்க்க முடியாத கேள்விகள். நாம் இந்தக் கேள்விகளைச் சந்திக்கத் தயங்கி நழுவிக்கொண்டே

இருக்கிறோம். தயங்காமல் சந்தித்து, வேறு மாதிரியாக உணர்ந்து அதை வெளிப்படையாக அறிவிக்கிறவர்களைக் குற்றவாளியாகப் பார்ப்பதும் நடக்கிறது.

சில வருடங்களுக்கு முன், எனக்கு நெருக்கமான கல்லூரி மாணவிகளில் இருவர் என்னைச் சந்திக்க வந்தார்கள். அவர்களில் ஒருத்தி மோசமான ஒரு பையனுடன் சுற்றுவதாக,

இன்னொருத்தி புகார் சொன்னாள். அதை மற்றவள் கடுமையாக மறுத்தாள். இருவரும் ஒருவர் மீது மற்றவர் தொடர்ந்து அதே புகார் களைச் சொல்லிக்கொண்டு இருந்தார்கள்.

''உங்கள் இருவருக்குமிடையே ஒரு பால் உறவு (லெஸ்பியன் உறவு) உள்ளதா?'' என்று கேட்டேன். ஒரு நொடி அதிர்ச்சி அடைந்த இருவரும், பின்னர் அதை ஒப்புக்கொண்டார்கள். தங்கள் உறவுக்கு நடுவில் வேறு ஒருவன் நுழைவதாக நினைத்த பொறாமையாலும், கவலையாலும் அவர்கள் அப்போது சண்டை போட்டுக்கொண்டு இருந்தார்கள்.

இருவரையும் சமாதானப்படுத்தி அனுப்பிய மறுநாளே, இருவரில் ஒருத்தி கல்லூரி விடுதியிலிருந்து காணாமல் போய்விட்டாள். அது தொடர்பாக கல்லூரி நிர்வாகம், போலீஸ் என்று பலருடனும் நான் பேசவேண்டி வந்தது. கல்லூரி நிர்வாகம் உண்மையைச் சந்திக்க மறுத்தது. தங்கள் கல்லூரி வளாகத்தில் லெஸ்பியன்களே கிடையாது என்று அது நம்பியது. (நமது பள்ளிகளிலும் கல்லூரி களிலும் இளைஞர்களுக்கு உதவுவதற்காக, குறிப்பாக பாலியல் தொடர்பான சிக்கல்களில் வழி நடத்துவதற்கு, கவுன்சலர்களை நியமிக்க வேண்டிய பெரும் தேவை இன்னமும் கவனிக்கப்படாமலே இருக்கிறது. முதல் கட்டமாக, பல பிரின்சிபால்களுக்கும் ஆசிரியர்களுக்கும்கூட கவுன்சலிங் தேவைப்படுகிறது.)

காணாமல் போனவள் சில நாட்களில் திரும்பி வந்தாள். அவள் தன் சிநேகிதியின் கிராமத்துக்கு, அவளுடைய பெற்றோரிடம் அவளைப் பற்றிப் புகார் சொல்லப் போயிருந்தாளாம்!

இத்தகைய நிகழ்ச்சிகள் நம்மைச் சுற்றி நடந்துகொண்டே இருக்கின்றன. அவ்வப்போது இரு பெண்கள் திருமணம்

செய்துகொண்ட 'விசித்திர' நிகழ்ச்சிகள், மீடியாவில் பரபரப்பாக அலசப்படுகின்றன. சில கொலைகளின் பின்னணியில் ஒரு பால் காதலில் ஏற்பட்ட துரோகமும், பொறாமையும் காரணமாக இருக்கின்றன.

இப்படிப்பட்ட செய்திகளையெல்லாம் 'வக்கிரமான' மன நிலை உடைய சிலரின் வாழ்க்கைச் சம்பவங்கள் என்று எண்ணி ஒதுக்கிவிடுகிறோம். ஆண்-பெண் காதலில் துரோகம், பொறாமை எல்லாம் இருப்பது போல ஆண்-ஆண், பெண்-பெண் உறவுகளிலும் இருக்கின்றன என்று பலரால் ஏற்க முடிவதில்லை. காரணம், இத்தகைய உறவுகள் இயற்கைக்கு விரோதமானவை என்று கருதுவதுதான்.

தன்னை ஆண் என்று உணர்கிற, கருதுகிற ஓர் ஆண், இன்னொரு ஆண் மீது பாலியல் ஈர்ப்பு கொள்வதும், (ஹோமோசெக்ஷுவாலிடி) அதே போல தன்னைப் பெண் என்று கருதுகிற, உணர்கிற ஒரு பெண் இன்னொரு பெண்ணிடம் பாலியல் ஈர்ப்பு கொள்வதும் (லெஸ்பியன்) நடந்தால் அதை மனக் கோளாறு என்று கருதி, மன நல சிகிச்சை தரும் முறைகளைத்தான் உலகம் முன்னர் பின்பற்றியது.

இதையொட்டித்தான் பல நாடுகளில் ஹோமோசெக்ஷுவாலிட்டி, லெஸ்பியன் உறவுகள் சட்டப்படி குற்றமாக அறிவிக்கப்பட்டன. இயற்கைக்கு விரோதமாக உடல் உறவு கொள்வது குற்றம் என்று கூறும் இ.பி.கோ.377-வது பிரிவு இந்தியாவில் 1860 முதல் இருந்து வருகிறது.

இன்று, ஒரு ஆணும், ஒரு பெண்ணும் வாழ்க்கையில் ஏதோ ஒரு கட்டத்தில், இந்தத் தன் பால் உணர்ச்சியை அடைவதும், சந்திப்பதும் விரும்பினால் தொடர்வதும் அல்லது தொடராமல் இருப்பதும் சாத்தியம் என்று அறிவியலாளர்கள் கருதுகிறார்கள்.

பாலியல் அறிஞர் ஆல்ஃப்ரட் கின்சி (1894-1956) தன் ஆய்வுகளில், முற்றிலும் தன் பால் உறவு, முற்றிலும் எதிர் பால் உறவு என்ற இரு நிலைகளுக்கிடையே பல்வேறு நிலைகளில் மனிதர்கள் இருப்பதாக மதிப்பிட்டுஇருக்கிறார். ஒருவரே இருவித

உறவு முறைகளையும் வெவ்வேறு அளவில் பின்பற்றுபவராகவும் இருக்கலாம் என்பது அவர் மதிப்பீடு.

ஹாஸ்டல்கள், சிறைச்சாலைகள், ஆசிரமங்கள், கம்யூன்கள் போன்று ஒரே பாலினர் மட்டுமே ஒன்றாக வசிக்கவேண்டிய கட்டாயத்தில் இருக்கும் இடங்களில் வேண்டுமானால் தன் பால் உறவு/ஈர்ப்பு ஒருவருக்கு உருவாகும் சாத்தியம் உண்டு என்று கருதப்படுவது ஓரளவு மட்டுமே உண்மை. இந்த இடங்கள் இப்படிப்பட்ட ஈர்ப்புக்கும் உறவுக்கும் சில சமயங்களில் வாகாக இருந்துவிடுகின்றன. அவ்வளவுதான்.

ஐக்கிய நாடுகள் சபையின் உலக சுகாதார நிறுவனம், ஒரு பால் உறவை மன நலக் கோளாறாகத் தன் பட்டியலில் வைத்திருந்ததை 1993-ல் நீக்கியது. அமெரிக்க மன நல சிகிச்சையாளர்களின் சங்கம் 1973-லேயே ஹோமோசெக்ஷுவாலிட்டியை மனக் கோளாறுகள் பட்டியலிலிருந்து எடுத்துவிட்டது.

ஒருவருடைய பாலியல் விருப்பங்கள் அவருடைய உடற்கூறு, உள்ளம் இரண்டுடனும் தொடர்புடையவை என்பது அறிவியல் கருத்து. எனவே, சுய பால் விருப்பங்களை உள்ளம் தொடர்பானதாக மட்டும் பார்க்காமல், உடற்கூறு அமைப்புடனும் சேர்த்தே பார்க்க வேண்டும் என்று சில ஆய்வாளர்கள் கருதினார்கள்.

அந்த அடிப்படையில் நடந்த ஆய்வுகளில் சில அம்சங்கள் கண்டறியப்பட்டன. மரபுக் கூறுகளில் இதற்கான காரணம் இருக்கலாம் என்றது ஓர் ஆய்வு. கருவில் இருக்கும்போது சுரக்கும் செக்ஸ் ஹார்மோன்கள்தான் மூளையில் ஆண் தன்மை, பெண் தன்மைகளைத் தீர்மானிக்கின்றன. எனவே, பின்னர் பருவம் எய்தும்போது செக்ஸ் ஹார்மோன் சுரப்புகள், உடல் மாற்றங்களை ஏற்படுத்தினாலும், மூளையின் பால் தன்மையை மாற்றுவதில்லை. அதற்கேற்பவே ஒருவரின் எதிர் பால் ஈர்ப்போ தன் பால் ஈர்ப்போ அமைகிறது என்பது இன்னொரு ஆய்வு.

இது போலவே, சுய பால் ஈர்ப்புடைய ஆண், பெண்களை ஆய்வு செய்ததில், மூளை அமைப்பு, இடது கை வலது கைப் பழக்கம் உள்ளிட்ட சில அம்சங்களில், எதிர் பால் விருப்பம் உடையவர்களிட

மிருந்து வேறுபாடுகள் இருப்பதாகக் கண்டறியப்பட்டது. இது தவிர, அண்ணன்களின் எண்ணிக்கை அதிகமாக ஆக, அவர்களுடைய தம்பி சுய பால் விருப்பம் உடையவராக இருக்கும் வாய்ப்பு உண்டு என்றுகூட ஒரு ஆய்வு சொன்னது! கருவிலேயே. தன் பால் விருப்பத்துக்கு எதிரான சுரப்பு அடுத்தடுத்த குழந்தைக்குக் குறைந்துகொண்டே வருவதால் ஏற்படும் விளைவு இது என்று காரணம் சொல்லப்பட்டது.

சுருக்கமாக, இவை அனைத்தும் உணர்த்துவது ஹோமோசெக்ஷுவல், லெஸ்பியன் உணர்ச்சி என்பவை பிறப்பினாலும் வளர்ப்பினாலும் தீர்மானிக்கப்பட்டவை என்பதைத் தான்!

உலகத்தின் பல புகழ்பெற்ற மனிதர்கள் தன் பால் விருப்பம் உடையவர்களாக இருந்திருக்கிறார்கள். சாக்ரடீஸ், மகா அலெக் சாண்டர், ஜூலியஸ் சீசர், மைக்கேல் ஏஞ்சலோ, பைரன், ஆஸ்கர் ஒயில்ட் என்று பட்டியல் வரலாறு நெடுக நீண்டு, இன்றைய பாடகர் எல்டன் ஜான் வரை வருகிறது.

ஹோமோசெக்ஷுவாலிட்டியை குற்றமாக அறிவித்திருக்கிற சமூகங்களில் பகிரங்கமாகத் தன்னை அப்படிப்பட்டவராக அறிவித்துக்கொள்ளக் கூடியவர்கள் மிகமிகக் குறைவு. தமிழ்ச் சமூகத்தில், தான் அப்படிப்பட்ட பழக்கத்தில் இருந்ததாகத் தெரிவித்தவர்... துணிச்சலுக்குப் புகழ்பெற்ற நடிகவேள் எம்.ஆர். ராதா! (எம்.ஜி.ஆரைச் சுட்டதாக சிறைத் தண்டனை பெற்று விடுதலையாகி வந்ததும், 1971-ல் எழுத்தாளர் விந்தனுக்கு அளித்த தொடர் பேட்டியில் இதைத் தெரிவித்தார். நூல்: நடிகவேள் எம்.ஆர். ராதாவின் சிறைச்சாலைச் சிந்தனைகள்...)

ராதா சொல்கிறார்... "ஒரு ஆண் மேல இன்னொரு ஆண் மோகம் கொள்வதும், அவனோடு இயற்கைக்கு விரோதமான வழியில் உடலுறவு வைத்துக்கொள்வதும் நினைத்துப் பார்ப்பதற்கே அருவருப்பாயில்லே? இந்த அருவருப்பான காரியத்துக்காக அந்த நாளில் கனவான்கள் சிலர் லட்சக்கணக்கில் செலவழிக்கத் தயாராக இருந்தனர். யாராவது ஒரு பையன் கொஞ்சம் அழகாயிருந்து,

அவன் பாலகிருஷ்ணன் வேஷமோ, பாலமுருகன் வேஷமோ போட்டுக்கிட்டு மேடைக்கு வந்து நின்னா போதும்... அந்தக் கனவான்கள் அந்தப் பையன் சம்பந்தப்பட்ட கம்பெனி முதலாளியுடன் பேரம் பேசி, அவனுக்காக அவர் கேட்கும் தொகையைக் கொடுத்து, அன்றிரவே அவனைத் தூக்கித் தன் கார்ல வெச்சு ஊருக்குக் கொண்டு போயிடுவார். அப்புறம் அவன் கதி அதோ கதிதான்! பாலகிருஷ்ணன், பாலமுருகன் வேஷம் போட்ட பையன்களுக்கே இந்தக் கதின்னா, பொம்பளை வேஷம் போட்ட பையன்களின் கதியைப் பத்திக் கேட்கவா வேண்டும்? அவர்களிலே ஒருத்தனைக் கூட யாரும் ஒழுங்காக இருக்க, ஒழுங்காக வாழ விட்டதே இல்லை. நானும் அந்த ஒழுங்கீனமான காரியத்தைச் செய்யறதிலே ஒருத்தனாத்தான் இருந்தேன். எனக்கும் அப்போ பொம்பளை மோகம்னா என்னன்னே தெரியாது. ஆம்பளை மோகம்தான் தெரியும். அந்த மோகத்திலேதான் எத்தனை காதல், எத்தனை ஊடல், எத்தனை சண்டை, எத்தனை தற்கொலைகள், எத்தனை சொல்லிக்காம ஓடிப் போற ஜோடிகள்... எல்லாம் வேதனையோடு கூடிய வேடிக்கைதான் போங்கள்! அதன் பலனாக சக தோழர்களில் சிலர் இன்னிக்கு மகப்பேற்றுக்குக்கூட லாயக்கற்றவர்களாகப் போய்விட்டதைப் பார்க்கறப்ப என் நெஞ்சே வெடிச்சுடும் போல இருக்கு..!''

36 ஆண்டுகளுக்கு முன்பு ராதா துணிவுடன் வெளிப்படுத்தியிருக்கும் தகவல்களில் பல அம்சங்கள் இருக்கின்றன. அவற்றை அடுத்துப் பார்ப்போம்.

## இன்றைய ஹோம்வொர்க்:

1. ஒருவர் சுய பால் விருப்பம் உடையவராக ஆவது எப்போது என்று நீங்கள் கருதுகிறீர்கள்? பிறக்கும்போதேவா? பருவம் எய்தும்போதா?
2. அப்படிப்பட்ட ஒருவரை உங்களுக்குத் தெரிய வரும்போது, உடனே உங்கள் மனதில் தோன்றும் உணர்வு என்ன?
3. மற்றவர்களிடம் அவர்களைப் பற்றிப் பேசும்போது, என்ன சொல்லை உபயோகிப்பீர்கள்?

4. திரைப்படங்களில் காட்டப்பட்ட அப்படிப்பட்ட பாத்திரங்களின் மூலமாக, அவர்களைப் பற்றி உங்களுக்குக் கூடுதலாகத் தகவல் கிடைத்திருக்கிறதா?
5. உங்களுக்கு மிகத் தெரிந்த, நெருக்கமான ஒருவர் சுய பால் விருப்பம் உடையவராக ஒருவேளை இருக்க நேர்ந்தால், அதை எப்படி எதிர்கொள்வீர்கள்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 30

# எது இயற்கை? எது இயற்கைக்கு விரோதம்?

தன் கருத்துக்களைப் பகிரங்கமாகப் பேசும் துணிச்சலுக்குப் புகழ்பெற்ற நடிகவேள் எம்.ஆர்.ராதா, சுய பால் ஈர்ப்பும் உறவும் 1930-40-களில் பாய்ஸ் நாடகக் கம்பெனி சூழலில் இருந்தது பற்றி 1971-ல் தெரிவித்த தகவல்களில் ஒரு முக்கியமான அம்சம்... அது குழந்தைகளுக்கு எதிரான பாலியல் கொடுமையாக அப்போது பின்பற்றப்பட்டது என்பதாகும். சில கனவான்கள் சிறுவர்களை விலைக்கு வாங்கிக்கொண்டுபோய் பாலியல் கொடுமை செய்த தகவலை ராதா தெரிவித்திருக்கிறார். இதே சூழல், பிரிட்டனிலும் இதர நாடுகளிலும்கூட இதுபோன்ற சில குழுக்களில் இருந்தது.

இந்தக் கட்டுரைத் தொடர் எழுதப்படும் சமயத்தில்கூட,

சென்னையில் ஒரு விடுதியில் ஓரின உடல் உறவுக்குத் தன்னை வற்புறுத்திய மேனேஜரை ஓர் இளைஞர் கத்தியால் குத்திக் கொன்ற செய்தி வெளியாகியுள்ளது. எதிர் பால் உறவுகளைவிட சுய பால் உறவுக்கு ஜோடி கிடைப்பது சிக்கல் மட்டுமல்ல... இது பகிரங்கமாகத் தேடலில் ஈடுபட முடியாத உறவாகவும் இருப்பதால், இதில் வன்முறை கூடுதலாக இருப்பதில் வியப்பில்லை!

அடுத்து ராதா தெரிவிக்கும் இன்னொரு கருத்து –சுய பால் உறவினால் பல தோழர்கள் மகப்பேறுக்கு லாயக்கற்றவர்களாகிவிட்டார்கள் என்பது. மருத்துவரீதியாக இது சரியல்ல. மலட்டுத்தன்மை என்பது பல காரணங்களால் ஏற்படக்கூடியது. அதில் சுய பால் உறவு ஒரு நேரடிக் காரணமல்ல!

இறுக்கமான உள்ளாடைகள் அணிவதுகூட ஆண்களில் சிலருக்கு மலட்டுத்தன்மையை ஏற்படுத்தக்கூடும் என்பது மருத்துவக் கருத்து. பால்வினை நோய்கள் மலட்டுத்தன்மையை ஏற்படுத்தலாம். முறையற்ற எதிர் பால் உறவிலும் பால்வினை நோய் ஏற்படத்தான் செய்கிறது.

ஆணை ஆணே (அல்லது, பெண்ணை பெண்ணே) மோகிக்கும் பழக்கத்தை ராதா தன் பேட்டியில் ‘காட்டுமிராண்டித்தனமான’ பழக்கம் என்றும் குறிப்பிட்டு இருக்கிறார். காட்டுமிராண்டி என்பது ஆதி மனித வாழ்க்கையைக் குறிக்கும். ஆதி மனிதர்களின் வாழ்க்கையில் சில ஆக்கபூர்வமான, குறிப்பாக சுற்றுச்சூழலுக்கு நேசமான அணுகுமுறைகள் இருந்ததை இப்போதுதான் உணரத் தொடங்கியிருக்கிறோம்.

‘மிருகத்தனமான’ என்பது ‘மனிதர்களைப் போல சிந்திக்கும் திறனற்ற விலங்குகள் போன்று’ என்ற அர்த்தத்தில் சொல்லப் படுகிறது. அதேசமயம், பல மனிதச் செயல்களையும் அவற்றின் வேர்களையும் புரிந்துகொள்ள, எப்போதுமே விலங்குகளின் - இதர உயிர்களின் வாழ்க்கை முறைகளைப் பற்றிய ஆராய்ச்சிகள்தான் இன்றும் உதவுகின்றன.

சுய பால் விழைவு என்பது மிருகத்தனமான ஒரு நிலை என்று வர்ணிப்பதும்கூட அது மனித இயற்கைக்கு ஒவ்வாத கொடூரச்

செயல் என்ற அர்த்தத்திலேயே ஆகும்.

ஆனால், 'சுய பால் விழைவு என்பது இயற்கையில் இல்லாத ஒன்றோ மனக் கோளாறோ அல்ல...' என்ற அணுகுமுறையை இன்று பார்க்க முடிகிறது.

விலங்கு, பறவைகளில் தாமே இரு பாலுமாக இருக்கும் வகைகள் இயற்கையிலேயே உண்டு. சுமார் 1,500 வகை உயிரினங்களில் சுய பால் விழைவுச் செயல்பாடுகளும் இருப்பது கண்டறியப்பட்டுள்ளது.

காட்டெருமை, யானை, சிங்கம், மான், பூனை, சிறுத்தை, நாய், பசு, முயல், ஒட்டைச்சிவிங்கி, ஆடு, குரங்கு, கரடி, குதிரை, நரி, மரங்கொத்திப் பறவை, கிளி, குருவி, ஆந்தை, பெங்குயின், கொக்கு, கழுகு, லவ்பேர்ட்ஸ், வாத்து, மீன், பல்லி, பாம்பு, ஆமை, கரப்பான்பூச்சி, பட்டாம்பூச்சி, வண்டுகள் ஆகிய இனங்களும் இந்தப் பட்டியலில் வருகின்றன.

ஒரு ஜோடி ஆண் பறவைகள் தம்பதியாகக் கூடு கட்டி வாழும் போது, முட்டைகளுக்குப் பதிலாக அதேபோன்ற தோற்றமுடைய கற்களைச் சேகரித்து வந்து தங்கள் கூட்டில் வைக்கும் பழக்கத்தில் உள்ளன. இவை சில சமயம் வேறு பறவையின் அசல் முட்டையைத் திருடி வந்து தம் கூட்டில் வைத்துப் பொரித்து வளர்ப்பதும் உண்டு!

'நான் ஒரு பெண்; அதனால் நான் இப்படி நடந்துகொள்ள வேண்டும்; அதனால் நான் பிற ஆண்களிடம், பிற பெண்களிடம் இப்படி நடந்துகொள்ள வேண்டும்; அப்படி நடந்துகொள்ளக் கூடாது; நான் ஆணாக/பெண்ணாக இருப்பதால் என் ஆசைகள் இப்படிப்பட்டவையாக இருக்கலாம்; அப்படிப்பட்டவையாக இருக்கக்கூடாது...' இவையெல்லாம் கலந்ததுதான் ஒருவரின் செக்ஷுவல் ஐடென்ட்டிடி!

தன்னைப்பற்றி ஒருவர் என்ன நினைக்கிறார் என்பது இதன் ஒரு பகுதி. அவரைப்பற்றி மற்றவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பது இதன் மறுபகுதி. இவை இரண்டும் சேர்ந்தே அவர்

மற்றவர்களைப்பற்றி என்ன நினைக்கிறார் என்ற பார்வைக்கு இட்டுச் செல்கின்றன.

‘நான் ஓர் ஆண். எனக்கு இன்னொரு ஆணைப் பிடிக்கிறது. நான் ஒரு பெண். எனக்கு இன்னொரு பெண்ணைப் பிடிக்கிறது. இது வெளியில் தெரிந்தால், கேலி செய்வார்கள். என் அம்மாவும் அப்பாவும் தற்கொலை செய்துகொள்வார்கள்...’ இப்படிப்பட்ட மன உளைச்சல், வளர் இளம் பருவத்தில் சிறுவருக்கு இருக்குமானால், அதன் பிற்கால விளைவுகள் தேவையற்ற சிக்கல்களை உருவாக்கும்.

அப்படியொரு உளைச்சல் நம் குழந்தைகளுக்கு இருக்கிறதா என்று தெரிந்துகொள்வது எப்படி? அப்படி இருந்தால், அதிலிருந்து அவர்களைக் காப்பாற்றுவது எப்படி?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. மாமல்லபுரம், கோவா போன்ற சுற்றுலா இடங்களில் சுய பால் உறவுக்காகச் சிறுவர்களை சில டூரிஸ்ட்டுகள் பணத்தாலும், பயம் காட்டியும் கவர முயற்சிப்பது பற்றிய செய்திகளை நீங்கள் கேள்விப்பட்டது உண்டா?
2. காட்டுமிராண்டித்தனம், மிருகத்தனம் என்று நீங்கள் எதையெல்லாம் வர்ணிப்பீர்கள்?
3. இயற்கைக்கு விரோதமானது என்று உங்களுக்குத் தோன்றும் விஷயங்கள் என்னென்ன?
4. அவற்றில் உண்மையானது, உண்மைக்குச் சம்பந்தமில்லாதது என்று எவற்றைக் கருதுவீர்கள்?
5. உண்மைக்கு தொடர்பற்றதைக்கூட நீங்கள் இயற்கைக்கு விரோதமானது என்று முடிவுசெய்யக் காரணம் என்ன?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 31

# எதற்காக செக்ஸ்?

**நா**ன் யார் என்று தன்னைத்தானே மெள்ள மெள்ள ஒரு சிறுவனும் ஒரு சிறுமியும் அறியத் தொடங்கும்போது அவர்கள் அறிகிற, உணர்கிற, ஏற்கிற, நிராகரிக்கிற எல்லா வரையறைகளும் சமூகம் ஏற்கெனவே உருவாக்கி வைத்திருப்பவைதான். அந்த வரையறைகளை மீற நினைப்பவர்கள்கூட முதலில் அவற்றை அறிந்த பின்னரே மீற இயலும்.

உன் உடல் ஆண் உடல்; உன் உடல் பெண் உடல்; உன் உடல் அரவாணி/திருநங்கை/மூன்றாம் பாலின உடல் என்றெல்லாம் இருக்கும் வரையறைகளை அறிந்து ஏற்றுக்கொண்டுவிடுகிறோம். ஆனால், ஒருவரின் உள்ளம்?

நம் அடையாளத்தின் ஒரு பகுதி, நம்மைப் பற்றி நாம் என்ன நினைக்கிறோம் என்பதாகும். நம்மைப் பற்றி மற்றவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பது இதன் மறுபகுதி. இந்த இரண்டுக்கும் இடையில் முரண்பாடுகள், வேறுபாடுகள் வரலாம்; வரும். அவற்றை எப்படி சமரசம் செய்துகொள்கிறோம், அவற்றில் நம்முடன் சமூகம் எனப்படும் மற்றவர்கள் எப்படி சமரசம் செய்துகொள்கிறார்கள் என்பதுதான் நம் வாழ்க்கையின் சுக துக்கங்கள் எல்லாவற்றையும் தீர்மானிக்கிறது.

சமூகத்துடன் எந்த அளவுக்குச் சமரசம் செய்வது, எந்த அளவுக்கு மேல் செய்ய மறுப்பது என்பது வாழ்க்கை முழுக்கவே நமக்குத் தொடரும் பிரச்னைதான். மனிதர்கள் கூட்டாகச் சேர்ந்து வாழத் தொடங்கிய காலத்தில் இருந்தே இருந்துவரும் பிரச்னை இது.

இதைத் தீர்க்க ஒவ்வொரு காலகட்டத்திலும் வெவ்வேறு அறிவுரைகள் கூறப்பட்டு வருகின்றன. ‘எத்தனை படித்திருந்தாலும், உலகத்தோடு ஒட்ட ஒழுகக் கற்றிராவிட்டால், நீ முட்டாள்தான்’ என்கிறார் வள்ளுவர். ‘வாழு; வாழவிடு’ என்பது எல்லா காலத்திலும் பிரபலமான உபதேசம்.

உலகம் எல்லா காலத்திலும் ஒரே போல இருக்கவில்லை. அதன் வரையறைகளை அப்படியே ஏற்றுக்கொள்கிறவர்கள் இருப்பது போலவே, ஏற்காமல் கேள்வி கேட்கிறவர்களும் ஒவ்வொரு சமூகத்திலும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

இந்த நிலை, சுயபால் விழைவில் இருக்கும் மனிதர்களுக்கும் பொருந்தும். சுயபால் விழைவைச் சமூகம் அங்கீகரிக்கலாமா, கூடாதா என்பது பற்றி 2002-ல் ஓர் உலகளாவிய கருத்துக் கணிப்பு நடத்தப்பட்டது. அமெரிக்கா, கனடா, மெக்ஸிகோ, ஜெர்மனி, பிரான்ஸ், பிரிட்டன், இத்தாலி, செக்கோஸ்லோவேகியா, ஸ்லோவேனியா, அர்ஜென்டினா, பொலிவியா, பிரேசில், பிலிப்பைன்ஸ், ஜப்பான் முதலிய நாடுகளில் 55 முதல் 83 சதவிகிதம் பேர் அங்கீகாரத்துக்கு ஆதரவு தெரிவித்தனர். இந்தியா, பாகிஸ்தான், வங்கதேசம், உஸ்பெகிஸ்தான், இந்தோனேஷியா போன்ற நாடுகளில்

ஆதரவு பத்து சதவிகிதம் கூட இல்லை. இதர சில நாடுகளில் 25 முதல் 45 சதவிகிதம் வரை ஆதரவு தெரிவிக்கப்பட்டது.

இதில் முக்கியமான விஷயம் என்னவென்றால், இப்போது பெருவாரியாக ஆதரவு தெரிவித்த நாடுகள் எல்லாம் சுமார் 60 ஆண்டுகளுக்கு முன்பு பெருவாரியாக எதிர்ப்பு தெரிவித்தவை. கடும் நடவடிக்கைகள் எடுத்தவை. இப்போது பத்து சதவிகிதத்துக்குக் குறைவாக ஆதரவு தெரிவித்த நாடுகளில் வரலாற்றுரீதியாக மாற்று பாலுறவுகள் பற்றிக் கடுமையான நடவடிக்கைகள் இருந்ததாக போதுமான ஆதாரங்கள் இல்லை.

பாலுணர்வு, பாலுறவு பற்றிய சமூகத்தின் பார்வைக்கு அடிப்படையாக இருப்பது, பாலுறவின் நோக்கம் என்ன என்பதுதான்.

பாலுறவின் நோக்கம் இனப்பெருக்கம். இனப்பெருக்கம் மட்டும்தான் என்பதை ஏற்றுக் கொண்டு இருக்கிற சமூகங்கள் எல்லாம் சுயபால் விழைவைக் கடுமையாகக் கண்டிக்கின்றன. பாலுறவின் நோக்கம், மகிழ்ச்சி என்ற கோணத்தில் பார்க்கும் சமூகங்கள், அந்த உறவு இனப் பெருக்கத்துக்குத் தேவையானதாக மட்டும்தான் இருக்க வேண்டும் என்று நிர்ப்பந்திப்பதுஇல்லை.

குழந்தை பெறும் நோக்கத்தை அடிப்படை வரையறையாக வைத்து இயங்கும் சமூகங்கள் அதற்கு ஏற்பவே தம் மொழி, பழக்க வழக்கங்கள் எல்லாவற்றையும் கட்டமைக்கின்றன. பாடப் புத்தகங்கள் உடலின் வெவ்வேறு உறுப்புகளை விவரிக்கும்போது, சுவாச உறுப்புகள், ஜீரண உறுப்புகள் என்று பெயர் சூட்டும்போது, இவற்றை இனப்பெருக்க உறுப்புகள், ஜனனேந்திரியங்கள், பிறப்புறுப்புகள் என்றே அழைக்கின்றன. இனப்பெருக்கத்துக்கு உதவாத சுயபால் உறவுகளை இந்தச் சமூகங்கள் கடுமையாகக் கண்டிக்கின்றன. எதிர் பால் உறவில் கூட குழந்தையற்ற மலட்டுத் தன்மை கலாசாரரீதியாக இந்தச் சமூகங்களால் கடுமையான கண்டனத்துக்கு உள்ளாகிறது.

இந்தச் சமூகங்கள் சுய பால் விழைவை மனக் கோளாறாகக் கருதி 'குணப்படுத்த' முயற்சிக்கின்றன.

சுய பால் விழைவை எப்படி 'குண'ப்படுத்துவது? பாலுறுப்புகளில் மின் அதிர்வுகள் தருவது முதல், நடத்தை பழக்க வழக்கங்களில்

மாற்றங்களை ஏற்படுத்துவது வரை விதவிதமான முறைகள் பின்பற்றப்படுகின்றன. இவற்றின் விளைவுகள் பற்றிய பல்வேறு ஆய்வுகளின் அடிப்படையில், மேற்கத்திய சமூகங்களில் கடும் சர்ச்சைகள் உள்ளன.

திருத்தல் சிகிச்சை, மாற்றும் சிகிச்சை என்ற பெயரில் இன்றும் இந்தியா போன்ற நாடுகளில் இப்படிப்பட்ட சிகிச்சைகள் சில மருத்துவர்களால் அளிக்கப்படுகின்றன. சுய பால் விழைவையும் மனித இயல்புகளில் ஒன்றாக ஏற்றுக்கொண்டு இருக்கும் சமூகங்கள், இப்படிப்பட்ட சிகிச்சை முறைகளை மருத்துவ அற நெறிக்கு விரோதமானவையாகக் கருதுகின்றன.

தன்னை சுய பால் விழைவுள்ளவராக ஒரு சிறுவனோ சிறுமியோ கருதத் தொடங்கும் வயது டீன் ஏஜ்தான்! அப்போது அவர்களுக்கு ஏற்படக்கூடிய கேள்விகள், மன உளைச்சல்கள் என்ன?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. நீங்கள் உங்களைச் சுற்றியுள்ளவர்களான சமூகத்துடன் செய்யும் சமரசங்கள் என்ன?
2. உங்களுடன் உங்களைச் சுற்றியுள்ளவர்கள் செய்து கொள்ளும் சமரசங்கள் என்ன?
3. எல்லாரும் ஏற்றுக்கொண்டு இருக்கிற ஒன்றைக் கேள்வி கேட்டு மாற்ற முயற்சித்தது உண்டா? அப்படிச் செய்தபோது விளைவுகள் என்ன?
4. பாலுறவின் நோக்கம் இன்பமா... இனப்பெருக்கமா? நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?
5. சுய பால் விழைவு, சிகிச்சைக்குரிய மனக்கோளாறுதான்/அப்படி இல்லை. இதில் உங்கள் கருத்து என்ன?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 32

# ஏன் என்ற கேள்வி கேட்காமல்...

நான் யார் என்ற சுய அடையாளத்தை ஒவ்வொரு குழந்தையும் மெள்ளமெள்ள உருவாக்கிக்கொள்ளும்போது, அதற்கு ஏராளமான கேள்விகளும் கூடவே மன உளைச்சல்களும் ஏற்படுவது இயற்கை. கேள்விகளுக்குச் சரியான பதில்கள் கிடைக்காதபோதும், கிடைக்கிற பதில்கள் தன் உணர்வுக்கு இயைந்து வராதபோதும் மன உளைச்சல்கள் ஏற்படுகின்றன.

பதில்கள் எங்கிருந்து கிடைக்கின்றன? சமூகம்தான் அவற்றை வழங்குகிறது; இது குழந்தையின் சுய அடையாளத்தை ஒவ்வொரு கட்டத்திலும் வடிவமைக்கிறது. சமூகம் என்பது யார்?

அம்மா, அப்பா, தாத்தா, பாட்டி, அண்ணன், தம்பி, அக்கா,

தங்கை, மாமா, மாமி, சித்தி, சித்தப்பா, பெரியப்பா, பெரியம்மா இவர்கள்தான் முதல் வட்டம். ஆசிரியர்கள், இதர பெரியவர்கள் அடுத்த வட்டம். நண்பர்கள் மூன்றாவது வட்டம். மீடியா நான்காவது வட்டம்.

எல்லா வயதிலும் இந்த எல்லா வட்டங்களும் நம் மீது ஆதிக்கம் செலுத்தினாலும், வெவ்வேறு வயதில் வெவ்வேறு வட்டத்தின் ஆதிக்கம் கூடுதலாகவும், மற்ற வட்டங்களின் செல்வாக்கு குறைவாகவும் இருக்கின்றன.

இந்த வட்டங்கள் கட்டமைக்கிற அடையாளத்துக்கும் குழந்தை தானாக உணர்கிற, யோசிக்கிற அடையாளத்துக்கும் முரண்பாடுகள் ஏற்படும்போது, குழந்தைக்கு மன உளைச்சல்கள் ஏற்படுகின்றன. இந்த மன உளைச்சல்களைக் கடந்து வந்து, குழந்தை பெரிய வராகும்போது, தனக்கு இருக்கும் எதிர்க் கேள்விகளைச் சமூகத்தை நோக்கி எழுப்புகிறது.

இப்போது சமூகத்துக்கும் மன உளைச்சல் ஏற்படுகிறது. உணவு முதல் மொழி வரை, மதம் முதல் செக்ஸ் வரை ஒரு சமூகம் நிர்ண யித்துவைத்திருக்கும் வரையறைகள் கேள்விக்குள்ளாகும்போது, அந்தக் கேள்விகளுக்கு அது பதில் தேட வேண்டி வருகிறது. புதிய பதில்களின் மூலம் அது தன்னைத்தானே மாற்றிக்கொள்கிறது; தன் வரையறைகளை மாற்றி அமைக்கிறது. இந்த வரையறைகளைக் கேள்விக்குள்ளாக்கும் மனிதர்கள் அடுத்து வருகிற சமூகத்தில் வருவார்கள்; இதுதான் சமூக வளர்ச்சியின் நியதி!

எப்போதுமே கேள்வி எழுப்புபவர்கள் குறைவாகவும், கேள்வி கேட்காமல் பின்பற்றுபவர்கள் அதிகமாகவும் இருக்கிறார்கள். காரணம், குழந்தையாக இருக்கும்போதே, 'கேள்வி கேட்காமல் பின்பற்று; அதுதான் உனக்கு நல்லது' என்று சொல்லிக்கொண்டே இருக்கிறோம்.

அதற்குக் கீழ்ப்படிந்து, கேள்விகள் கேட்காமல் இருக்கும் பெரும்பான்மை மக்கள், சமூகத்தை மாற்றி அமைத்ததில்லை; சமூக பொது புத்தியி லிருந்து விலகி, கேள்வி கேட்கத் தொடங்கி யவர்கள்தான் மாற்றி அமைக்கிறார்கள்- காந்தி, பெரியார், மார்க்ஸ்,

அம்பேத்கர், முத்துலட்சுமி ரெட்டி போல!

இதன் இன்னொரு முக்கியமான அம்சம் - இப்படிக் கேள்வி கேட்கிற எல்லாரும் சமூகத்தை மாற்றத்தை நோக்கி நகர்த்திவிடுவதில்லை. தங்கள் கேள்வியின் நியாயத்தை இதர பெரும்பான்மை மக்கள் எல்லாரையும் உணரச் செய்யும் போதுதான் அவர்கள் மாற்றத்தின் கருவி களாகிறார்கள். இந்த முயற்சி இல்லை என்றால் மாற்றமே சாத்தியமில்லாமல் போய்விடும்.

சமூகத்தில் தொடர்ந்து நிகழ்ந்துவரும் இந்த மாற்றத்தின் ஒரு சிறு துளிதான் நாம், நமது குடும்பம், நமது குழந்தைகள், நம் அடையாளங்கள் எல்லாமே என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

நம்மை சமூகத்துடனும் சமூகத்தை நம்முடனும் இசைந்து இயங்கவைக்கும் முயற்சியில் நாமும் சமூகமும் எப்போதும் ஈடுபட்டிருக்கிறோம். கொஞ்சம் கலகங்கள், கொஞ்சம் புரட்சிகள், கொஞ்சம் சமரசங்கள், இவை தரும் வலிகள், சுகங்கள் என்று இந்த உறவாடல் தொடர்ந்து நடைபெறுகிறது.

பாலியல் அடையாளம் என்பதும், இந்த பிரம்மாண்டமான உறவாடலில் ஒரு பகுதிதான். குழந்தை தன்னை ஆண் என்று உணர்வதோ, பெண் என்று உணர்வதோ, எதிர்பால் மீது ஈர்ப்பு கொள்வதோ, தன் பால் மீது ஈர்ப்புகொள்வதோ இந்தச் சுய அடையாளத்தில் இரு அம்சங்களால் நிர்ணயிக்கப்படுகின்றன.

ஒன்று பிறவியிலேயே அமைந்த உடற்கூறு; இரண்டாவது, அந்த உடற்கூறையொட்டி சமூகம் நிர்ணயித்துவைத்திருக்கிற பாலின அடையாளத்துக்குக் குழந்தையைத் தயார்செய்யும் சூழல். சுயபால் விழைவுக்கு உடற்கூறு காரணமே அல்ல, வளர்ப்பு மட்டும்தான் காரணம் என்று கருதும் தரப்பும், உடற்கூறு மட்டும்தான் காரணம் என்று கருதும் தரப்பும் உலகில் இன்று சம வலிமையுடன் போராடி வருகின்றன.

இந்தத் தொடர் எழுதப்படும் வேளையில்கூட புதுப்புது ஆய்வு முடிவுகள் வெளிவந்தபடி உள்ளன. நரம்பியல் அறிஞர் சான்ட்ரா விட்டெல்சன், பத்து ஆண்டுகளுக்கு முன் தன்பால் விழைவுடைய

ஆண்களில் பெரும்பாலோர் இடது கைப் பழக்கம் உடையவர்கள் என்று ஆய்வில் நிரூபித்தவர். இவருடைய தற்போதைய ஆய்வின்படி, எதிர் பால் விழைவுடைய ஆண்களைவிட சுயபால் விழைவுடைய ஆண்களுக்கு, மூளையின் இரு பகுதிகளையும் இணைக்கும் நரம்புக் கோவைப் பகுதி பெரிதாக இருப்பதாக அறியப்பட்டுள்ளது.

இன்னொரு பக்கம், வளர்ப்புதான் காரணம் என்று கருதும் தரப்பின் ஆய்வாளர்கள்... அப்பாக்கள், தங்கள் மகன்கள் குழந்தையாக இருக்கும்போது நல்லுறவு ஏற்படுத்தத் தவறியிருந்தால், மகன்கள் சுயபால் விழைவுடையவர்களாக மாறும் வாய்ப்பு அதிகம் என்று வலியுறுத்துகிறார்கள். 'அம்மாக்கோண்டாக' வளரும் பையன்கள் எதிர்பால் விழைவை விட தன்பால் விழைவாளர்களாக உருவாகும் வாய்ப்பு அதிகம் என்பதும் இவர்கள் கருத்து. அப்பாவிடம் கிட்டாத அன்பை இதர ஆண்களிடம் எதிர்பார்ப்பவர்களாக இவர்கள் மாறி அதன் நீட்சியாக, சுயபால் விழைவாளராவதாக சில உளவியல் அறிஞர்கள் கருதுகிறார்கள்.

சிறு வயதிலேயே பெண் போல ஆண் குழந்தைக்கு உடை உடுத்தி அழகு பார்த்தல், எப்போதும் பெண்கள் மத்தியிலேயே ஆண் குழந்தையைப் பழகவிட்டு அதற்கும் பெண்தன்மை படிதல், பெண் குழந்தைக்கு ஆண் உடைகள் அணிவித்தல், பாய்கட் வெட்டி ஆண் வேலைகளில் ஈடுபடுத்துதல் போன்றவை, பின்னால் அந்தக் குழந்தைகள் சுய பால் விழைவுக்கு உள்ளாகக் காரணம் என்ற கருத்தும் நிலவுகிறது.

ஆனால், இந்தக் கருத்துக்கள் எதுவும் முழு உண்மையல்ல என்பதைத் தொடர்ந்து நடக்கும் ஆய்வு உண்மைகள் காட்டி வருகின்றன. ஏனென்றால் சுயபால் விழைவுப் பழக்கமுடையவர்களில் பலர், வெளித்தோற்றத்தில் எந்த எதிர்பால் தன்மையும் இல்லாதவர்களாகவும் இருக்கிறார்கள். ஒரே சமயத்தில் எதிர்பால் மற்றும் சுயபால் விழைவு உடையவர்களும் சமூகத்தில் உள்ளனர்.

எனவே, ஒருவர் சுயபால் விழைவுடையவராக இருந்தால், அதை எப்படிக் கையாள்வது என்பதை அவரும் அவருடைய குடும்பமும் தான் முடிவு செய்ய வேண்டும். 'இத்தகைய பிரச்னைகள் எல்லாம்

இந்தியச் சமூகத்தில் இல்லாதவை; மேலைச் சமூகத்துடையவை தான்' என்று சொல்லி மணலுக்குள் தலை புதைக்கும் நெருப்புக் கோழிகளாக நாம் இருக்க முடியாது.

மிகவும் சம்பிரதாயமான சமூகம் என்று கருதப்படும் குஜராத் மாநிலத்தில் பாரம்பரியம்மிக்க குடும்பம் என்று மக்களிடையே செல்வாக்குடைய ஒரு மகாராஜாவின் குடும்பத்தின் இளவரசர் அண்மையில் தன்னைப் பகிரங்கமாக ஒரு ஹோமோசெக்ஷுவல் என்று அறிவித்துக்கொண்டார். அவர் அதுவரை சந்தித்த மன உளைச்சல் பற்றியும் அவர் தெரிவித்தார். அதைப் பார்ப்போமா?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. குழந்தையாக இருந்தபோது நீங்கள் சிக்கலான கேள்விகள் கேட்டால், பதில் சொல்லப்பட்டதா?
2. அல்லது, இதெல்லாம் கேட்காதே என்று சொல்லப்பட்டதா?
3. உங்கள் சிக்கலான கேள்விகளுக்கு சரியான பதில்கள் எங்கிருந்து கிடைத்தன? குடும்பம்? பள்ளிக்கூடம்? மீடியா?
4. இப்போது குழந்தைகள் உங்களிடம் கேள்வி கேட்டால், என்ன சொல்கிறீர்கள்?
5. சுய பால் விழைவு உடற்கூறால் அமைவதா? வளர்ப்பினால் உரு வாவதா? உங்கள் கருத்து என்ன?
6. இப்படிப்பட்ட நிலைகளால் மன உளைச்சலுக்கு ஆளான எவரையேனும் சந்தித்தது உண்டா?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 33

# உன்னைப் பத்தி என்ன நினைக்கறாங்க தெரியுமா?

தன்னைத்தானே அறியத் தொடங்கும் சிறுவனுக்கும் சிறுமிக்கும் தன்னைப்பற்றி தான் நினைப்பதைச் சுற்றியிருக்கும் மற்றவர்களுடன் பகிர்வதுதான் முதல் சோதனை. தன் சுய அடையாளத்தை ஒரு குழந்தை வெளிப்படுத்தும்போது, அதைச் சுற்றமும் நட்பும் அங்கீகரித்தால், குழந்தை மலர்ச்சியடைகிறது. சரியான திசையில் தான் சென்றுகொண்டு இருப்பதாகப் புரிந்துகொண்டு தன்னைத்தானே மேலும் செதுக்கிக்கொள்வதில் முனைகிறது.

குழந்தை வெளிப்படுத்தும் அதன் சுய அடையாளத்தைச் சுற்றியிருப்பவர்கள் அங்கீகரிக்க மறுக்கும்போது, மன உளைச்சல்கள்

தொடங்குகின்றன. குழந்தையின் சுய அடையாளமும் சமூகம் அதனிடம் எதிர்பார்க்கும் அடையாளமும் முரண்படும்போது இரு தரப்பும் ஒருவர் மற்றவரைச் சமாதானப்படுத்தி தன் கருத்தை ஏற்கச் செய்ய முயற்சிக்கின்றன.

இதில் சிக்கல் என்னவென்றால், இரு தரப்பும் சம வலிமையிலும் இல்லை; சம புரிதலிலும் இல்லை என்பதுதான். குழந்தையிடம் அதிகாரம் இல்லை. பெரியவர்களிடம் அதிகாரம் இருக்கிறது. குழந்தைக்கு அன்பு புரியும்; பிடிக்கும். பெரியவர்களுக்கோ அன்பும் ஓர் ஆயுதம்தான். தன் வசப்படாத குழந்தையின் மீது தமக்குள்ள அன்பையே ஆயுதமாகப் பெரியவர்கள் பயன்படுத்துவது எப்போதும் நடக்கிறது.

கடவுள் பக்தி, உணவுப் பழக்கம், சுய ஆரோக்கியம் என்று எண்ணற்ற விஷயங்களில் குழந்தைகளை வழிப்படுத்துவதைப் பெரியவர்கள் அன்பின் மூலம் மட்டுமே செய்வதில்லை. பரிசு, தண்டனை என்ற இரு ஆயுதங்களைப் பயன்படுத்திக்கொண்டே இருக்கிறார்கள். இந்த அணுகுமுறைகள் ஒரு வரம்புக்கு உட்பட்டு இயங்கும்போது, நிச்சயம் பலன் அளிக்கின்றன. ஆனால், வரம்பு மீறும்போது, இந்த வழிமுறைகள் பலவீனமானவையாக, பயனற்றவையாகிவிடுகின்றன.

தன் வீட்டுக் குழந்தை தம்மைப் போல தனி நேரம் ஒதுக்கி சாமி கும்பிடவில்லையென்றால்கூட பெரியவர்கள் அதைப்பற்றி மற்றவர்களுக்கு சமாதானம் சொல்லிவிடுவார்கள். ''அவனு(ளு)க்கு சடங்குகளில் ஆர்வம் கிடையாது. ஆனால், கடவுள் நம்பிக்கை உண்டு'' என்று சொல்லிக் கொள்ளலாம். உணவுப் பழக்கத்தையும் விளக்கிவிட முடியும். 'ஸ்வீட் பிடிக்காது', 'காரம் பிடிக்காது' என்றெல்லாம் சொல்லிவிடலாம். ஆரோக்கிய விஷயங்களும் அப்படித்தான்.

ஆனால், பாலியல் அடையாளம் இப்படிப்பட்டது அல்ல. பெண் குழந்தை 'ஆம்பளைத்தனமாக' நடந்துகொள்வதையோ, ஆண் குழந்தை 'பெண்மை மிளிர' நளினமாக இயங்குவதையோ, மற்றவர்கள் எப்படி நினைக்கிறார்கள் என்பது பெற்றோருக்கு

விளக்கங்கள் சொல்ல முடியாத பெரும் கவலையாகிவிடும். டீன் ஏஜ் வரை வெளித் தோற்றம், நடை உடை பாவனைகளில் இருபிறவியாளர் (அரவாணிக்கு இன்னொரு மாற்றுச் சொல்லாக வாசகர் ஒருவர் அனுப்பிய பரிந்துரைச் சொல் இது) போல நடந்துகொண்டால், பெற்றோர் காட்டும் எதிர்வினை கடுமையானது.

படிப்பறிவு, பண வசதி வேறுபட வேறுபட, எதிர்வினைகளில் சின்னச் சின்ன மாற்றங்கள் இருக்குமே தவிர, பொதுவாக எல்லா வகைப் பெற்றோரின் எதிர்வினையும் கடுமையானதுதான். காரணம், சமூகம் பற்றிய அச்சம்.

சமூகம் ஏற்றுக்கொண்டு இருக்கிற, வகைப்படுத்தியிருக்கிற வரையறைகளில்இருந்து நம் குழந்தை வேறுபடுவதை வேறு எந்தத் துறையில் ஏற்றுக்கொள்ள முடிகிற பெற்றோருக்கும்கூட, பாலியல் அடையாளத் துறையில் மட்டும் எளிதில் முடிவதே இல்லை.

சென்ற ஆண்டு குஜராத்தின் தென் பகுதியில் நர்மதை நதிக் கரையில் இருக்கும் ராஜ்பிப்லா ஜமீனின் ராஜ குடும்பத்தைச் சேர்ந்த இளவரசர் மனவேந்திரா, தன்னை ஹோமோசெக்ஸுவல் என்று அறிவித்துக்கொண்டது அந்தப் பகுதியில் பெரும் அதிர்ச்சியை ஏற்படுத்தியது. இந்த அறிவிப்பைச் செய்யும்போது மனவேந்திராவுக்கு 40 வயது. சுமார் 30 வருடங்களாகக் கடும் மன உளைச்சலில் தவித்ததாகவும் இந்த அறிவிப்பைப் பகிரங்கமாகச் செய்த பிறகே தனக்கு மன அமைதி ஏற்பட்டு இருப்பதாகவும் மனவேந்திரா தெரிவித்தார். சென்ற மாதம் உலகப் புகழ் பெற்ற ஓப்ரா வின்ஃப்ரேயின் பேட்டியில் மனவேந்திரா கலந்துகொண்டு மனம் திறந்து பேசினார்.

பத்து வயது முதலே தனக்கு மற்ற பையன்களைப் போல பெண்களிடம் கவர்ச்சி ஏற்படவில்லையென்பது தெரிந்ததாக மனவேந்திரா சொன்னார். ஆனால், இது சரியா தப்பா என்ற மன உளைச்சல் இருந்தது. ராஜ குடும்பத்தின் ஒரே வாரிசு என்ற அடிப்படையில் குடும்பத்தினர் விருப்பப்படி 1991-ல் மனவேந்திரா மத்தியப்பிரதேசத்தைச் சேர்ந்த ஒரு ராஜ குடும்பத்தின் இளவரசியைத் திருமணம் செய்தார்.

மனைவியிடம் தனக்கு எந்த ஈர்ப்பும் இல்லை என்ற மனவேந்திரா அவருடன் உறவுகொள்ள மறுத்தார். ஒரே வருடத்தில் திருமணம் முறிந்தது. விடைபெறும்போது அவர் மனைவி சொன்னார், ''எனக்குச் செய்த கொடுமையைத் தயவுசெய்து வேறு எந்தப் பெண்ணுக்கும் செய்யாதே.'' யார் வற்புறுத்தினாலும் இனி இன்னொரு பெண்ணை மணம் செய்வதில்லை என்று முடிவு செய்த மனவேந்திரா, ரகசியமாக இந்தியாவில் இருக்கும் சுய பால் விழைவினரின் அமைப்புகளுடன் தொடர்புகொண்டார். அவற்றுக்கு நிதி உதவி அளித்தார். தன் ரகசிய வாழ்க்கையின் மன அழுத்தத்தை அவரால் தாங்க முடியவில்லை. இது மன நோய் என்று நினைத்து, மன நல மருத்துவமனையில் சிகிச்சைக்குச் சென்றார். அங்கே மருத்துவரிடம் தன்னைப்பற்றிய உண்மைகளை வெளிப்படுத்தினார்.

'இது உங்கள் பாலியல் அடையாளம். இதுபற்றி நீங்கள் மன உளைச்சல் கொள்ளத் தேவையில்லை' என்று அறிவுறுத்திய உளவியல் நிபுணரின் ஆலோசனைக்குப் பிறகு, பெற்றோரிடம் தன்னைப்பற்றி தெரிவித்தார். அவர் தாய் அவருடன் பேசுவதை நிறுத்தியது மட்டுமல்ல, குடும்பச் சொத்து, வாரிசுரிமை எதுவும் மனவேந்திராவுக்குக் கிடையாது என்று பத்திரிகைகளில் விளம்பரம் செய்தார்.

பகிரங்கமாகத் தன்னை ஹோமோசெக்ஸுவல் என்று அறிவித்த மனவேந்திரா, இப்போது இயற்கை விவசாயத்திலும் மண்புழு உரத் தயாரிப்பிலும் ஈடுபட்டு இருக்கிறார். சுய பால் விழைவினரிடம் எய்ட்ஸ் பரவாமல் தடுப்பதற்கான சமூகப் பணியில் ஈடுபட அறக்கட்டளையைத் தொடங்கி நடத்தி வருகிறார். இதுவரை குஜராத்தில் சுமார் 17 ஆயிரம் சுய பால் விழைவினர் மத்தியில் சிறந்த பணி ஆற்றியதற்காக, ஐ.நா. சபையின் எய்ட்ஸ் சேவைப் பிரிவின் விருது அவருடைய அறக்கட்டளைக்குச் சென்ற ஆண்டு தரப்பட்டது. ராஜ குடும்ப வாரிசுரிமை, சொத்து சுகம் இல்லாமற் போனாலும் இப்போது தான் நிம்மதியாக இருப்பதாக மனவேந்திரா சொல்கிறார்.

மனவேந்திரா மட்டுமல்ல... பல பெரும் பணக்காரர்கள், தொழிலதிபர்கள் வீட்டு இளைஞர்கள் சுய பால் விழைவினராக இருந்ததால், குடும்ப - சமூக ஒப்புதல் இல்லாமையால் கடும் மன உளைச்சலுக்கு ஆளாகி சிகிச்சை பெற்ற நிகழ்ச்சிகள் இந்தியாவில் நடைபெற்றுள்ளன. ஒரு பெரும் ஜவுளி ஆலை அதிபரின் மகன் தன்னைப் பெண்ணாக உணர்ந்து அறுவை சிகிச்சை மூலம் மாற்றிக்கொண்டார். இன்னொரு தொழிலதிபரின் வாரிசு, இதே சிக்கலில் மன உளைச்சலினால் தற்கொலை செய்துகொண்டார். வசதியுள்ளவர்கள் தொடர்பான இத்தகைய விஷயங்கள் கிசுகிசுச் செய்திகளாக முதலில் வெளிவரத் தொடங்கி, பின்னர் பகிரங்க மாகின்றன.

ஏழைகள், நடுத்தரக் குடும்பங்களில் இத்தகைய நிகழ்வுகள் குற்றச் சம்பவங்களாக உருமாறி, செய்தித்தாள்களில் தொடர் விவாதப் பொருளாகின்றன. இரு சிநேகிதிகள் ஒன்றாகத் தற்கொலை செய்துகொள்வதாக வரும் செய்திகளுக்குப் பின்னால் பெரும் பாலும் இருப்பது அவர்களுடைய லெஸ்பியன் உறவும் அதற்கு இருவரின் குடும்பங்களில் எழும் கடும் எதிர்ப்பும்தான்.

பாலியல் அடையாளம் பற்றி சிறு வயதிலிருந்தே தெளிவும் குடும்பங்களின் புரிதலும் இருந்தால் மட்டுமே இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளைத் தவிர்க்க முடியும். 'எனக்கு உருளைக் கிழங்குதான் பிடிக்கும், கத்தரிக்காய் பிடிக்காது' என்று ஒருவர் சாப்பாட்டு மேசையில் பிடிவாதமாக இருப்பதை சகஜமாக ஏற்றுக்கொள்வது போல, ஒருவரின் பாலியல் அடையாளத்தையும் அவருடைய விருப்பு வெறுப்பு தொடர்பான தனி உரிமையாக ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவத்தை தனி நபர்களாகவும் சமூகமாகவும் அடைவதற்கு இன்னும் நீண்ட தூரம் போக வேண்டி உள்ளது.

ஒரு குழந்தையின் சுய அடையாளத்தை அது உருவாக்கிக்கொள்வதில் சுற்றியிருக்கும் நம் எல்லாருக்கும் பங்கு இருக்கிறது. அந்தப் பங்கு சைல்ட் ஃப்ரெண்ட்லியாக இருக்க வேண்டும் என்பதுதான் அதி முக்கியமானது. ஒரு குழந்தையிடம் 'நீ மக்கு. நீ முட்டாள். உனக்கு கணக்கு வரவே வராது' என்று

சொல்லும் ஒவ்வொரு முறையும், நாம்தான் அந்தக் குழந்தையை மேலும் முட்டாளாக உருவாக்கிக்கொண்டு இருக்கிறோம். அப்படி மக்கு என்றே அடையாளம் காட்டப்படும் குழந்தை தன்னைப்பற்றி தானே உருவாக்கிக்கொள்ளும் சுய அடையாளம்தான் என்ன?

## இன்றைய ஹோம் ஒர்க்:

1. குழந்தையாக இருந்தபோது உங்களை மிரட்டியது, கொஞ்சியது இரண்டில் எது அதிகம்?
2. எதற்கெல்லாம் மிரட்டப்பட்டு இருக்கிறீர்கள்? பட்டியல் இடலாமே.
3. எதற்கெல்லாம் சாக்லெட், ஐஸ்க்ரீம் போன்ற பரிசுகள் கிடைக்கும்?
4. சுய பால் விழைவினால் வீட்டில் தள்ளுக்கப்பட்டவர்களையோ/மண உறவு முறிந்தவர்களையோ உங்களுக்குத் தெரியுமா?
5. இப்படிப்பட்ட நிலையில் ஒருவர் உங்கள் வீட்டில் இருந்தால், என்ன செய்வீர்கள்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 34

# சுய விமர்சனம் சுய மரியாதை

நான் யார் என்று ஒவ்வொரு குழந்தையும் யோசிக்கும்போது தன்னை ஒரு புத்திசாலி என்றோ முட்டாள் என்றோ எந்தக் குழந்தையும் தானே முடிவு கட்டுவதில்லை. தன் அனுபவங்களிலிருந்துதான் தன்னைப் பற்றிய எந்த முடிவுக்கும் ஒரு குழந்தை மெல்ல மெல்ல வருகிறது.

இந்த அனுபவங்களைக் குழந்தை தானே கற்பனை செய்து கொள்ள முடியாது. அவை நிகழவேண்டும்; நிகழ்கின்றன. இந்த அனுபவங்கள் ஒவ்வொன்றிலும் குழந்தையைச் சுற்றியுள்ள உலகம், அதிலிருக்கும் பொருட்கள், ஜீவராசிகள், மனிதர்கள் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள்.

குழந்தைக்கு அது யார் என்பதை உணர்த்தும், அதன் தலையில் பதிக்கும் வேலை வீட்டில் தொடங்குகிறது. செல்லமே, சர்க்கரைக் கட்டியே என்று கொஞ்சுவது முதல் எருமை மாட்டு நாயே என்று விசித்திரக் கலவையாகத் திட்டுவது வரை எல்லாமே குழந்தையின் சுய அடையாளத்தை உருவாக்கும் கருவிகள்தான்.

ஒற்றைக் குழந்தையாக வீட்டில் வளரும் குழந்தைக்கும், பல குழந்தைகளில் ஒன்றாக வளரும் குழந்தைக்கும் சுய அடையாளத்தை உருவாக்கும் வழிமுறையில் பல வேறுபாடுகள் நிச்சயம் இருக்கின்றன. மாறுபட்ட சூழல்கள் ஓரளவுக்குக் காரணம். ஒற்றைக் குழந்தையின் சூழல் மற்றதை விட மேலானதென்றோ, கீழானதென்றோ பொதுவாக எந்த முடிவும் கட்டி விட முடியாது.

ஒற்றைக் குழந்தைக்கு அதிக செல்லம் கொடுத்ததால், அது குட்டிச்சுவராகிவிடும் என்றோ, எல்லா கவனத்தையும அதற்கே செலுத்தியதால், அது பலருள் ஒருவராக வளர்ந்த குழந்தையை விட சிறப்பாக உருவாகியிருக்கும் என்றோ எந்த மாதிரி முடிவுக்கு வந்தாலும் தவறாகிவிடும். சகோதர சகோதரிகளுட்ன சேர்ந்து வளர்ந்த குழந்தைக்கு இதர மனிதர்களுடன் உறவாடும் ஆற்றல்கள் கூடுதலாக இருந்தே தீரும் என்றோ, பலரில் ஒருவராக இருந்ததால், போதுமான அக்கறை, கவனிப்பு கிட்டாமல் அதன் திறமைகள் சுருங்கிவிட்டதென்றோ முடிவுகள் செய்ய முடியாது. ஒரே சூழலில் வளரும் குழந்தைகளிடம் கூட பல வேறுபாடுகள் பல்வேறு காரணங்களால் இருக்கத்தன் செய்கின்றன.

குழந்தைகளின் சுய அடையாள உருவாக்கத்தில் கணிசமான பங்கு வகிக்கும் பெற்றோர், பெரியவர்களின் அணுகுமுறைகள் தொடர்பான சில பொதுவான தேவைகளை மட்டும் பார்க்கலாம்.

குழந்தையின் சுயமரியாதையை ஒவ்வொரு பெரியவரும் மதிக்க வேண்டும். சுயமரியாதையோடு வாழ அதற்கு உதவ வேண்டும்; கற்றுத்தரவேண்டும் என்பது முதல் தேவை. சுயமரியாதை என்பது என்ன?

சுயமரியாதை என்ற சொல் நம் சமூக அரசியலில் முக்கியமான இடத்தை வகிக்கிறது. இது அரசியலுக்கான விஷயம் மட்டுமல்ல.

இது வாழ்க்கைக்கான அம்சம். ஒவ்வொரு தனி நபருக்கும் சுய மரியாதை என்பது மூச்சு விடுவதைப் போல உணவு உண்பதைப் போல மிக மிக முக்கியமான தேவையாகும்.

இன்றும் வளர்ந்த, ஆண்டு அனுபவித்த பெரியவர்கள் கூட சமயங்களில் 'என்னை யாருமே மதிக்கறதில்லே' என்று அலுத்துக் கொள்கிறார்கள். இன்னொருவர் நம்மை மதிக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு எல்லா மனித மனங்களிலும் இருக்கிறது. அதனால்தான் ஒரு கட்டம் வரை குத்தாட்டம், 'கிளாமர்' பாத்திரங்களில் நடித்து நிறைய பணம் சம்பாதித்த பிறகும் நடிகைக்கு 'வித்யாசமான' பாத்திரங்களில் நடித்து நல்ல நடிகை என்ற பெயர் வாங்க ஆசை வருகிறது. கள்ளச் சாராயம் முதல் கட்டப்பஞ்சாயத்து வரை சகதியில் புதைந்து மூழ்கி முத்தெடுத்த பின், கல்வி வள்ளல் என்ற பெயர் பெற ஆசை வருகிறது.

நம்மை மற்றவர் மதிக்க வேண்டுமென்ற ஆசையை விட முக்கியமானது - நம்மை நாமே முதலில் மதிக்கப் பழகுவது. அதுதான் சுய மரியாதை. நம்மை நாமே எப்போது மதிக்க முடியும்? நம்மைப் பற்றி நமக்கே பெருமிதமும் மகிழ்ச்சியும் எப்போது கிட்ட முடியும்?

நம்முடைய குணங்கள் (Character), நம்முடைய மதிப்பீடுகள் (Values), நம்முடைய நடத்தை (Behaviour or conduct), நம்முடைய ஆற்றல்கள் (Skills) இவை நான்கும்தான் அந்த பெருமிதத்தையும் மகிழ்ச்சியையும் ஏற்படுத்தக் கூடியவை.

இதில் ஆற்றல்கள் தொடர்ந்து செய்யும் பயிற்சிகளினால் உருவாகக்கூடியவை. நம்முடைய குணங்களும் மதிப்பீடுகளும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. எது சரி எது தவறு என்று நிர்ணயிப்பதுதான் மதிப்பீடு. அதை நம் நடத்தையில் பின்பற்றத்தொடங்காதவரைக்கும் அதற்கு அர்த்தம் இல்லை. பின்பற்றத் தொடங்கி நடத்தையின் மூலம் அதை நம் இயல்பாக்கிக் கொண்டால், அதுவே நம் குணமாகிவிடுகிறது.

**இவை எல்லாமே எப்போது சாத்தியம்?**

நாம் செய்யும் தவறுகளைப் புரிந்துகொண்டு, திருத்திக் கொண்டு,

மறுபடியும் சரியாகச் செய்யப் பழகினால், ஆற்றல்கள் வந்துவிடும்; மதிப்பீடுகள் கறாராகிவிடும். நடத்தையும் குணமும் படிந்துவிடும். நம் சரி, தவறை நாமே புரிந்துகொள்வது, திருத்திக் கொள்வது என்பதை சாத்தியமாக்குவது எது? அதைத்தான் சுயவிமர்சனம் என்கிறோம்.

சுய விமர்சனம் இல்லாமல் சுயமரியாதை இல்லை.

சுயவிமர்சனம்தான் கிரிட்டிக்கல் திங்க்கிங்கின் முதல் படி. 'எதையும் கேள்வி கேள்' என்பதே கிரிட்டிக்கல் திங்க்கிங்கின் அடிப்படை விதி. எதையும் கேள்வி கேட்பதில்தான் முதலில் நம்மை நாமே கேள்விகள் கேட்டுக் கொள்வதும் அடக்கம்.

எப்போது பார்த்தாலும் அம்மா தன்னையே திட்டிக் கொண்டிருப்பதாக பத்து வயது மாலதிக்குத் தோன்றுகிறது. ஆனால் அம்மா தன்னைத் திட்டுகிற அளவுக்கு இரு வயது மூத்தவனான அண்ணன் கார்த்தியைத் திட்டுவதில்லை. அம்மாவைக் கேள்வி கேட்கத் தோன்றுகிறது. அதற்கு முனால் மாலதி தன்னைத் தானே கேள்விகள் கேட்டாகவேண்டும். அப்போதுதான் தவறு நிஜமாகவே அவளுடையதா, அம்மாவுடையதா என்று சரியான முடிவுக்கு வர முடியும்.

வீட்டு வேலை செய்யும்போது எதையாவது உடைத்து விடுகிறாள். பாத்திரம் நசுங்கிப் போகிறது. காயை சின்னதாக நறுக்குவதற்கு பதில் பெரிது பெரிதாக நறுக்கிவிடுகிறாள். அதே சமயம் அண்ணன் செய்யும் ஒவ்வொரு வேலையையும் கச்சிதமாக செய்கிறானாம். எதையும் கார்த்தியைப் போல சரியாகச் செய்ய மாலுவுக்கு வராது என்று திட்டுகிறாள் அம்மா.

தன் மீதுதான் தப்பா என்று யோசிக்கிறாள் மாலு. தான் செய்யும் எந்த வீட்டு வேலையையும் கார்த்தி செய்வதில்லை. காய் நறுக்குவதில்லை. பாத்திரம் தேய்ப்பதில்லை. வீடு பெருக்குவதில்லை. அவனும் அதையெல்லாம் செய்தால்தானே தன்னையும் அவனையும் ஒப்பிடுவது நியாயமாக இருக்க முடியும். கிரிக்கெட் பேட் உறையையும் பேட்மிண்ட்டன் ராக்கெட்டையும் எப்போதும் சரியான ஆணிகளில் மாட்டுகிறான்.

தன் புத்தகங்களையும் துணிகளையும் எப்போதும் அடுக்கி ஒழுங்காக வைத்திருக்கிறான்.

ஆனால் அவனுக்கு வீட்டில் வேறு வேலைகள் எதுவும் கிடையாதே. நானும்தான் பள்ளிக்கூடத்தில் நோட்டீஸ் போர்டில் அறிவிப்புகளை ஒட்டுவது முதல், ஹோம் ஒர்க் நோட் புத்தகங்களை பெயர் வாரியாக அடுக்கி மிஸ்ஸிடம் ஒப்படைப்பது வரை எல்லாவற்றையும் அழகாகக் கச்சிதமாக செய்கிறேன் என்று மிஸ்ஸே பாராட்டுகிறாரே. கார்த்தியைப் போல வீட்டுக்கு வந்ததும் எனக்கும் வேறு வேலை கிடையாது என்றால் நான் வீட்டிலும் என் பொருட்களை இன்னும் ஒழுங்காக வைத்துக் கொள்ள எனக்கு நேரம் இருக்குமே.

இதெல்லாம் ஏன் அம்மாவுக்குப் புரிவதில்லை என்பதுதான் மாலுவின் அடுத்த கேள்வி.

ஆதித்யாவுக்கு பள்ளிக் கூடத்தில் பிரச்சினை. உனக்கு சுட்டுப் போட்டாலும் கணக்கு வராது என்கிறார் கணக்கு டீச்சர். உனக்கு படிப்பே வராது என்கிறார் கிளாஸ் டீச்சர். டீச்சர் வேகமாகப் பேசாமல் கொஞ்சம் நிதானமாகப் பேசினால் எல்லாம் புரிகிற மாதிரி இருக்கிறது. வேகமாகச் சொல்லும்போது புரிவதில்லை. தப்பு வருகிறது. டீச்சர் என்ன சொன்னார் என்று பக்கத்து பெஞ்ச் மீனாவைக் கேட்கலாமா என்று தயங்கித் தயங்கிக் கேட்கும்போது, பாடத்தை கவனிக்காமல் என்ன பேச்சு என்று திட்டு விழுகிறது.

மாலு, ஆதித்யாவுக்கெல்லாம் நம்மிடம் என்ன தீர்வுகள் இருக்கின்றன? அவர்களிடமே அவர்களுக்கான தீர்வுகள் என்ன இருக்கின்றன?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. சிறுவர்களை என்ன சொல்லித் திட்டுகிறீர்கள்? எப்படிக் கொஞ்சுகிறீர்கள்? குழந்தையாக இருந்தபோது உங்களை திட்டிய, கொஞ்சிய அதே முறைகளிலா?
2. வீட்டில் தனிக் குழந்தையாக வளர்ந்தீர்களா? பல குழந்தைகளில் ஒன்றாக வளர்ந்தீர்களா ? இப்படி இல்லாமல் அப்படி

இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்குமே என்று நினைத்த தருணங்கள் உண்டா?

3. சுயமரியாதை என்ற சொல்லை முதன்முதலில் எப்போது கேள்விப்பட்டீர்கள்? அட இதுதன் சுயமரியாதையா என்று கருதினீர்களா? எது சுயமரியாதை என்பதே புரியவில்லையே என்று குழப்பமாக இருந்ததா?
4. சுயவிமர்சனம் என்பதை எப்போது செய்ய ஆரம்பித்தீர்கள் ? எந்த நிகழ்ச்சி முதலில் உங்களை அப்படி சிந்திக்கத் தூண்டியது ?
5. வீட்டில் பெரியவர்களிடம் திட்டு வாங்கியபோது, அதன் அடிப்படைகளை அப்புறம் யோசித்துப் பார்ப்பதுண்டா?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 35

# மல்டி டாஸ்க்கிங் மம்மீ?

ஒரு பொய்யைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே இருந்தால் அது உண்மை என்று நம்பப்பட்டு பின்னர் ஏற்றுக் கொண்டுப்படவிடும் என்பது ஹிட்லரின் பிரசார அமைச்சர் கெப்பல்ஸ் (கோயபல்ஸ் என்பது தவறான உச்சரிப்பு) வெற்றிகரமாகப் பின்பற்றிய வழிமுறையாகும்.

பொய் மட்டும் அல்ல; ஒரு கருத்து கூடப் பல முறை சொல்லப்படுவதால் மனதில் பதிந்து ஏற்றுக் கொள்ளப்படும் சாத்தியம் உள்ளது. பாஸிடிவ் திங்க்கிங் என்ற கோட்பாட்டை முன்வைப்பவர்கள் இந்த அடிப்படையைத்தான் பின்பற்றுகிறார்கள்.

நீ எதை நினைக்கிறாயோ அதுவாகவே ஆகிவிடுகிறாய்;

எனவே ஆக்கப்பூர்வமானதையே நினைக்கப் பழகு; பாஸிட்டிவ் பர்சனாகிவிடலாம் என்பதே இந்தக் கோட்பாடு.

நான் என்னவாக இருக்கிறேன் என்று நான் நினைப்பதற்கு என்னைத் தூண்டும் பல அம்சங்களில் முக்கியமானது மற்றவர்கள் என்னைப் பற்றி என்னிடம் என்ன சொல்கிறார்கள் என்பதாகும். மாலுவின் அம்மா அவளை எப்போதும் திட்டிக் கொண்டே இருக்கிறார். எதையும் உனக்கு ஒழுங்காக செய்ய வராது என்று அவளிடம் சொல்லிக் கொன்டே இருந்தால், வராதுதான்.

ஆதித்யாவின் ஆசிரியர்கள் அவனுக்கு சுட்டுப் போட்டாலும் கணக்கு வராது, படிப்பு வராது என்று சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள். எனவே அவனும் அதை நம்பத் தொடங்கிவிடுகிறான்.

அதே சமயம் பாஸிட்டிவ் திங்க்கிங் என்று நம்பிக் கொண்டு, குழந்தை செய்யும் தவறுகளைக் கூட அதற்கு சுட்டிக் காட்டாமல், எது செய்தாலும் சரி என்று சொல்லிக் கொண்டிருந்தாலும் தவறுதான். தன்னைத் தானே திருத்திக் கொண்டு செம்மைப்படுத்திக் கொள்ள வழியில்லாமல் போய்விடும்.

மிகையான திட்டுகளும் மிகையான புகழ்ச்சிகளும் நம் சிறுவர்களைப் பாழாக்கவே உதவுகின்றன. தேவையற்ற உயர்வு மனப்பான்மையான சுப்பீரியாரிட்டி காம்ப்ளெக்ஸும், சுயபரிதாபத்துக்கு அழைத்துப் போகும் தாழ்வு மனப்பான்மையான இன்ஃபீரியாரிட்டி காம்ப்ளெக்ஸும் குழந்தைகளுக்கு தானாக வருவதில்லை. நாம்தான் ஏற்படுத்துகிறோம்.

ஒவ்வொரு முறை செல்லம் கொஞ்சும்போதும் எரிந்து விழும்போதும் அது குழந்தையின் மனதை செதுக்குவதற்கான வாய்ப்பு என்பதை நாம் உணரவேண்டும். சிறுவர்களைக் கொஞ்சிப் பேசும் சமயங்கள் அவர்களுக்கு அவர்களையே உணர்த்துவதற்கான அருமையான வாய்ப்புகள்.

அன்பையும் பாராட்டையும் வெளிப்படுத்தும் உரையாடலிலேயே, 'இவ்வளவு அருமையாக இதைச் செய்யும் உன்னால் அதையும் செய்ய முடியாதா என்ன, அதில் மட்டும் சுணக்கம் எதற்கு?'

என்று சிறுவரின் பலவீனமான பகுதிகளைப் பற்றி ஆரோக்கியமான விவாதத்தை நடத்தத் தொடங்கலாம்.

தவறுக்காக எரிந்து விழும் தருணத்திலும் கூட, சிறுவரின் சிறப்புகளை நினைவுபடுத்தி 'அப்படிப்பட்ட நீயா இப்படிச் செய்வது?' என்ற தொனியை பின்பற்றலாம்.

தான் முழுமையாக நிராகரிக்கப்படுகிறோம் என்ற உணர்வுதான் ஒரு சிறுவனையோ சிறுமியையோ சுய பரிதாபத்தை நோக்கியும் ஆளுமைச் சிதைவை நோக்கியும் அழைத்துச் செல்லும். தான் என்ன செய்தாலும் பாராட்டப்படுவோம் என்ற உணர்வுதான், தான் என்ன செய்தாலும் அது சரிதான் என்று சுயவிமர்சனம் இல்லாத மன நிலையை சிறுவருக்கு ஏற்படுத்தி வெற்று ஆணவத்தில் சிதையச் செய்யும்.

எனவே பெரியவர்கள் குழந்தைகளுக்கும் சிறுவர்களுக்கும் தரும் பாராட்டுகளும் விமர்சனங்களும் குழந்தையை அடுத்த கட்ட மன வளர்ச்சிக்கு அழைத்துச் செல்வதாக இருக்க வேண்டுமே தவிர அவர்களின் ஆளுமையை சிதைப்பதாக இருந்துவிடக் கூடாது.

சிறுவர்கள் யோசிக்கிறார்கள்; சிந்திக்கிறார்கள்; அவர்கள் ஒன்றும் கீ கொடுத்தால் அதற்கேற்ப இயங்கும் பொம்மைகள் அல்ல என்பதை பெரியவர்கள் உணரவேண்டும். கோபித்துக் கொள்ளும்போது மட்டும் 'அறிவு இல்லை உனக்கு? யோசிக்க வேணாம்?' என்று கேட்பது சரியாகாது. அறிவு இருக்கிறது; எப்போதும் சிந்தித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். எதை? நாம் சொல்வதை; நாம் செய்வதை. இவை இரண்டும் சிறுவர்களின் உள வளர்ச்சியை 24 X 7 செதுக்கிக் கொண்டே இருக்கின்றன.

பெரியவர்களுடைய பேச்சு, செயல் இரண்டும் சிறுவர்களை வாழ்க்கை பற்றிய முன்முடிவுகளுக்கு எளிதில் தள்ளிவிட முடியும். ஏனென்றால் சிகரெட் வாங்கவும் பீர் பாட்டில் வாங்கவும் கடைக்குத் தன் குழந்தையை அனுப்பும் அப்பாவுக்கு எதிர்காலத்தில் சிகரெட்டும் மதுவும் பயன்படுத்தும் தன் டீன் ஏஜ் மகனிடம் அது பற்றி லேசாக விசாரிக்கும் வாய்ப்பு கூட பறி போய்விடுகிறது.

என் அப்பாவுக்கு சிகரெட் பிடிக்கும் பழக்கம் இருந்தது என்பது

எனக்கோ என் மூத்த உடன்பிறப்புகளுக்கோ நாங்கள் குழந்தைகளாக சிறுவர்களாக இருந்த காலம் முழுவதும் தெரியவே தெரியாது. அலுவலகத்தோடு தன் சிகரெட் வாழ்க்கையை அப்பா முடித்துக் கொண்டு வீடு திரும்பும்போது காலி சிகரெட் பெட்டி, தீப்பெட்டி எல்லாவற்றையும் ரயிலடியிலேயே தூக்கி எறிந்துவிட்டு, அதற்கான எந்தத் தடயங்களும் இல்லாமலே வீட்டுக்கு வருவார்; வந்திருக்கிறார் என்பது பல வருடங்களுக்குப் பின் அதே அலுவலகத்தில் அவரது இளைய சகாக்கள், என் மூத்த சகாக்களாக இருந்ததால் எனக்குத் தெரியவந்தது.

படிப்பு, சாதி-மதச்சார்பின்மை, உழைப்பு, எளிமை போன்று பல விஷயங்களுக்கு எங்களுக்கு முன்மாதிரியாக இருந்த அப்பா, சிகரெட் விஷயத்திலும் முன்மாதிரியாகி விடக் கூடாது என்ற கவலையில் இப்படி ஒரு நடைமுறையைப் பின்பற்றியிருக்கிறார். அந்த நடைமுறை வேறு காலகட்டத்துடையது. இன்று இன்னொரு விதமாக இருக்கமுடியும்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஒவ்வொரு அப்பாவும் அம்மாவும் இப்படித் தங்கள் குழந்தைகளுக்கு எதிலெல்லாம் தான் முன்மாதிரியாக ஆகிவிடக் கூடாது என்ற கவலையுடன் அவரவருக்கே உரிய வெவ்வேறு வழிமுறைகளைக் கையாளத்தான் செய்கிறார்கள்.

அப்பா அடித்தாலும் உதைத்தாலும் எத்தனை கெட்ட வார்த்தைகளால் திட்டினாலும், கல்லு மாதிரி இருக்கும் அம்மா தன் மகளுக்குத் தரும் செய்தி என்ன? திருமணம் என்பதே தேவையா, கணவன்-மனைவி உறவு இப்படித்தான் இருக்குமா, நாளைக்கு நாமும் நம் குழந்தைகளுக்காக எதையும் சகித்துக் கொள்ளவேண்டி வருமா என்று பல விதமாக சிறுமியின் மனதில் கேள்விகள் எழும். அப்படிக் கேள்விகள் எழும்போது அடுத்த கட்டத்துக்கு அவர்கள் செல்கிறார்கள்.

சமயங்களில் குழந்தைகள், குறிப்பாக சற்றே வளர்ந்த சிறுவர்கள் நாம் அவர்களுக்கு அளிக்கும் அறிவுரைகள்,

முன்மாதிரிகள் ஆகியவற்றை மீறி சிந்திக்கத் தொடங்குகிறார்கள். நாம் சொன்னவை, செய்தவை சரியா தப்பா என்ற குழப்பத்தின் விளைவாக இந்த சிந்தனை அவர்களுக்கு நிகழ்கிறது.

இப்படி சிந்திக்கத் தொடங்கும்போதுதான் சிறுவர்கள் தங்களுக்கான புதிய பிரச்சினைகளையும் சரி, தீர்வுகளையும் சரி உருவாக்கிக் கொள்ள முடியும். சுயமாக யோசித்தால் புதுப்புதுப் பிரச்சினைகள் வருமே என்று பயந்து சுயபுத்தி இல்லாமல் இருந்துவிடமுடியாது. புதுப் புதுத் தீர்வுகளும் அப்போதுதான் வரமுடியும்.

அம்மா திட்டும்போதெல்லாம் மாலு யோசிக்கிறாள். யோசிக்கும்போது தான் வீட்டு வேலைகளையும் செய்துகொண்டு பள்ளிக் கூடப் படிப்பு தொடர்பான வேலைகளையும் பார்க்கிறேன். அண்ணன் கார்த்தி வீட்டு வேலை எதையும் செய்வதில்லை. எனவே அவனுடைய நேர்த்தியை என்னுடைய நேர்த்தியுடன் ஒப்பிடுவது தவறு. ஆனால் அம்மா ஏன் இப்படி செய்கிறார்? அவர் பார்வையில் ஆண் குழந்தை ஓசத்தி. அப்படிப் பார்க்கத்தான் அம்மாவுக்குக் கற்றுத் தந்திருக்கிறார்கள். அதனல்தான் அப்படிப் பார்க்கிறார்.

வேறு மாதிரி இதை அணுகு என்று அம்மாவுக்கு எப்படிச் சொல்வது? மாலுவுக்குத் தெரியவில்லை. ஆனால் மாயா டீச்சரிடம் இதைப் பற்றி கேட்கலாமா? முதலில் சில தினங்கள் தயக்கம் இருக்கிறது. பிறகு ஒரு நாள் கேட்கலாம் என்று நினைக்கையில் மாயா டீச்சரே மாலுவிடம் கேட்கிறார். ‘ஏன் மாலு ரெண்டு நாளா டல்லா இருக்கே? எனி ப்ராப்ளம்?’.

இப்படி ஒரு வாய்ப்புக்கு ஏங்கியிருந்த மாலு கொட்டித் தீர்த்து விடுகிறாள். மாயா டீச்சர் மாலுவுக்கு சிலப் புது வார்த்தைகளை சொல்லி அசத்தி, போய் இதையெல்லாம் அம்மாவிடமும் சொல்லி அம்மாவை அசத்து என்று யோசனைகள் தருகிறார்.

‘மல்ட்டி டாஸ்க்கிங்னா என்னன்னு உனக்கு தெரியுமா அம்மா?’ என்று தொடங்குகிறது மாலுவுக்கும் அம்மாவுக்குமான உரையாடல்.

## இன்றைய ஹோம் வொர்க்:

1. சிறு வயதில் உங்களுக்குக் கிடைத்த முதல் பாராட்டு என்ன? எதற்காக? நியாயமானதுதானா?
2. பாராட்டுக்குக் காரணமான உங்கள் திறமை/அந்த விஷயம் இன்னும் உங்கள் வாழ்க்கையில் நீடிக்கிறதா?
3. சிறு வயதில் உங்களுக்குக் கிடைத்த முதல் திட்டு என்ன? எதற்காக? நியாயமானதுதானா?
4. திட்டுக்குக் காரணமான உங்கள் செயல்/குறை/அந்த விஷயம் இன்னும் உங்கள் வாழ்க்கையில் நீடிக்கிறதா?
5. அப்பா மாதிரி /அம்மா மாதிரி நான் இருக்க வேண்டும்/ இருக்கக்கூடாது என்று நீங்கள் நினைத்த குறிப்பிட்ட விஷயங்கள் என்னென்ன?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 36

# உன்னால் முடியும் தம்பி!

"உனக்கும் எனக்கும்தான் மல்ட்டி டாஸ்க்கிங் தெரியும். பாய்ஸைவிட கேர்ள்சுக்குதான் மல்ட்டி டாஸ்க்கிங் சுலபமா வருதாம்!''

ஒரே சமயத்தில் பலவிதமான வேலைகளைக் கையாளும் திறமைதான் 'மல்ட்டி டாஸ்க்கிங்' என்று அம்மாவுக்கு விளக்குகிறாள் மாலு. சமைக்கும்போது குக்கரில் அரிசியும் பருப்பும் வெந்துகொண்டு இருக்கும்போதே, வெங்காயம், தக்காளி, காய்களை எல்லாம் நறுக்கும் வேலையைச் செய்து முடித்துக்கொள்வது 'டைம் மேனேஜ்மென்ட்' என்று மாயா டீச்சர் தனக்குச் சொன்னதை

எல்லாம் அம்மாவிடம் மாலு சொல்லச் சொல்ல... அம்மாவுக்கு மாலுவைப் பற்றி மட்டுமல்ல, தன்னைத் தானே கூடுதலாகப் புரிந்துகொள்வதும் நிகழ்கிறது.

எதற்கெடுத்தாலும் தன்னைக் குறை சொல்லிக்கொண்டு இருந்த அம்மாவுக்கு, மாலு தான் யார் என்பதை உணர்த்தும்போதே, அம்மாவுக்கும் அவர் யார் என்பதை உணர்த்துகிறாள். "அண்ணனையும் வீட்டு வேலை எல்லாம் செய்யச் சொல்லும்மா. என்னைப் போல அவனும் இப்பவே மல்ட்டி டாஸ்க்கிங் கத்துக்கிட்டா, பின்னாடி அவனுக்கு ஈஸியா இருக்கும்'' என்று மாலு கடைசியாகப் போகிறபோக்கில் சொல்லும்போது, அம்மாவால் அந்த நியாயத்தை மறுக்க முடிவதில்லை.

அதன் பிறகு, மாலு ஒவ்வொரு வேலையைச் செய்யும்போதும் அதில் ஏதாவது தப்பு செய்தால், அம்மா கோபப்படுவதில்லை. அடுத்த முறை இப்படிச் செய்தால் தப்பு வராது என்று சொல்லித் தருபவளாக, அம்மா மெள்ள மாற்றம் அடைகிறார்.

எல்லா உறவுகளும் தொடர்ந்த உறவாடலில் மாற்றங்களை அடைகின்றன; புதிய பரிமாணங்களை அடைகின்றன. பெற்றோர் குழந்தைகள் உறவானாலும் சரி, டீச்சர் மாணவர் உறவானாலும் சரி... ஊற ஊற ஊறுகாய் சுவை கூடுவது போல, உறவாட உறவாடத்தான் உறவுகள் மெருகேறுகின்றன.

பரஸ்பரப் புரிதலுக்கு அடிப்படை, அன்பு மட்டுமல்ல... ஒருவர் மற்றவரை வயது வித்தியாசங்களுக்கு அப்பால் மதிப்பதும் ஆகும். அதே சமயம், சின்னக் குழநந்தயை 'நீங்க' என்று அழைப்பதால் மட்டும், அதை நாம் மதிப்பதாக ஆகிவிடாது என்பதையும் கவனத்தில்கொள்ள வேண்டும்.

தன்னை மற்றவர்கள் மதிக்கிறார்கள் என்கிற உணர்ச்சி, சிறுவர்களுக்குப் பெரும் தன்னம்பிக்கையை ஏற்படுத்தக்கூடிய உணர்ச்சி. ஆதித்யாவுக்குச் சுட்டுப்போட்டாலும் கணக்கு வராது, படிப்பே வராது என்று ஆசிரியர்கள் சொல்லிச் சொல்லி, அவன் நிஜமாகவே தான் ஒரு மக்கு என்ற முடிவுக்கு வந்துவிடுகிறான்.

நன் பலம் எதுவும் அவனுக்குத் தெரிவது இல்லை.

திடீரென்று பக்கத்து பெஞ்ச் சிவமதி, "சனிக்கிழமை என் பர்த்டே பார்ட்டிக்கு எங்க வீட்டுக்கு வர்றியா?'' என்று அழைக்கும்போது, ஆதித்யாவுக்கு அதிர்ச்சியாக இருக்கிறது. வகுப்பில் உள்ள கெட்டிக்கார, துறுதுறுப்பான பையன்களில்கூடச் சிலரை அழைக்காத சிவமதி, தன்னை ஏன் அழைக்கிறாள் என்பது ஆதிக்கு ஆச்சர்யமாக இருக்கிறது. அவளிடமே கேட்கிறான்.

"கிளாஸ்ல எல்லாரையும் கூப்பிடலை. ஸ்பெஷலா சில பேரை மட்டும்தான் கூப்பட்டிருக்கேன்'' என்கிறாள் சிவமதி.

"அப்படி என்கிட்ட என்ன ஸ்பெஷல்?''

"நீ ரொம்ப நல்ல பையன் ஆதி! வீண் அரட்டை அடிக்கிறதில்லை. கேர்ள்ஸை கலாட்டா பண்றதில்லை. டெய்லி நீதான் பிளாக் போர்டை க்ளீன் பண்ணிட்டு வீட்டுக்குப் போற... ஐ லைக் தட்!''

தன்னிடம் மற்றவர்கள் மதிக்கக்கூடிய அம்சமும் இருக்கிறது என்பதை ஒரு குழந்தை உணரும்போது, அதன் சுயமரியாதை அதிகரிக்கிறது; தன்னம்பிக்கை அதிகரிக்கிறது. 'நீ மதிக்கத்தகுந்த நபர் அல்ல!' என்கிறவிதமாக பெரியவர்கள் குழந்தைகளிடம் நடந்துகொள்ளும் ஒவ்வொரு தருணமும், குழந்தை தாழ்வு மனப்பான்மையை நோக்கி ஒவ்வொரு அடியாகச் சென்றுகொண்டே இருக்கிறது.

தன்னைத்தானே உணர்வதும், தன்னைப்பிறர் உணரச்செய்வதும், தான் பிறரை உணர்வதும்தான் வளர்ச்சியின் ஆரம்ப அடிப்படைகள். இதற்குத் தேவைப்படும் இதர ஆற்றல்களில் முதன்மையானவை உறவாடக் கற்றுக்கொள்வதும் உரையாடக் கற்றுக்கொள்வதும் ஆகும். மாலுவும் அம்மாவும், ஆதித்யாவும் சிவமதியும், ஆரோக்கியமாக உறவாடி, துல்லியமாக உரையாடும்போதுதான் சம்பந்தப்பட்ட அனைவரும் தம்மைத்தாமே சரியாக உணர்வதும், தம்மை பிறர் உணரச் செய்வதும், தாம் பிறரை உணர்வதும் நிகழ்கின்றன.

நாம் நிறைய உறவாடுகிறோம், நிறைய உரையாடுகிறோம். ஆனால், சரியாக உறவாடுகிறோமா? தெளிவாக உரையாடுகிறோமா?

## இன்றைய ஹோம் வொர்க்

1. உங்கள் அன்றாட வாழ்க்கையில், ‘மல்ட்டி டாஸ்க்கிங்’ எனப்படும் ஒரே சமயம் பல செயல்கள் புரியும் தருணங்கள் உண்டா?
2. உங்களைச் சுற்றியிருப்பவர்கள் ஒவ்வொருவரும் எப்படிப்பட்ட மல்ட்டி டாஸ்க்கிங் செய்கிறார்கள் என்று கவனிப்பது உண்டா? அவற்றைப் பட்டியலிடுங்கள்.
3. சிறுவர்கள் உங்களிடம் பேசும்போது, அவர்களை முழுமையாகப் பேசவிட்டு, அவர்கள் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்பீர்களா? அல்லது, ‘என்ன சொல்ல வருகிறாய் என்று எனக்குத் தெரியும்’ என்று ‘கட் பண்ணிவிடுவீர்களா?
4. உங்களுடைய பலங்கள் என்ன என்று முதலில் உணர்ந்தது எப்போது? யாரால்?
5. நீங்கள் இன்னொருவரின் பலங்களைச் சுட்டிக்காட்டியது அதிகமா? பலவீனங்களைச் சுட்டிக்காட்டியது அதிகமா?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 37

# பேசுகிறோம்... பேசுகிறோமா?

தமிழ்நாட்டில் எந்த மூலைக்குப் போனாலும் இரைச்சல் அதிகமாக இருக்கிறது. பள்ளிக்கூடங்கள், பஸ் நிலையங்கள், ரயிலடிகள், சந்தைகள், ஷாப்பிங் மால்கள் போன்ற இடங்களில் மட்டுமல்ல, இப்போதெல்லாம் திரையரங்குகளில்கூட படம் ஓடிக்கொண்டு இருக்கும்போதே, அரங்கில் செல்போனில் சிலர் பேசும் சத்தம் டால்பி, டி.டி.எஸ்ஸையும் மிஞ்சிக் கேட்கிறது.

நிறையப் பேசுகிறோம். நிறைவாகப் பேசுகிறோமா?

வெளித் தோற்றத்தில்தான் நாம் நிறையப் பேசுவதாகத் தெரிகிறது. பல சமயங்களில் பேச வேண்டிய அளவுகூடப் பேசுவதில்லை. பேச வேண்டியதைப் பேசுவதில்லை. தேவையற்ற

பேச்சுக்களைப் பேசிக்கொண்டு இருக்கிறோம். பண்பலை ஒலிபரப்புகளிலும், தொலைக்காட்சி நேரடி ஒளிபரப்புகளிலும் தொலைபேசி அழைப்புகளில் பேசப்படும் பேச்சுக்களை ஒரு பத்து நிமிடம் பதிவு செய்து திரும்பப் போட்டுக் கேட்டால், நம் பேச்சின் அபத்தங்கள் புரியும்.

எல்லா உறவாடல்களிலும் உரையாடல்கள் முக்கியமானவை. அதே அளவுக்கு மௌனங்களும் முக்கியமானவை.

'அப்படி நான் பேசியிருக்கக் கூடாது. சும்மா இருந்திருக்கணும்!'

'அப்பவே இதைச் சொல்லியிருக்கணும். சும்மா இருந்து தப்பு!'

இந்த இரண்டு வாக்கியங்களும், நாம் மிக சகஜமாகக் கேட்கக்கூடியவை. பேச வேண்டிய தருணங்களில் மௌனமாகவும், மௌனம் காக்க வேண்டிய வேளைகளில் பேசியும் நம் வாழ்க்கையையும் உறவுகளையும் சிக்கலாக்கிக்கொண்டு விடுகிறோம். என்பதைத்தான் அவை காட்டுகின்றன.

குழந்தைப் பருவம் முதல், வளர் இளம் பருவம் வரை நாம் அதிகமான நேரத்தைக் கழிக்கும் இடங்களும், நாம் உறவுகளை உருவாக்கிக்கொள்ளும் இடங்களும் எவைஎவை என்று பார்த்தால், முதலில் வீடு. அடுத்து பள்ளி, கல்லூரி. பின்னர்தான் மற்றவை.

பல வீடுகளில் பெரியவர்களுக்கும் சிறுவர்களுக்கும் இடையே உரையாடல்களே இல்லை. வீட்டுக்குள் 'பெரிசு' நுழைந்ததும், ஸ்விட்ச் போட்ட மாதிரி வீடே ஆப் ஆகிவிடுகிறது; அல்லது, ஆன் ஆகிவிடுகிறது.

பல சந்தர்ப்பங்களில், அதிகாரத்தின் அடையாளமாகவே பேச்சு கருதப்படுகிறது. யார் பேசலாம், யார் பேசக் கூடாது, எப்போது பேசலாம், எப்போது கூடாது என்பதை அதிகாரமே தீர்மானிக்கிறது. இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் மௌனங்கள், சம்மதத்தின் அறிகுறியாக இல்லாமல், அடிமைத்தனத்தின், ஆற்றாமையின், எதிர்ப்பின் அடையாளங்கள் ஆகிவிடுகின்றன.

குழந்தையின் ஆரம்ப மழலைப் பேச்சுக்கு அத்தனை ஆனந்தப்படுகிறோம். அதே குழந்தை நர்சரி பள்ளியில் நுழைந்ததுமே, கையைக் கட்டி வாயைப் பொத்தி, பேசாமல் ஓரிடத்தில் உட்கார்வதற்குத்தான் கற்றுத் தரப்படுகிறது. பேச்சின் மீதான அதிகாரம், அந்த நொடியில் தொடங்கிவிடுகிறது.

எங்கே விழுந்துவிடுமோ என்று நம்மைக் கலவரப்படுத்தியபடி கைகளை வீசி, ஒவ்வொரு அடியையும் தட்டுத் தடுமாறி எடுத்து வைத்து நடக்கக் கற்றுக்கொண்ட குழந்தைக்கு அடுத்து ஓடுவதும் எளிதானபோது, பள்ளிக்கூடத்தில் 'அங்கே இங்கே ஓடாமல், ஓரிடத்தில் உட்கார்' என்று மிரட்டி, அதன் உடல்மொழி மீதான நம் அதிகாரத்தைத் தொடங்கிவிடுகிறோம்.

வீட்டிலும் பள்ளியிலும் நம் சிறுவர்கள் எப்போது பேசலாம், எப்படிப் பேசலாம், எவ்வளவு பேசலாம் என்பதை அவர்கள் பேசுவதற்கு முன்பாகவே நிர்ணயித்துவிடுகிறோம். இந்த நிர்ணயத்தின் அடிப்படை, 'உனக்கு என்ன தேவை என்பது (உன்னைவிட) எனக்கு நன்றாகத் தெரியும்' என்பதுதான்.

இந்த அடிப்படை முற்றிலும் தவறானது அல்ல; அதே சமயம், முற்றிலும் சரியானதும் அல்ல. ஒரு குறிப்பிட்ட வயது வரைதான் ஒரு குழந்தை, தன் தேவை என்ன என்பதை முழுமையாகத் தானே உணர முடியாமலோ, உணர முடிந்தாலும் உணர்த்த முடியாமலோ இருக்கும்.

குழந்தை சிறுவனாகவும் சிறுமியாகவும் வளர்ச்சி அடையும்போது, தன் தேவை என்ன என்பதைத் தானே கண்டறியவும், தெரிவிக்கவும், அடையவும் விரும்பத் தொடங்குகிறார்கள். இந்தக் கட்டத்தில்தான் பெரியவர்களின் அணுகுமுறையில் மாற்றம் தேவைப்படுகிறது.

அதிகாரம் செலுத்துபவர்கள் என்கிற பாத்திரத்திலிருந்து தங்களைத் தாங்களே பெரியவர்கள் விடுவித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. சிறுவர்களின் துணைவர்களாக (கம்பேனியன்ஸ்), உதவியாளர்களாக (பெசிலிடேட்டர்ஸ்), தோழர்களாக (காம்ரேட்ஸ்) தங்களை

அப்பாக்களும் அம்மாக்களும் அத்தைகளும் மாமாக்களும், சித்தப்பா, பெரியப்பாக்களும், ஆசிரியர்களும் இப்போது வடிவமைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

பெரியவர்கள் தன் மீது அன்பு செலுத்துகிறார்களா, அதிகாரம் செலுத்துகிறார்களா என்பதை ஒவ்வொரு சிறுவனும் ஒவ்வொரு சிறுமியும் ஒற்றை உரையாடலிலேயே அடையாளம் கண்டுகொண்டு விடுவார்கள் என்பதை மறக்க வேண்டாம். அந்த அடையாளம்தான், தொடர்ந்து இருவருக்குமான உறவைத் தீர்மானிக்கப் போகிறது.

உறவாடலைத் தீர்மானிக்கும் உரையாடல்கள் எப்படிப்பட்டவையாக இப்போது இருக்கின்றன?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. நீங்கள் நிறையப் பேசுகிறவரா? குறைவாகப் பேசுகிறவரா? உங்களைப் பற்றிய உங்கள் கணிப்பு என்ன?
2. உங்களைப் பற்றி இதே விஷயத்தல் மற்றவர்களின் கணிப்பு என்ன என்பது உங்களுக்குத் தெரியுமா?
3. பேசியிருக்கவே கூடாது என்றோ, பேசாமல் இருந்திருக்கக் கூடாது என்றோ பின்னர் வருத்தப்பட்ட தருணங்கள் ஏதேனும் உண்டா?
4. பேசாதே என்று குழந்தைகளை, சிறுவகளை எந்தெந்தச் சமயங்களில் தடுத்திருக்கிறீர்கள்?
5. பேசு என்று எந்தெந்தச் ச்மயங்களில் அவர்களை ஊக்குவித்திருக்கிறீர்கள்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை.. உங்களுடையவை!

அத்தியாயம் 38

# உன்னை விட எனக்கு அதிகம் தெரியும்...

உரையாடல் இல்லாத வாழ்க்கை, உப்பு இல்லாத சமையலைப் போன்றது.

உணவில் உப்பின் அளவைச் சரியான விகிதத்தில் சேர்க்கத் தெரிவது போலத்தான், வாழ்க்கையில் உரையாடலின் அளவையும் தீர்மானிக்கக் கற்க வேண்டும். ஜெர்மன் நாடக ஆசிரியர் பெர்டோல்ட் பிரெக்ட்டின் ‘காகேசியன் சாக் சர்க்கிள்’ நாடகத்தின் இறுதிக் காட்சியில் நீதிமன்றம் முன்பு வரும் பல வழக்குகளல் ஒன்று, விவாகரத்து வழக்கு.

விவாகரத்து கோருபவர்கள் ‘இன்னிக்கோ நாளைக்கோ சாகக் கூடிய வயதில்’ இருக்கும் முதிய தம்பதி. முப்பதாண்டு திருமண

வாழ்க்கைக்குப் பிறகு எதற்காக இப்போது விவாகரத்து கேட்கிறாய் என்று நீதிபதி விசாரப்பார். ‘இவ தினமும் ஒரே மாதிரி சமைக்கிறா. நாக்கு செத்துப்போய்விட்டது’ என்பான் கணவன். ‘முப்பது வருஷத்துல என்கிட்ட மொத்தமா முப்பது வார்த்தைதான் இவன் பேசியிருப்பான்’ என்பாள் மனைவி.

ஒருவரோடொருவர் பேசிக்கொள்வது என்பது எவ்வளவு முக்கியமானது? பல கணவர்கள், மனைவிகளிடம் பேசுவதல்லை. அப்பா அம்மாக்கள் குழந்தைகளுடன் பேசுவதில்லை. இவர்களுக்கிடையே சண்டைகள் ஏற்பட்டு, அதனால் பேசாமல் இருக்கிறார்கள் என்பது அல்ல. பேசாமல் இருப்பதனால்தான் சண்டைகளே ஏற்படத் தொடங்கும்.

பல குடும்பங்களில் ஒருவர் மற்றவருடன் பேசிக்கொள்வது என்பது தேவை கருதிய மிகக் குறைந்தபட்சப் பேச்சாக இருக்கிறது. ‘இன்னும்

கொஞ்சம் சாம்பார் ஊத்து’, ‘இன்னும் கொஞ்சம் பொரியல் வைக்கட்டுமா?’ ‘வேண்டாம், போதும்’. ‘என் செல்போனைப் பாத்தியா?’ ‘இஸ்திரி துணியில என் ப்ளூ சுரிதாரைக் காணோமே?’... இதற்கு மேல் உரையாடல்கள் இருப்பதில்லை.

இதே உரையாடல்கள் சற்று கூடுதலாக இருந்தால், அவை பேசியிருக்க வேண்டாதவையாக அமைந்துவிடுவதும் நடக்கிறது.

‘இன்னும் கொஞ்சம் சாம்பார் ஊத்து. அது ஒண்ணுதான் சுமாரா இருக்கு!’ ‘இன்னும் கொஞ்சம் பொரியல் வைக்கட்டுமா?’ ‘வேண்டாம். போதும். போட்டதையே சாப்பிட முடியாம திணறிட்டு இருக்கேன். சகிக்கல!’ ‘என் செல்போனைப் பாத்தியா?’ ‘வழக்கம் போல டாய்லெட்லயே வெச்சுட்டு வந்திருக்கே. அங்ககூடப் போய் எவன்கிட்ட என்னதான் பேசுவியோ?’ இப்படி சின்னச் சின்ன விஷயங்களைக்கூட பரஸ்பர விரோதத்துக்கான விஷயமாக மாற்றக்கொள்ளும் வல்லமையை நம் உரையாடல்களில் காட்டுகிறோம். அன்றாடம் நமக்கும் குழந்தைகளுக்கும், நமக்கும் நம் வயதினருக்கும் நடக்கும் சண்டைகளில் பெரும்பாலானவை, உரையாடல் உளறல்களாலேயே ஆரம்பித்து, வளர்ந்து முற்றி விடுகின்றன.

குறிப்பாக, குழந்தைகளிடம் உரையாடும்போது 'எனக்கு எல்லாம் தெரியும்', 'எனக்கு உன்னைவிட அதிகமாகத் தெரியும்' என்ற இரு மனோபாவங்களே பெரியவர்களின் பேச்சில் ஆதிக்கம் செலுத்துகின்றன. நமக்கு அதிகமாகத் தெரியும் என்பது நாம் சொல்லாமலே சிறுவர்களுக்குத் தெரிந்த விஷயம்தான். அப்படித்தான் எல்லா சிறுவர்களும் ஒரு குறப்பிட்ட வயது வரை நிஜமாகவே நம்புகிறார்கள். நாமே அதை அடிக்கடி சொல்லிக்காட்டும்போதுதான் அவர்களுக்கு இதைப்பற்றிய அவநம்பிக்கையே தொடங்குகிறது.

'எனக்கு உன்னைவிட அதிகமாக எல்லாம் தெரியும். எனவே, நான் சொன்னதற்குக் கீழ்ப்படி' என்ற அதிகார மனோபாவம் சிறுவர்களுக்கு குறப்பாக, டீன் ஏஜ் வயதினருக்குப் பெரும் எரிச்சலை ஏற்படுத்தக்கூடிய மனோபாவம். வீட்டுக்கு வெளியே விரியத் தொடங்கியிருக்கிறது அவர்கள் உலகம். அதில் பள்ளி, கல்லூரி நண்பர்கள், ஆசிரியர்கள், மீடியா என்று சரியோ தவறோ தகவல்களைப் பெற ஏராளமான சாத்தியங்கள் அவர்களுக்கு ஏற்பட்டுவிட்டன.

இந்தத் தருணத்தில் 'எனக்கு உன்னைவிட வாழ்க்கையைப்பற்றி அதிகமாகத் தெரியும்' என்ற மனோபாவத்தில் நாம் செயல்படும்போது, இளைஞர்கள் மெள்ள மெள்ள நம்மிடம் இருந்து விலகத் தொடங்குகிறார்கள். இந்த விலகலை விரைவுபடுத்தி அதிகரிப்பதில் முக்கியப் பங்கு வகிப்பவை இரு தரப்பும் ஒருவரோடொருவர் பேசியிருக்க வேண்டாத பேச்சுக்களும் பேசத் தவறிய பேச்சுக்களும்தான்.

அம்மாவின் சமையலைப் போல சுவையான சமையல் வேறு எந்த ஓட்டலிலும் கிடைப்பது இல்லை என்பது தெரிந்த பிறகும்கூட, அம்மாவிடம் சமையலைப்பற்றிப் பாராட்டாக ஒரு வாரத்தைகூடச் சொல்லாத மகன்/ள்களாகவே நாம் இருக்கிறோம். நம் மகன்/ள்களும் இருக்கிறார்கள்.

தனக்கு ஒரு புதிய செல்போன் வாங்கிய பிறகு, அதை மகனிடம் காட்டும் அப்பாவுக்கு, வாங்குவதற்கு முன்னால் மகனிடம்

ஆலோசனை கேட்டிருக்கலாமே என்பது தோன்றுவதில்லை. எந்த பிராண்ட் செல்போனில் என்ன வசதி, என்ன சிக்கல் இருக்கிறது என்பதைப்பற்றி எல்லாம் தன்னைவிடக் கூடுதல் தகவல்கள் தன் மகனுக்குத் தெரிந்திருக்கும் என்பது அப்பாக்களுக்கு உறைப்பதே இல்லை.

இந்தச் சிக்கல்களுக்கு எல்லாம் காரணம், குடும்பத்தில் ஒருவருக்கொருவர் இடையில் போதுமான உரையாடல்கள் இல்லை; இருக்கும் உரையாடல்களும் உறவுகளைப் பலப்படுத்துவதற்குப் பதில் பலவீனப்படுத்தவே அதிகம் வேலை செய்கின்றன. ஒவ்வொரு உரையாடலுக்கும் பின்னால், அவரவருடைய தனிப்பட்ட ஈகோதான் எப்போதும் ஆதிக்கம் செலுத்துகிறது என்பதுதான் உரையாடலின் தொனிகள் தப்புத்தப்பாக அமைவதற்குக் காரணம்.

மனிதர்கள் ஒருவரோடொருவர் உறவாடும் ஒவ்வொரு நொடியும் என்னால் மற்றவரின் வாழ்க்கையைச் செழுமைப்படுத்தப்படும் என்று நம்பவே ஆசைப்படுகிறோம். மற்றவரிடம் நாம் கற்றுக்கொள்கிறோம் என்ற உணர்வு அவ்வளவு எளிதில் நமக்கு வருவதில்லை. மூத்தவர் இளையவர், ஆண் பெண், முதலாளி ஊழியர், பணக்காரர் ஏழை, ஆசிரியர் மாணவர், கணவன் மனைவி, அரசியல் தலைவர் தொண்டர் என்ற அடிப்படைகள் அத்தனையையும் கற்பிப்பவர் கற்பவர் என்பதாக அர்த்தப்படுத்திக்கொண்டு இருக்கிறோம்.

இருவருமே கற்பவர், இருவருமே கற்பிப்பவர் என்ற பார்வைக்கு ஆதாரமான தேவை... இருவரும் அவரவருக்குத் தெரிந்ததை மற்றவருடன் பகிர்ந்துகொள்கிறோம் என்ற உணர்ச்சிதான்.

அதை எப்படி அடைவது?

## இன்றைய ஹோம் வொர்க்:

1. நீங்கள் உறவாடுகிறவர்களிடம் சிலவற்றைப் பேசாமல் இருந்ததால் உருவான சண்டைகள் எவை?
2. நீங்கள் உறவாடுகிறவர்களிடம் சிலவற்றைப் பேசியதால் உருவான சண்டைகள் எவை?
3. இந்தச் சண்டைகளைத் தீர்த்துக்கொள்ள, பின்னர் எப்படிப்பட்ட

பேச்சுக்களில் ஈடுபட்டீர்கள் என்பதை நினைவுகூர முடியுமா?

4. உன்னைவிட எனக்கு அதிகம் தெரியும் என்ற தொனியில் யாரோடெல்லாம் பேசுவது உங்கள் வழக்கம்?
5. என்னைவிட இவருக்கு அதிகம் தெரியும் என்று நீங்கள் யார் யாரைக் கருதுகிறீர்கள்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை...உங்களுடையவை!

அத்தியாயம் 39

# பகிர்ந்தாலும் குறையாதவை

பகிர்தல் என்பதுதான் மனித வாழ்க்கையின் மிக அடிப்படையான ஆதாரம். சக மனிதர்களுடன் பகிர்தல் இல்லாமல், எந்த மனிதரும் உயிர் வாழ முடியாது. உணவு, உடை, வீடு, கலை, இலக்கியம் எல்லாமே ஒருவர் உழைப்பை மற்றவருடன், ஒருவர் சிந்தனையை மற்றவருடன் பகிர்ந்துகொள்வதால் மட்டுமே நமக்குக் கிட்டுகின்றன.

இத்தனை அடிப்படையான, கூடி வாழ்தலுக்கு முக்கியத் தேவையான இந்தப் பகிர்தல் உணர்ச்சியை ஒளித்து வைத்துவிட்டு, சக மனிதருடன் சம்பந்தம் இல்லாதவர்கள் போல தனித் தனித் தீவுகளாக நாம் வாழ முயற்சி செய்வதுதான், எல்லாச்

சிக்கல்களையும் நமக்கு ஏற்படுத்துகிறது.

ஒருவர் தனது உழைப்பையோ, சிந்தனையையோ அடுத்தவருடன் பகிர்ந்துகொள்ள வேண்டுமானால், அதற்கான காரணம் அன்பு, பணம் அல்லது அதிகாரம்... இந்த மூன்றில் ஒன்றுதான்.

பணமும் அதிகாரமும் ஒன்றுதான். பணம் அதிகாரத்தைத் தருகிறது; அதிகாரம் பணத்தை அடைய உதவுகிறது. அறிவும் திறமையும், பணத்தையும் அதிகாரத்தையும் அடைய உதவக்கூடியவை; என்றாலும், அவற்றைப் பணத்தையும் அதிகாரத்தையும் கொண்டு வாங்கிவிடலாம் என்று நடைமுறை உலகம் காட்டுகிறது.

பணத்தாலும் அதிகாரத்தாலும் எல்லாச் சமயங்களிலும் எல்லாவற்றையும் வாங்கிவிட முடியாது என்பது தெரிந்தாலும், பெருவாரியாக அவற்றைச் சார்ந்தே நம் சமூகம் இயங்குகிறது. பணம், அதிகாரம் இரண்டின் எல்லையும் முடியும்போதுதான், சக மனிதர்களின் உதவியைப் பெறுவதற்கு அன்பு என்பதும் தேவை என்பதை உணர்கிறோம்.

அந்தக் கட்டத்திலும், அன்பை ஒரு மெய்யான உணர்ச்சியாகக் கருதாமல், வெறும் கருவியாகப் பயன்படுத்துபவர்கள் நம்மில் உண்டு. ஆனால், அப்படிப்பட்ட அணுகுமுறைகள் விரைவில் அம்பலப்பட்டுப் போய்விடும்.

பகிர்தல் என்பது, மெய்யான அன்பின் இன்னொரு வெளிப்பாடாக இருக்க வேண்டும். பகிர்தல் உணரச்சிக்கு எதிரியாக இருப்பது, 'இன்செக்யூரிட்டி' எனப்படும் நமது பாதுகாப்பற்ற உணர்ச்சிதான்.

நம்மிடம் உள்ளதை மற்றவருடன் பகிர்ந்துகொண்டால், நாளை நமக்கு இல்லாமல் போய்விடுமோ என்கிற 'இன்செக்யூரிட்டி'யைக்கூட ஓரளவு புரிந்துகொள்ளலாம். குறைந்தபட்சம், நம் தேவைக்கு மேல் உள்ளதையாவது பகிர்ந்துகொள்ளத் தயாரான மனநிலைக்கு அடுத்துச் செல்லும் வாய்ப்பாவது இதல் இருக்கிறது.

எத்தனை பகிர்ந்துகொண்டாலும் குறையாதவை என சில

விஷயங்கள் உள்ளன. அவை அன்பு, அறிவு, மகிழ்ச்சி! சொல்லப்போனால் இந்த மூன்றும், பகிர்வதால் இன்னும் பெருகக்கூடியவை.

பகிர்ந்துகொள்வதால் குறைவது பணம், பொருள் என்று பயந்து, அவற்றைப் பகிராமல் இருக்கிறோம். பகிர்ந்துகொண்டால் குறைவது இன்னொன்றும் இருக்கிறது. அது குறைவது நமக்கு நல்லதுதான். அதுதான் துக்கம்!

பகிர்ந்தால் குறையக்கூடிய துக்கத்தையும், பகிர்ந்தால் பெருகக்கூடிய அன்பு, அறிவு, மகிழ்ச்சி மூன்றையும் பகிரவிடாமல் நம்மைத் தடுப்பது எது?

நம் அறியாமை வெளிப்பட்டுவிடுமோ என்கிற பயமும் நம் அதிகாரம் குறைந்துவிடுமோ என்கிற பயமும்தான். இந்தப் பயங்கள் நமக்கு எல்லா சக மனிதர்களிடமும் இருக்கின்றன.

மேலதிகாரி, தன் கீழ் பணியாற்றும் ஊழியரிடம் தன் அறியாமை வெளப்பட்டால், தன் அதிகாரம் பலவீனமாகிவிடும் என்று அஞ்சுகிறார். காதலனுக்கும் காதலிக்குமான உறவிலும் இத்தகைய பயம் இருக்கத்தான் செய்கிறது. அப்பாவும் அம்மாவும் தங்கள் அறியாமையைக் குழந்தைகளிடம் வெளிப்படுத்திக்கொள்ளத் தயங்குகிறார்கள். தன்னைப் பற்றிய இன்னொருவரின் மதிப்பீடு குறைந்துவிட்டால், அதையட்டி தன்னிடம் காட்டும் அன்பும் குறைந்துவிடும் என்று பயப்படுகிறோம்.

இப்படிப்பட்ட பயங்கள் இல்லாத உறவாக, நட்பை மட்டுமே சொல்லலாம். காரணம், நட்பின் அடிப்படையே சமத்துவம்தான். நட்பின் அடிப்படையே அறிவை மட்டுமல்ல, அறியாமையையும் பகிர்ந்துகொள்வதுதான். இருவருக்கும் ஒரு விஷயம் தெரியும் என்பதைப் போலவே, இருவருக்குமே ஒரு விஷயம் பற்றித் தெரியாது என்பதுகூட நண்பர்களின் நெருக்கத்தை அதிகப்படுத்துகிறது.

ஒருவருக்குத் தெரிந்ததை மற்றவருக்குச் சொல்வதும், தெரியாததைக் கேட்பதுமாக நட்பில் இருக்கும் பகிர்தல்தான், நட்பை மேலும் மேலும் வலுப்படுத்துகிறது. பரஸ்பர நம்பிக்கை இந்த நட்பின் அடித்தளமாகிறது.

ஒரு நல்ல நட்பில் இருக்கும் இதே பகிர்தலை நம் இதர உறவுகளிலும் கொண்டுவந்தால் எத்தனை ஆனந்தமாக இருக்கும் என்று கற்பனை செய்துபாருங்கள். பெற்றோரும் குழந்தைகளும், ஆசிரியர்களும் மாணவர்களும், கணவர்களும் மனைவிகளும், நிர்வாகிகளும் அலுவலர்களும் சமமான நண்பர்களாக இருக்கவிடாமல் தடுப்பது எது?

இந்த உறவுகளில் இருக்கும் அதிகார உணர்ச்சிதான். பகிர்தலைத் தடுக்கிறது; அல்லது, கட்டாயப்படுத்துகிறது. இயல்பாக இருக்கவிடுவதில்லை. பெற்றோரின், ஆசிரியர்களின் அதிகார உணர்ச்சிதான் ஒவ்வொரு குழந்தையையும் மனிதனாக வளரவிடாமல், அடிமையாகவோ, முரடனாகவோ மட்டுமே உருவாக்குகிறது.

அடிமைகளை நமக்குப் பிடித்திருக்கிறது. முரடர்களுக்குப் பயப்படுகிறோம். இப்படி இருவிதமாகவே குழந்தைகளை உருவாக்கிவிட்டு, மனிதர்களாக மலர விரும்பும் குழந்தைகளைப் புரிந்துகொள்ள முடியாமல் தவக்கிறோம். ஒரே நபருக்குள் இருக்கும் இந்த மூவரும் எப்போதும் உள்ளுக்குள்ளேயே போராடிக்கொண்டு இருக்கிறார்கள்.

இதிலிருந்து மீள்வதற்கான ஒரே வழி, ஒவ்வொரு கட்டத்திலும் தன்னைப் போல் பிறரை நினைக்கும் உணர்ச்சியான 'எம்ப்பதி'யை வளர்ப்பதுதான். அப்போதுதான் பிறருடைய சந்தோஷங்களையும் புரிந்துகொள்ள முடியும்; துக்கங்களையும் உணர முடியும்.

எம்ப்பதி மலர்ந்த மனத்திலிருந்து எழும் ஒவ்வொரு உரையாடலும் இன்னொருவருடனான தகவல் தொடர்பை எளிதாக்குகிறது. இன்னொருவர் சொல்வது என்ன என்பதைப் புரிந்துகொள்வதும், தனக்கு என்ன தேவை என்பதை மற்றவருக்குச் சொல்வதும் எளிதாகிறது.

இனி, ஒவ்வொரு நெருக்கடியையும் சமாளிப்பதும், வெவ்வேறு உணரச்சிகளுக்கு ஈடுகொடுப்பதும் சுலபம்தான். டீன் ஏஜ் என்பது நெருக்கடிகளும் உணர்ச்சி மோதல்களும் நிரம்பிய பருவமல்லவா!

## இன்றைய ஹோம் வொர்க்

1. பணம், அதிகாரம் இரண்டில் ஒன்றைக் காட்டி, நீங்கள் சாதித்த விஷயங்கள் என்னென்ன?
2. இவற்றைக் காட்டி உங்களிடம் மற்றவர்கள் சாதித்துக்கொண்டவை என்ன?
3. இதே விஷயங்களை அன்பால் சாதித்திருக்க முடியுமா?
4. உங்களிடம் யார் யார் காட்டும் அன்பு எப்போதெல்லாம் பொய்யானது என்பதை உங்களால் அடையாளம் காண முடியுமா?
5. உங்களுக்குள்/உங்களைச் சுற்றியிருப்பவர்களுக்குள் இருக்கும் அடிமைத்தனம் எத்தனை சதவிகிதம்? முரட்டுத்தனம் எத்தனை சதவிகிதம்? மனிதத்தன்மை எத்தனை சதவிகிதம்?

பதில்கள் மற்றவர்களுக்காக அல்ல.
உங்களுக்கானவை... உங்களுடையவை!

அத்தியாயம் 40

# அறிவு எதுவரை? உணர்ச்சி எதுவரை?

நெருக்கடிகள், சிக்கல்கள், பிரச்சினைகள் என்று எந்த பெயரிட்டு அழைத்தாலும் சரி, அவை நம் வாழ்க்கையில் எப்போதும் வருவதும் போவதுமாகத்தான் இருக்கின்றன. அது வாழ்க்கையின் இயல்பு.

பிரச்சினைகளில் சின்னச் சின்ன விஷயங்கள் உண்டு. பெரிய, பிரும்மாண்டமானவையும் உண்டு. எது சிறியது எது பெரியது என்பது கூட அதை சமாளிக்கும் நம் ஆற்றலைப் பொறுத்ததாகத்தான் இருக்கிறது.

ஒவ்வொரு முறை ஒரு பிரச்சினையை சந்திக்கும்போதும், ஏதோ ஒரு விதத்தில் அதற்கான தீர்வையும் நாம் உடனடியாகவோ மெல்ல

மெல்லவோ உருவாக்கிக் கொள்கிறோம். அடுத்த முறை அதே பிரச்சினை வரும்போது நாம் முதல்முறை திணறியது போலத் திணறுவதில்லை.

பஸ்ஸிலிருந்து இறங்கியதும் பஸ்ஸின் முன்பக்கமாகப் போய் சாலையைக் கடக்க முற்பட்டால், திடீரென்று பஸ்ஸின் பக்கவாட்டிலிருந்து வரும் வாகனங்களில் அடிபடும் ஆபத்தை சதிக்கிறோம். பஸ்ஸின் முன்பக்கமாக சாலையைக் கடக்க முற்படுவது தவறு. பஸ்ஸின் பக்கவாட்டிலிருந்து வரும் வாகனம் கண்ணுக்குத் தெரியாமல் பஸ்சே மறைத்திருக்கும் என்பது அப்புறம்தான் உறைக்கிறது. அடுத்த முறைபஸ்ஸிலிருந்து இறங்கியதும், அதன் பின்பக்கமாக சென்று சாலையைக் கடக்க முயற்சிக்கும்போது எளிதாக இருக்கிறது.

ஒவ்வொரு நிகழ்விலும் கற்றுக் கொள்வதும் அப்படிக் கற்றதை அடுத்த முறை பயன்படுத்திக் கொள்வதையும்தான் அனுபவ அறிவு என்று சொல்கிறோம். பல முறை தப்புகள் நிகழலாம். ஆனால் ஒவ்வொரு முறையும் அது புதிய தப்பாக இருக்கவேண்டும். ஒரே தப்பைத் திரும்பத் திரும்பச் செய்துகொன்டிருந்தால், நாம் எதையும் கற்கவே இல்லை என்றுதான் அர்த்தம்.

பெரியவர்களுக்கும் சிறியவர்களுக்கும் என்ன வித்யாசம்? வயதா? அது மேலெழுந்தவாரியாகத் தெரியும் வேறுபாடு மட்டும்தான். அனுபவம்தான் அசலான வித்யாசம். எந்தத் தப்பிலிருந்தும் எந்த நிகழ்விலிருந்தும் எந்த பாடத்தையும் கற்கவில்லை என்றால் வயதாகியிருக்கலாம்; அனுபவம் இல்லை என்றுதான் அர்த்தம். அதனால்தான் சின்ன வயதிலேயே அனுபவசாலிகளையும் வயதாகியும் புத்தி வராதவர்களையும் விதிவிலக்குகளாக அவ்வப்போது சந்திக்கிறோம்.

வயது ரீதியாக குழந்தைப்பருவம் எல்லாவற்றையும் பார்த்துக் கற்கத்தொடங்கும் பருவம். அடுத்த கட்டமான டீன் ஏஜ் பருவத்தில் பார்த்தல், செய்துபார்த்தல், கேட்டுக் கொள்வது, எதிர்கேள்வி கேட்பது, என்றெல்லாம் அனுபவங்களை சேகரிக்கும் பருவம். இந்தப் பருவங்கள் எல்லாமே சின்னதாகவும் பெரிதாகவும் தப்புகள் செய்து அவற்றிலிருந்து கற்றுக் கொண்டு திருத்திக் கொண்டு வளர்கிற பருவங்கள்.

தப்புகளைக் குறைவாக வைத்துக் கொள்ள ஒரே வழி இன்னொருவர் தப்புகளிலிருந்து நாம் கற்றுக் கொள்வதுதான். நமக்கு முன்னால் இதே வயதைக் கடந்து போனவர்களின் அனுபவங்கள் நமக்கு பயன்படுவது என்பது மிக முக்கியமாக இதில்தான்.

டீன் ஏஜில் ஒவ்வொரு விஷயமும் சுவையும் சிக்கலும் நிரம்பியதாகத்தான் தெரிகிறது. சுவையை உணர உணர எப்படியாவது சிக்கலை அவிழ்த்துவிடவேண்டும் என்ற துடிப்பு அதிகமாகிறது. சுவையை உணராதபோது, சிக்கல் மட்டுமே பிரும்மாண்டமாகத் தெரிகிறது. படிப்பு முதல் ஆண்-பெண் உறவாடல் வரை அத்தனையிலும் இதுதான் நிலைமை.

சுவையும் சிக்கலும் கலந்ததாக ஒவ்வொரு விஷயமும் இருக்கும்போது, அதை எதிர்கொள்ளும் ஒவ்வொரு நொடியும் உணர்ச்சிக் கொந்தளிப்பாகத்தான் இருக்க முடியும். டீன் ஏஜில் உணர்ச்சிகளின் கொந்தளிப்புக்கு பஞ்சமே இல்லை.

நான் ஒண்ணும் சிறுமி அல்ல; நான் பெரிய பெண் என்ற தன் மதிப்பு உணர்ச்சி மேலோங்கியிருக்கும் தருணம் இது. மீதி அத்தனை உணர்ச்சிகளையும் பல மடங்கு கூடுதலாக்கும் வல்லமை இந்த உணர்வுக்கு இருக்கிறது. நான் ஒண்ணும் குழந்தை இல்லை, இதை என்ஜாய் செய்யாமல் இருக்க.... நான் ஒண்ணும் சின்னப் பையன் இல்லை, இதை சகித்துக் கொள்ள... என்று எல்லா உணர்ச்சிகளையும் கூடுதலாக்கும் மன நிலையே இருக்கும்.

வாழ்க்கை உணர்ச்சிகளின் கலவை. பாசிட்டிவான உணர்ச்சிகள், நெகட்டிவான உணர்ச்சிகள் இரண்டும் நிரம்பியவை. மகிழ்ச்சி, ஆச்சரியம், பரபரப்பு எல்லம் பாசைட்டிவானவை. வாழ்க்கையை இனிமையாக்குபவை. கோபம், வருத்தம், பொறாமை, எரிச்சல் எல்லாம் நெகட்டிவானவை. வாழ்க்கையின் இனிமையை நீர்த்துப் போகச் செய்பவை.

நமக்கு இனிமைதான் வேண்டும். இனிமை மட்டும்தான் வேண்டும் என்பதுதான் நம் விருப்பம். யாருக்குத்தான் வலியைப் பிடிக்கும்? துயரத்தைப் பிடிக்கும்? சுயபரிதாபத்தில் இருப்பவர்கள் மட்டும்தான் துயரத்தைக் கொண்டாடிக் கொன்டிருப்பார்கள். மேலும்

மேலும் துயரத்தில் தங்களை அமிழ்த்திக் கொண்டு உயிரோடே தற்கொலை செய்து கொள்ளும் முயற்சி அது. ஆரோக்கியமான மனதுடையவர்கள் துயரத்தைப் பற்றி ஆழமாகவும் விரிவாகவும் பேசுவதெல்லாம், அதைப் புரிந்துகொண்டு தவிர்ப்பதற்கான வழியை தேடித்தான்.

இங்கேதான் அறிவின் துனை நமக்கு தேவைப்படுகிறது. உணர்ச்சிகள் இல்லாத அறிவாலும் பயனில்லை. அறிவை பயன்படுத்தாத உணர்ச்சிகளாலும் பயனில்லை. நமக்குத் தேவை உணர்ச்சிகளை மதிக்கிற அறிவும், அறிவை நிராகரிக்காத உணர்ச்சிகளும்தான்.

அன்றாடம் நாம் சந்திக்கும் ஒவ்வொரு முரண்பாடும் ஒரு பக்கம் நம் உணர்ச்சியைக் கிளறிவிடுகிறது; இன்னொரு பக்கம் நம் அறிவைத் தூண்டிவிடுகிறது. முரண்பாட்டை தீர்த்துக்கொள்ளமுடியாமல் நம் அறிவை நொந்துகொண்டு உணர்ச்சிவசப்படும் தருணங்கள் ஏராளம்.

## இன்றைய ஹோம் வொர்க்:

1. உங்களைப் பொறுத்த மட்டில் சின்னப் பிரச்சினைகள் என்பவை எவை? பெரிய பிரச்சினைகள் என்பவை எவை?
2. முதல் முறை இவற்றைத் தீர்க்கும்போதும் எந்த அளவு தடுமாறியிருக்கிறீர்கள்? அடுத்த முறை எளிதாக இருந்திருக்கிறதா?
3. உங்களை விட வயதில் சின்னவராக இருந்தும் அனுபவம் அதிகமாக இருப்பவர் என்று யாரையாவது சந்தித்ததுண்டா?
4. உங்களை விட வயதில் பெரியவராக இருந்தும் அனுபவக் குறைவால் அவதிப்படுபவர் யாரையேனும் சந்தித்ததுண்டா?
5. டீன் ஏஜில் உங்களுக்கு சுவையும் சிக்கலும் கலந்ததாக இருந்த விஷயங்கள் எவையெவை என்று பட்டியலிட முடியுமா? எது மிஞ்சியது சுவையா? சிக்கலா?

**பதில்களுடன் தயாராகுங்கள்.**

**இரண்டாம் பாகத்தில் சந்திப்போம்.**

**மனதில் அன்பும் அறிவில் தெளிவும் நம் மகிழ்ச்சியைப் பெருக்கட்டும்**





செக்ஸைப் பற்றிக் குழந்தைக்கு எப்போது சொல்லலாம் என்ற கேள்வி எழுந்ததுமே நம் மனதில் ஒரு நெருடலும், பயமும் தயக்கமும் தோன்றுவதற்கு என்ன காரணம்? செக்ஸ் என்பதற்கு நம் மனதில் வைத்திருக்கும் தவறான அர்த்தம்தான்! செக்ஸ் என்றதும், ஆண்-பெண் உடல் உறவுகொள்ளும் பிம்பம்தான் நம் மனதில் தோன்றுகிறது.

ஆனால், செக்ஸ் என்பது பால் அடையாளம். தான் யார் என்பதை ஒவ்வொரு மனிதரும் உணரச் செய்யும் அம்சங்களில் ஒன்று.

நம் உடலைப் பற்றி வெட்கப்படவோ, அவமானப்படவோ எதுவும் இல்லை. நம் செய்கைகளில் தான் அவமானமோ பெருமையோ இருக்க முடியும். செயலில் இருக்க வேண்டிய அவமான உணர்ச்சியை உடல் உறுப்பின் மீதே ஏற்றிவைத்து விட்டோம். அதனால்தான் அப்பா லஞ்சம் வாங்குவது அம்மாவுக்கு அவமானமாக இல்லை; குழந்தை ஜட்டி போடாதது அவமானமாக இருக்கிறது!

அறிந்தும் அறியாமலும்

ஞாநி